# நீலாவதி இராம சுப்பிரமணியம் வாழ்க்கை வரலாறு





1913 — தேச விடுதலை, தீண்டாமை
சாதி வேற்றுமை, கலப்பு மணம்
மூட நம்பிக்கை, வரதட்சணை மதுவிலக்கு
பெண்ணடிமை, விதவை மணம்

# நீலாவதி

## இராம சுப்பிரமணியம்

## வாழ்க்கை வரலாறு

1913—1982



ஆக்கியவர், வெளியீட்டாளர் :

S. A. K. K. ராஜு

37, உல்லிக்கான் லேன்

கும்பகோணம்

# நீலாவதி

## இராம சுப்பிரமணியம்

நூற்றாண்டு

(1913-2013)

நினைவாக...

அன்புடன்,




## காணிக்கை

மறக்கமுடியாத எனது முறை மருமகள் அமரர் டாக்டர் திருமதி மணிகுமாரிக்கு இந்நூலைக் காணிக்கை ஆக்குகிறேன்.

S. A. K. K. ராஜு

# பொருளடக்கம்

தவத்திரு
குன்றக்குடி அடிகளார்

குன்றக்குடி
நாள் 15—9—83

# அணிந்துரை

மறைந்த சகோதரி நீலாவதி இராம சுப்பிர மணியம் அவர்களின் வாழ்க்கை வரலாறு புத்த கத்தைப் படிக்கும் வாய்ப்புக் கிடைத்தது. சகோதரி நீலாவதி இராம சுப்பிரமணியம் அவர் களுடைய வாழ்க்கை மூலம் தமிழகம் எந்த அளவு முற்போக்கு திசையில் நகர்ந்தது என்பதை அறிந்துகொள்ள முடிந்தது. தமிழ் நாட்டை இருள் கவ்விச் சூழ்ந்திருந்தபோது பெண்ணடிமைத் தனம், சாதி வேற்றுமை ஆகியவற்றை எதிர்த்துப் போராடிய சகோதரியின் வரலாறு இன்றைய தமிழகத்துக்கும் புத்துணர்வு தரும் என்பதில் ஐயமில்லை. அம்மையார் தொடங்கிவைத்த பணி இன்னும் முடியவில்லை. இனப்பற்றில் வாழ்க்கை யைத் தொடங்கி, தேசியத்தில் மலர்ந்து இலக்கி யத்தில் மணம் வீசி அருளியலில் நிறைவெய்திய அம்மையாரின் வரலாறு ஓர் உயிரின் முழுநிறை வரலாருக விளங்குவதை நூல் விளக்குகிறது.

அம்மையாரவர்கள் எழுதிவைத்திருந்த வர லாற்றுக் குறிப்பில் ''மீண்டும் பிறப்புண்டேல் பிறர் கொடுத்த கஷ்டம் மறக்கவேண்டும்'' என்று எழுதி வைத்திருப்பது அவர் அடைந்த துன்பங் களையும், அத்துன்பங்களை மறப்பதையுமே தன் வாழ்க்கையின் உயர் இலட்சியமாகக் கொண்ட, பண்பையும் விளக்குகிறது. அம்மையார் தம் காலத் தில் உடனிருந்த இராய சொ.—சொ. முருகப்பா ஆகியவர்களுடைய பணிகளைச் சொல்லியிருக்கிற பாங்கு படித்தற்குரியது. இவ்விருவரும் தன வணிகர் நாட்டைச் சீர்திருத்தி, பாலைவனத்தைச் சோலைவனமாக்கிவிட பல எதிர்ப்புச் சக்திகளுக் கிடையில் பாடுபட்டார்கள். வெற்றிப்பாதை அவர்களுக்கு வழி விடவில்லை. சோம்பிக்கிடக்க முடியுமா? என்று கேட்கிருர்கள்.

அம்மையார் சைவமங்கையர் மாநாட்டில் நிகழ்த்திய தலைமை உரை-சாதி ஒழிப்புப்பற்றி நிகழ்த்தியிருக்கிற உரை மிக மிக அருமைப்பாடுடையது தீவிரத்தன்மையுடையதுமாகும். ஐயகோ! அம்மையாரின் உரை இந்த நாட்டுச் சைவர்களின் செவிப்புலனைத் தாக்கவில்லை. அம்மையார் அறுபான் மும்மை நாயன்மார்கள் வரலாற்றைச் சுட்டிக்காட்டி எக்குலத்தோரையும் கோவிலுக்குள் சென்று ஆண்டவனை வழிபட அனுமதிக்க வேண்டும். இல்லாவிட்டால் ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லிக் கழிக்க நினைத்தால் கோவிலுக்குள் இருக்கும் அந்தக்குலச் சாமிகளை (அறுபான்மும்மை நாயன்மார்கள் பல குலத்தவர்கள்) வெளியேற்றிவிடவேண்டும் என்பது விவேகமான உரை. பொழுதுதான் விடியக்காணோம்!

சகோதரியார் இயல்பிலேயே சிந்திக்கும் திறன் பெற்றிருந்தார்கள். அந்தச் சிந்தனையில் பழைமையுமிருந்தது! புதுமையுமிருந்தது! அவர்களுடைய சிந்தனையிற் பிறந்த "தெய்வம் தொழுவதைவிட ஏழைகளுக்கு இரக்கம் காட்டுவதுதான் சிறந்த தொழுகை' "அனாதைகளுக்குத் தொண்டு செய்ய அநேக பிறவிகள் எடுக்க ஆசைப்படுகிறேன்" என்ற சிந்தனைச்சுடர் வரிகள் நமது உள்ளத்தைத் தூண்டி உணர வைக்கின்றன.

"தன் கடமை எது என்பதை உணர்ந்தவர் அறிவாளி. கடமையை எப்படிச் செய்ய வேண்டுமென அறிந்தவர் திறமைசாலி, கடமையைச் செய்பவர் மிக மிக நல்லவர்" என்ற சிந்தனைச்சுடர்களைச் சிந்தித்தலும் அவ்வழி நிற்றலும் தமிழரின் கடமை. இங்ஙனம் கற்றுச் செயற்படுதலே அம்மையாருக்கு நாம் செய்யும் நன்றி! கடப்பாடு!

இந்நூலைச் சிறந்த முறையில் தொகுத்து எழுதியுள்ள ஆசிரியர் கும்பகோணம் S.A.K.K. ராஜு அவர்களுக்கு தமிழகம் கடமைப்பட்டுள்ளது.

—குன்றக்குடி அடிகளார்

# முன்னுரை

எனது சகோதரியார் பொதுத் தொண்டிலீடு பட்டு கடமை உணர்ச்சியோடு பல பணிகளாற்றி யுள்ளார். அன்னாரின் நினைவுக்கறிகுரியாய் அவர் களின் வாழ்க்கை வரலாறு ஒன்றை வெளியிட வேண்டுமென்ற விருப்பத்துடன் இந்நூலை வெளி யிடுகிறேன். இவ்வரலாற்று நூலுக்கு பல ஆதாரங்கள் தேவைப்பட்டன. அவற்றை இயன்ற வரை சேகரித்தும் சகோதரியார் எழுதிவைத் திருந்த சில குறிப்புகளைக் கொண்டும் அவர் குடும்பத்தாரிடம் கேட்டுத் தெரிந்துகொண்ட பல விவரங்களைக் கொண்டும் நூல் தொகுக்கப்பட் டிருக்கிறது.

சகோதரியார் வாழ்ந்த காலம் சுமார் எழுபது ஆண்டுகள். அதில் 15 ஆண்டுகள் இளமைப் பருவம். இறுதியில் 20 ஆண்டுகாலம் சோகச் சூழ் நிலையில் எந்த ஒரு பொது நிகழ்ச்சிகளிலும் ஈடு பாடில்லாமல் தமதில்லத்தில் ஒரு துறவிபோல் காலம் கழிந்தது. மத்தியிலுள்ள 35 ஆண்டுகள் குடும்ப நிர்வாகப் பொறுப்புடன் முழுநேரமும் இடையருது கடமை உணர்ச்சியுடன் பொதுநலத் தொண்டாற்றி வந்திருக்கிருர்கள்.

சகோதரியார் வாழ்க்கையில் உள்ளன்போடு ஈடுபாடு காட்டிய பல பெரியவர்களின் படங்கள் இந்நூலில் இடம் பெறுவது சிறப்புடையதாக இருக்குமென்று கருதி பல படங்கள் இடம் பெற் றிருக்கின்றன.

ரஸிகமணி டி. கே. சி. அவர்களிடம் மிக்க ஈடு பாடுள்ள காரணமாக பல கடிதங்கள் (கிடைத்த வரை) வெளியிடப்பட்டிருக்கிறது.

இவ்வரலாற்று நூல் பெரிதும் தனவணிக நாட்டுச் சூழ்நிலையைப் பெற்றுள்ளதால் அதற்க் கேற்ற முறையில் ஓர் அணிந்துரை இடம் பெறு வதற்கு தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர் களிடம் விருப்பம் தெரிவித்து அடிகளார் மனமு வந்து அதற்கொரு சிறந்த அணிந்துரை அருளிச்

செய்திருக்கிருர்கள். தவத்திரு அடிகளார் அவர்களுக்குப் பணிவுடன் வணக்கம் செலுத்துகிறேன்.

இந்நூல் தொகுத்து வெளியிடப் பெரிதும் அன்போடு எனக்கு உதவிய பேரன்பர் வானதி பதிப்பக அதிபர் திரு. ஏ. திருநாவுக்கரசு அவர்களுக்கு வணக்கமும் நன்றியும் செலுத்தக் கடமைப் பட்டுள்ளேன்.

இவ் வரலாற்று நூலில் குறைகள் காணப்படுமாஞல் அன்பர்களின் மன்னிப்புக்கு உரியவன் என்பதை பணிவுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். வணக்கம்.

கும்பகோணம் S.A.K.K. ராஜு
5-10-1983

## பிழை திருத்தம்

| பக்கம் வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 13-11 | பிரமுகர்களும் | பிரமுகர்களுக்கு ம் |
| 66-27 | மகிபாலாபுரி | மகிபாலபுரி |
| 69-3 | மேகண்ட் | மேற்கண்ட |
| 83-11 | 21-1-23 | 25-1-32 |
| 91-17 | அ. பெ. | அ. லெ. |
| 122-3 | விட்டன் | விட்டாள் |
| ,, -5 | 1-2-82 | 1-3-82 |
| 128-3 | அவர் நான | அவர் நாண |
| 137-8 | கெடுட்த்தான் | கெட்டுத்தான் |
| , -13 | ஒன்றுல் | தென்றுல் |
| 148-29 | பாஷா கவி சேகரர் | பாஷா கவி சேகரர் |
| 159-16 | இருப்தால் | இருப்பதால் |

# திருமதி நீலாவதி
# (இராம சுப்பிரமணியம்)
# வாழ்க்கை வரலாறு

திருமதி நீலாவதி அவர்கள் திருச்சியில் 1913-ம் ஆண்டு ஜனவரி மீ 23உ எனது மூத்த சகோதரியாகப் பிறந்தார். சிறுவயதிலிருந்தே தாய்மொழி தெலுங்காலும் தமிழும் ஆங்கிலமும் பள்ளி கல்லூரிகளில் பயின்று வந்தார். எனது தந்தையாரின் உதவியால் பல புத்தகங்கள் வாயிலாகவும், "திராவிடன்" "குடி அரசு" "குமரன்" "ஊழியன்" முதலிய பத்திரிகைகளின் வாயிலாகவும் நாட்டு நடப்புக்களையும் சீர்திருத்தக் கருத்துக்களையும் ஊன்றிப்படித்து அதன் பயனாக 1925-ம் ஆண்டு முதல் மேலே குறிப்பிட்ட தினசரி வாரப்பத்திரிகைகளில் உணர்ச்சி மிக்க சீர்திருத்தக் கருத்துக்களை கட்டுரையாக பெரும் அளவில் எழுதி வந்தார். சிறப்பாக இளைஞர்சமுதாயத்தில் அதற்குப் பெரும் ஆதரவும் வரவேற்பும் இருந்து வந்தன. எனது தந்தையார் திரு. S.A.K. கலிய பெருமாள் அவர்கள் தொழில் அதிபராக இருந்து ஜஸ்டிஸ் கட்சிப் பிரமுகர்களுடனும் பெரியார் ஈ. வெ. ரா. அவர்களுடனும் நெருங்கிய தொடர்புடையவராயிருந்தமையால் ஜாதி ஒழிப்பு, தீண்டாமை ஒழிப்பு, கலப்புத்திருமணம், மாதர்

மறுமணம் முதலிய பிரசாரங்களில் ஈடுபட்டிருந்தார். இந்நிலையில் பெரியார் ஈ. வெ. ரா. அவர்களின் ஆலோசனைக்கிணங்க குமாரத்தி நீலாவதிக்கு கலப்பு மணம் செய்விப்பதென்று தீர்மானித்தார்கள். இச் சந்தர்ப்பத்தில் காரைக்குடி திரு. சொ. முருகப்பா அவர்கள் நடத்தி வந்த ''குமரன்'' வாரப்பத்திரிகை யிலும் மாதப் பத்திரிகையிலும் சகோதரி நீலாவதி அவர்கள் 'மிஸ் நீலாவதி' என்ற பெயரில் பல முற் போக்குடைய சீர்திருத்தக் கட்டுரைகள் எழுதி வந்தார் கள். அது மிக்க உணர்ச்சி மிக்கதாயும் சிந்திக்க வைப்பதாயும் சிறந்து விளங்கியதால் இக்கட்டுரைகள் உண்மையிலேயே ஒரு பெண்மணிதான் எழுதுகிறாரா? அல்லது அவர் பேரிட்டு ஒரு ஆடவர் எழுதுகிறாரா என்ற ஐயம் திரு சொ. முருகப்பா அவர்கட்கும் குமரன் உதவி ஆசிரியராகப் பணியாற்றிய திரு இராம சுப்பிர மணியம் அவர்கட்கும் ஏற்பட்டு உண்மை தெரிந்து கொள்வதற்காக இருவரும் திருமதி மரகதவல்லி அம்மையாருடன் எங்கள் இல்லம் வந்து ஒருதினம் தங்கி சகோதரி நீலாவதியாருடன் உரையாடி, பின்பு திரு கி.ஆ.பெ. விசுவநாதம் அவர்களிடமும் விவரங்கள் தெரிந்து கொண்டு சென்றார்கள்.

இந்தச் சூழ்நிலையில் திரு சொ. முருகப்பா அவர் கட்குத் தோன்றியது, செல்வி நீலாவதியாரை எப்படி யாவது தனவணிக நாட்டு இளைஞர் ஒருவருக்குக் கலப்புமணம் செய்து பார்த்துக் களிப்பெய்த வேண்டு மென்று முடிவு கட்டி விட்டார்கள். அதை ஏற்றுக் கொண்டவர்தான் திரு. ராமசுப்பிரமணியம் அவர்கள். இக் கருத்தை உடனடியாகவே ஈ. வெ. ராமசாமிப் பெரியார் அவர்களைச் சந்தித்துப் பேசி அம்முடிவை

என் தந்தையாரவர்களுக்கும் சகோதரி நீலாவதி அவர் களுக்கும் தெரிவித்து அபிப்பிராயம் தெரிவிக்க அவ காசம் கொடுத்து சில தினங்களில் சம்மதமும் தெரியப் படுத்தினுர்கள். இக் கலப்பு மணத்தால் மணமகன் இராமசுப்பிரமணியத்திற்குப் பல தாங்க முடியாத இடஞ்சல்களும் எதிர்ப்புக்களும் சுற்றத்தார்களாலும் ஜாதிப்பற்றுடையோர்களாலும் பெரும் அளவில் ஏற்படும் என்பதை முன்கூட்டியே நன்கு தெரிந்ததனுல் திரு சொ. முருகப்பாவும் மற்ற சீர்திருத்த இளைஞர் களும் ஆலோசித்து ஒரு பாதுகாப்புக் குழு ஏற்படுத் தினுர்கள். அவர்கள் தீவிரவாதிகளாகவும் அஞ்சா நெஞ்சம் படைத்தவர்களான உணர்ச்சிமிக்கவர்கள். அவர்கள் யார் என்பது ஐம்பது ஆண்டுகள் முன்பிருந் தவர்களுக்குத் தான் தெரிந்திருக்க முடியும். இன்றைய நகரத்தார் சமூக இளைஞர்களுக்குத் தெரிந்திருக்க முடியாது. அத்தகைய தீவிரவாதிகளான நகரத்தார் சமூகத்திலுள்ளவர்களையும் மற்றவர்களையும் அறிமுகப் படுத்துவது எனது கடமையும் அவசியமுமாகும். மகி பாலன்பட்டி மு. சின்னையா செட்டியார்(பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் சகோதரர்) ராமச்சந்திரபுரம் சு. பழ. பழனியப்ப செட்டியார், கல்லுப்பட்டி சுவாமி நாதன் செட்டியார், ஊழியன் ஆசிரியர் ராய: சொக்க லிங்கன், குமரன் ஆசிரியர் சொ. முருகப்பா, வைசிய மித்திரன் தேவகோட்டை ராமனுதன் செட்டியார், இலங்கை வீரகேசரி ஆசிரியர் ஆவினிப்பட்டி பெ. பெரி. சுப்பிரமணியன் செட்டியார், அ. புதூர் பிச்சப்பா சுப்பிரமணியம், கானுடுகாத்தான் வயி. சு. ஷண்முகம், கோட்டையூர் ராம. அழ. சித. சிதம்பரம் செட்டியார், காரைக்குடி சா. கணேசன், பள்ளத்தூர் மு. அ. அருணுசலம் செட்டியார், காரைக்குடி சித.

சோம. சிதம்பரம், ஆ. தெக்கூர் சுப.• அருணகிரி, தேவ கோட்டை D.V. அருணாசலம், காரைக்குடி சு. ராம.அரு. சோமசுந்தரம் செட்டியார், M. சுகானந்தம், ராய. சிதம் பரம் செட்டியார், ஆத்தங்குடி அ. மு. அ. அண்ணாமலை செட்டியார், கண்டனூர் ந.வீரப்பன், கண்ட மாணிக்கம் விசா. காசி செட்டியார், தேவ கோட்டை அ.வெ. தியாக ராஜா, அரிமளம் அ.செ.சு.ராம.சாமிநாதன் செட்டியார், சிராவயல் மு. காசிவிஸ்வநாதன் ஆகிய இன்னும் பலரும் ஆவார்கள்.

# திருமணம்

1930-ம் ஆண்டு அக்டோபர் மீ 5உ ஞாயிற்றுக் கிழமை. காலை 10 மணிக்குத் திருச்சி தென்னூர் ரோடு 4-ம் எண் இல்லத்தில் சீர்திருத்த முறையில் திருமணம் நடத்துவதாகக் குறிப்பிட்டு அதற்கான சகல ஏற்பாடு களையும் திருச்சி திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர் கள் முன்னின்று சிறந்த முறையில் கவனித்தார்கள். திருமணத்திற்கு முதல் நாளே தனவணிக நகரத்தார் இளைஞர்களும் பெண்களும் பெரும் அளவில் திருச்சிக்கு வந்து சேர்ந்தனர். திருமண அழைப்பு தமிழ் நாட்டிலுள்ள பல பிரமுகர்களும் பெரியார் ஈ. வெ. ராமசாமி, ஈ. வெ. ரா. நாகம்மாள் ஆகியவர் கள் கையெழுத்திட்டும் என் தந்தையார் கையெழுத் திட்டும் முன் கூட்டியே அனுப்பிவிட்ட படியாலும் “திராவிடன் குடிஅரசுப் பத்திரிகைகளில் அழைப்பு வெளியிட்டிருந்தமையாலும் சுமார்2500 அன்பர்களுக்கு மேல் வரக்கூடுமென எதிர்பார்த்து தக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. திருமணத்திற்கு முதல் நாளே, மறுநாள் நடைபெறும் திருமணத்தில் மணமகன் மண மகளுக்குத் தாலி கட்டுவதா அல்லது இருவரும் மாலை மாற்றிக் கொண்டும் மோதிரம் மாற்றிக் கொண்டும் வாழ்க்கை ஒப்பந்தம் தெரிவித்துக் கொள்வதா என்ற சர்ச்சை ஏற்பட்டு, தாலி கட்டுவது பெண்ணடிமைக்கு காரணமாகிறதென்றும், இடைக்காலத்தில் வந்தவர்

களால் புகுந்ததென்றும், பண்டைய தமிழர் மரபுக்கு ஏற்றதல்ல வென்றும், மணமக்கள் வாழ்க்கை ஒப்பந்தம் தெரிவித்து பதிவு செய்து மாலை மாற்றி மோதிரம் மாற்றுவது தான் சரி என்றும் தீர்மானம் செய்யப் பட்டது. அச்சமயம் அதற்குப் பொருத்தமாக காரைக்குடி 'ஊழியன்' ஆசிரியர் தமிழ்க்கடல் திரு. ராய. சொக்கலிங்கன் அவர்களால் பாடப் பெற்ற "இருவர் இணைந்து பெறும் இல்வாழ்வுக்கறிகுறியாய் ஒருவர் பெறுந்தாலி ஒழியுநாள் எந்நாளோ? (புதுமைப் பாக்கள்) என்ற ஒரு பாடலும் ஆதாரமாகத் தெரிவிக்கப்பட்டது. குறிப்பிட்டபடி திருமணம் நடந்த நிகழ்ச்சிகள் 'திராவிடன்', 'குடி அரசு', 'குமரன்' முதலிய பத்திரிகைகளில் வெளியான விவரங்கள் கீழ்வருமாறு:—

காரைக்குடி பிரமோதூத ஸு புரட்டாசி-மீ 23உ
9—10—1930

"குமரன்" வாரப் பதிப்பு

## நீலாவதி-ராமசுப்பிரமணியம்

### திருச்சியில் திருமணம்

### 2500 ஜனங்கள் விஜயம் செய்தனர்

நாட்டுக்கோட்டை வாலிபர் - பெண்மக்களின் ஊக்கம்
(விசேஷ நிருபர்)

சென்ற ஞாயிறன்று (5—10—30) கொத்தமங்கலம் திரு. இராமசுப்பிரமணியம் அவர்களுக்கும், திருச்சி திரு S. A. K. கலிய பெருமாள் அவர்கள் குமாரத்தி திரு. நீலாவதிக்கும் திருச்சி தென்னூரிலுள்ள பள்ளத்தூர் மு. அ. அருணாசலஞ் செட்டியார் அவர்கள்

பங்களாவில திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. சனிக்கிழமை மாலையில் செட்டிமார் நாட்டிலிருந்து மாப்பிள்ளையின் நண்பர்கள் ரயிலிலும், கார்களிலும் வந்து கொண்டிருந்தனர். பங்களாவின் மேல் மாடியில் கல்யாணம் நடைபெறுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பெற்றிருந்தன. கோயம்புத்தூர் மதுரைப் பகுதியிலுள்ள பல அன்பர்கள் காலை மூன்றரை மணிக்கு வந்து சேர்ந்தனர். சென்னை போட்மெயிலிலும் பலர் வந்தனர். செட்டிமார் நாட்டிலிருந்தும் பலர் காலையில் கார்களில் வந்தனர். காலை 9 மணிக்கே மேல் மாடியும், கீழ்வீடும் நிறைய ஜனங்கள் கூடிவிட்டார்கள். ஆண்மக்கள் சுமார் இரண்டாயிரமும், பெண் மக்கள் சுமார் ஐநூறும் இருக்கலாம். நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் ஆண்களும் பெண்களுமாக சுமார் நூறு பேருக்கு மேல் வந்திருந்தனர். இடம் போதவில்லை யாதலால் பின்னால் வந்த ஜனங்கள் மேன் மாடிக்கு வரமுடியவில்லை. அங்கு விஜயம் செய்திருந்தவர்களில் சிலரை இங்குக் குறிப்பிடுகிறோம்.ஏனெனில் கீழ்க்கண்டவர்களின் ஆதரவுடன் திருமணம் நடந்தேறியது என்பதற்காகவே.

திருவாளர்களான இராமசாமிப் பெரியார், நாகம்மாள், கைவல்ய சாமியார், W. P. A. சௌந்திர பாண்டியன், J. S.கண்ணப்பர், சொ. முருகப்பா, மரகதவல்லியார், S. P. அருணாகிரி, சுந்தரி, மு. அ. அருணாசலஞ்செட்டியார், V. V. இராமசாமி, T. V. சோமசுந்தரம் B. A. B. L, கோவிந்தராஜுலு B. A. B. L., ராமானுஜம் B. A. B. L., T. P. வேதாசலம் B. A. B. L., பூவாளூர் செல்வக்கணபதியார், நகர் ஆரோக்கியசாமி, துறையூர் எஸ். இராமசாமி, அடைக்கலசாமி, முசிரி

கந்தசாமி, கோயம்புத்தூர் சிவானந்த முதலியார், திருச்சிறை அழகப்பன், அவர் மனைவியார், தேவ கோட்டை வக்கீல் ஈப்பன் B. A. B. L., காரைக்குடி ஆ. சொக்கலிங்கஞ் செட்டியார், அழ. அருணுசலஞ் செட்டியார், அ. தெ. மு. நடராஜன் செட்டியார், மெ. மெ. கணேசன் செட்டியார், பழ. கிருஷ்ணன் செட்டியார், அழ. சு. கண்ணபப செட்டியார், ஆவி. ப. ஆவிச்சி செட்டியார், ராய. சிதம்பரஞ்செட்டியார், கோட்டையூர் ராம. அழ. சித. சிதம்பரஞ் செட்டியார், அ. நா. அண்ணுமலை செட்டியார், மெ. பழ. பழநியப்ப செட்டியார், அ. ராம. கருப்பஞ்செட்டியார் (ஏ. கே. செட்டியார்), லெ. கு. குமரப்ப செட்டியார், ஒ. சிறுவயல் S. அழகப்ப செட்டியார், P. R. அழகப்ப செட்டியார், பள்ளத்தூர் V. முத்தையா செட்டியார், தேவகோட்டை கு. மு. வெங்கிடாசலஞ் செட்டியார், கண்டனூர் வயி. நா. சித. நாகப்பசெட்டியார். வெ. ராம. அழ. இராமநாதன் செட்டியார், D. V. அருணுசலஞ் செட்டியார், வயி. ப. சுப்ரமணியன் செட்டியார், சித. சிதம்பரஞ்செட்டியார், அரிமளம் லெ. சோமசுந்தரஞ்செட்டியார், கா. ஏகப்ப செட்டியார், அ. ஞானசம்பந்தச் செட்டியார், செ. முருகப்பச் செட்டியார், கோனுபட்டு பெ. சு. சுப்பிர மணியஞ்செட்டியார், சுப. கு. பழநியப்ப செட்டியார், M. A O L. சோமசுந்தரஞ்செட்டியார், ராம.பெரிச்சியப்ப செட்டியார், மு. அ. ஞானசம்பந்தஞ் செட்டியார், லெட்சுமிபுரம் S. M. N. கோவிந்தன் செட்டியார், S. M. N. வைரவன் செட்டியார், R. M. P. இராமநாதன் செட்டியார், V. L. M. சிவராமன் செட்டியார், உ. செ. உ. மு. பழநியப்ப செட்டியார்.

இன்னும் மதுரை, விருதுநகர், முசிரி, துறையூர் ஈரோடு, கோயம்புத்தூர், தஞ்சை, கும்பகோணம், ஸ்ரீரங்கம், லால்குடி, பூவாளுர், பொன்மலை, திருவளர் சோலை, நகர், உறையூர், சென்னை, மாயவரம், தூக்க நாயக்கன் பாளையம், புதுக்கோட்டை, திருச்சிரை, தேவகோட்டை, அமராவதிபுதூர், காரைக்குடி, ஓ. சிறுவயல், கோனுபட்டு, லெட்சுமிபுரம், கொத்த மங்கலம், கோட்டையூர், கண்டனூர், பள்ளத்தூர், அரிமளம், நச்சாந்துபட்டி, மிதுலைப்பட்டி முதலிய ஊர்களிலிருந்து நண்பர்கள் வந்திருந்தனர்.

கல்யாணத்துக்கு வர சாவகாசப்படவில்லை யென்றும் மணமக்களை வாழ்த்தியும் திருவாளர்களான டாக்டர் R. K. ஷண்முகம் செட்டியார் M. L. A., C. S. ரத்தினசபாபதி முதலியார் M. L. C. (கோயம் புத்தூர் ஜில்லா போர்டு பிரசிடெண்ட்), டாக்டர் P. வரதராஜுலு நாயுடு, (தமிழ்நாடு ஆசிரியர்), எஸ். இராமச்சந்திரன் சேர்வை (இராமநாதபுரம் ஜில்லா தேவஸ்தானக் கமிட்டித் தலைவர்), சென்னை பண்டிட் S. S. ஆனந்தம், S. G. ராமானுஜலு நாயுடு, கொடைக் கானல் ஜெயராஜு, திருப்பூர் K. V. வெங்கிடாசலம் பிள்ளை, சென்னை சுரேந்திரநாத் ஆர்யா, கோயம்புத்தூர் வெரிவாட செட்டியார், திருவிசநல்லூர் நாராயணசாமி, கொங்கர் பாளையம் ராஜ கவுண்டர், ஷியூர் பொன்னம் பலம், கும்பகோணம் காதர்பாக்ஷாசாயபு, சேலம் R. S. முத்துச்சாமி செட்டியார், மதுரை S. கூடலிங்கம் பிள்ளை, கண்டரமாணிக்கம் செ. சி. நா. லெட்சுமணஞ் செட்டியார், பட்டுக்கோட்டை ப. சு. தண்டபாணி, திருவாரூர் சாமி சிதம்பரனுர் ஆகியவர்களிடமிருந்து தந்திகளும் கடிதங்களும் வந்தன.

சரியாகப் பத்தரை மணிக்கு மாப்பிள்ளையும் பெண்ணும் கல்யாண மண்டபத்திற்கு வந்து ஆசனங்களில் அமர்ந்தனர்.

திரு. இராமசாமிப் பெரியார் எழுந்து பின்வருமாறு சொன்னார்:—

சகோதரிகளே! சகோதரர்களே!!

இன்றையதினம் நாம் நீலாவதி-ராமசுப்பிரமணியம் திருமணத்தை முன்னிட்டு இங்குக் கூடியிருக்கிறோம். இடம் இல்லாததனால் மிக நெருக்கமாக இருக்கிறது. அநேகம் ஜனங்கள் கீழே நிற்கின்றனர். இம்மாதிரிக் கல்யாணங்கள் நமது கொள்கைகளைப் பிரசாரம் செய்வனவாகவே இருக்கின்றன. அறிவு கொண்டு உண்மை நோக்கத்தோடு இவ்விருவரின் திருமணம் நடை பெறப் போகின்றது. திருமணம் நடந்த பிறகு நண்பர்கள் இரண்டொரு வார்த்தைகள் சொல்வார்கள். திருமணத்தை நடத்திக் கொள்ளுமாறு மணமக்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

திரு. ராமசுப்பிரமணியன் எழுந்து பின்வருமாறு கூறினார்:—

எனது அன்புள்ள திரு. நீலாவதி! நான் இன்று உங்களை எனது வாழ்க்கைத் துணையாக ஏற்றுக் கொண்டேன். இன்று முதல் என்னுடைய வாழ்க்கையிலுள்ள இன்பம் துன்பம யாவற்றிலும் எனக்குள்ள சகல உரிமையும் உங்களுக்கும் உண்டு. என்னுடைய வாழ்க்கையில் என்னென்ன உரிமைகளை உங்களிடமிருந்து எதிர்பார்க்கிறேனோ அவ்வளவையும் அப்படியே தங்களுக்கும் அளிக்கத் தயாராக இருக்கிறேன்.

பின்னர் திரு நீலாவதி எழுந்து பின்வருமாறு கூறினர்:—

எனது அன்புள்ள திரு. ராமசுப்பிரமணியம்! நான் இன்று உங்களை எனது வாழ்க்கைத்துணையாக ஏற்றுக் கொண்டேன். இன்று முதல் என்னுடைய வாழ்க்கையிலுள்ள இன்பம் துன்பம் யாவற்றிலும், எனக்குள்ள சகல உரிமையும் உங்கட்கும் உண்டு. என்னுடைய வாழ்க்கையில் என்னென்ன உரிமைகளை உங்களிடமிருந்து எதிர்பார்க்கிறேனே அவ்வளவையும் அப்படியே தங்களுக்கும் அளிக்கத் தயாராக இருக்கிறேன்.

அப்பால் மணமக்கள் இருவரும் ஒருவருக்கொருவர் மாலையிட்டனர். மோதிரங்களை மாற்றிக் கொண்டனர்.

பின்னர் திரு. இராமசாமிப் பெரியார் பேசியதன் சாரம் வருமாறு:—

இங்கு எல்லோரும் விஜயம் செய்து இப்பொழுது நடைபெற்ற திருமணத்திற்குச் சாட்சி அளித்தோம். அது நமது கடமையுமாகும். இப்பொழுது நடைபெற்று வரும் மற்ற மணங்கள் எப்படி நடைபெறுகிறதென்றால் ஒரு பெண்ணையும் ஆணையும்பிடித்து இருவரின் சம்மதமில்லாமலேயே கட்டாயப் படுத்திச் செய்யப்படுகிறது. அந்தப் பெண்ணானவள் கொஞ்சமும் சுதந்திரமற்று, மாமன், மாமி, நாத்தி, கொழுந்தன், புருஷன் ஆகியவர்களுக்கு என்றும்அடிமையாகவே இருந்துவரவேண்டியவளாயிருக்கிறாள். "கல்லென்றாலும் கணவன், புல்லென்றாலும் புருஷன்" என்று கூறிப் பெண்ணினுடைய வீரத்தையும், மனிதத் தன்மையையும் அழிக்கப்பட்டிருக்கிறது. நளாயினி, சீதை, சந்திரமதி முதலியவர்களைப் போல இருக்கவேண்டுமென்று பெண்களுக்கு

சொல்லப்படுகிறது. சந்திரமதியைப் போல் இருக்க வேண்டுமென்றால், கடனுக்காக புருஷன் தன் மனைவியை விற்றுவிடலாம் என்பதுதான் அர்த்தம். புருஷன் தன் மனைவியை விற்பனை செய்ய உரிமையுள்ளவன் என்றால் இதைவிடப் பெண்களுக்கு மரியாதைகெட்டதனம் வேறென்ன இருக்கிறது? சீதையைப் பற்றிய கதை ரொம்ப ஆபாசமானது. சீதை நிறை கர்ப்பமாய் இருக்கும்பொழுது காட்டுக்கு விரட்டப்பட்டாளென்றால் அது எவ்வளவு மூடத்தனம் என்பதை யோசித்துப் பாருங்கள். நளாயினி சரித்திரமும் ரொம்ப ஆபாசமானது. புருஷன் ரொம்பக் குஷ்டரோகி. அவன் தாசி வீட்டிற்குப் போக. வேண்டுமென்று பிரியப்பட்டானும். அவனைக் கூடையில் வைத்துத் தூக்கிக்கொண்டு போய் தாசி வீட்டில் விட்டாளாம். இது எப்படியிருக்கிறதென்றால் தாசி வீடடிற்குப் போக லைசென்ஸ் கொடுப்பது போலிருக்கிறது. புருஷனைத் தாசி வீட்டில் கொண்டுபோய் விடுவது தான் பெண்ணின் கற்பா என்று கேட்கிறேன். புருஷன் தாசி வீட்டிற்குப் போக வேண்டுமென்று கூறினால் அவனை வெளியில் தள்ளி கதவைச் சாத்துவதுதான் சுயமரியாதையுடைய பெண்ணின் செயலாகும்.

ஒருவர் :—ஒருதாரம் இருக்கிறபொழுது மறுதாரம் கட்டலாம் என்பது சுயமரியாதை இயக்கத்தின் கொள்கையா? ஹிந்துமதக் கடவுள்கள் பல மனைவிகளையுடையவர்களாய் இருக்கின்றனர். அந்த மதம் தப்பிதமானது என்று கூறும் சுயமரியாதை இயக்கம் ஒரு மனைவியிருக்க, மற்றொரு மனைவியைச் செய்ய அனுமதிக்கலாமா?

பெரியார் பதில் கூறியதாவது:—

இப்பொழுது கேட்கப்பட்ட கேள்விக்குப் பதில் சொல்ல வேண்டியது நமது கடமையேயாகும். சுயமரியாதை இயக்கம் என்ன சொல்லுகிறதென்ருல் ஒவ்வொருவரும் எல்லாவிஷயங்களிலும் தங்கள் பகுத்தறிவை உபயோகப்படுத்த வேண்டுமென்றும், ஆண் பெண் இருவருக்கும் சமத்துவம் இருக்கவேண்டுமென்றும் சொல்லுகிறது. சுயமரியாதை இயக்கத்தால் கண்டிக்கப்படுகிற தேவர்கள் செய்யும் காரியங்களையெல்லாம் செய்யக் கூடாதென்பது நோக்கமல்ல. தேவர்கள் சாப்பிடுகிருர்கள், மூச்சு விடுகிருர்கள், என்பதால் நாமெல்லாரும் சாப்பிடக் கூடாது. மூச்சு விடக் கூடாது என்பது முட்டாள்தனமாகும். பகுத்தறிவிற்கு எது பொருத்தமாக இருக்கிறதோ அதைக் கைக்கொள்ள வேண்டுமென்பதுதான் சுயமரியாதை இயக்கத்தின் நோக்கமாகும். கல்யாணம் என்பது ஒரு மனிதனுடைய இன்பத்தைப் பொறுத்ததேயன்றி வேருென்றுமில்லை. ஒரு ஆணுக்கும், பெண்ணுக்கும் வாழ்க்கையில் ஒத்துவராவிட்டால் வேறு கல்யாணம் செய்து கொள்வதில் பிசகொன்றும் இல்லை. அதே உரிமையைப் பெண்ணுக்கும் கொடுக்க ஆண் தயாராயிருக்கிருர். கல்யாணத்தை கத்தரிக்காய்,வாழைக்காய் போல் நினைத்து பொருத்தமற்றமுறையில் கல்யாணத்தைச் செய்து வைத்து வாழ்க்கை முழுமையும் துன்பத்திலும் அடிமைத் தனத்திலும் இருக்கும்படி செய்வது அறியாமையாகும். சமீபத்தில் நகர் என்ற ஊரில் ஒரு சுயமரியாதைக் கல்யாணம் நடந்தது. மாப்பிள்ளை கிறிஸ்தவர். கிறிஸ்துமதச் சட்டப்படி ஒரு மனைவியிருக்க மற்ருெரு மனைவியை விவாகம் செய்து கொள்ள அனுமதியில்லை. என்ருலும் அவரவர் சுதந்தரத்தைக் கட்டுப்படுத்துதல் விரோதமாகும். எனவே,

அக் கல்யாணத்தைச் சிறப்பாக முடித்து வைத்தோம். இங்கு நடைபெற்ற திருமணத்தின் தம்பதிகள் மிகச் சிறந்தவர்கள் என்பது என் கருத்து. தகுதி வாய்ந்த இத் தம்பதிகள் சிறந்து வாழ விரும்புகிறேன்.

திரு செ.முருகப்பா பேசியதன் சாரம் வருமாறு;—

சகோதரிகளே! சகோதரர்களே!!

இந்த மணம்சாலச்சிறப்புடையதெனக்கூறுவேன் இதனைப்பற்றி ஒரு கேள்வி வந்தது தெரியும். அதைப் பற்றித் தயங்கவேண்டியதில்லை, கல்யாணத்திற்கு வருகிற அன்பர்கள் அந்த வைபவத்தைச் சிறப்பாக ஆதரித்து நடத்துவதே கடமையாகும். இந்தப் பெண்ணுக்கும் மாப்பிள்ளைக்கும் கல்யாணமென்று அனுப்பிய அழைப்பை ஏற்று விஜயம் செய்பவர்கள் கல்யாணத்தை ஒப்புக்கொண்டதாகவே கருத வேண்டும். ஆனால் சந்தேகங்கள் எழுந்தால் அதற்குச் சமாதானம் கூறவேண்டியது நமது கடமையாகும். நமது இயக்கத்தைப் பற்றிய உண்மைகளைக் கூரை மேலும் காட்டிலும் மேட்டிலும் எங்கிருந்தும் சொல்லத் தயார்தான். இந்த விஷயத்தில் இராமசாமிப் பெரியார் உடந்தைக் குற்றவாளி. நான் ஒரிஜனல் குற்றவாளி. கல்யாணமென்பது கண்ட்ராக்டா? கட்டுப்பாடா? என்பது நாம் தெரிந்து கொள்ள வேண்டும். கல்யாணம் என்பது ஒரு பெண்ணும், ஆணும் செய்து கொள்ளும் கண்ட்ராக்டேயன்றி வேறொன்றுமில்லை. ஒரு கம்பெனியில் ஒரு கண்ட்ராக்ட் செய்திருந்தால் அதிலிருந்து விலகிக் கொள்ள எப்படி உரிமையுண்டோ அது போலவே இதிலும் விலகிக் கொள்ள உரிமை உண்டு.'' பிராமணன் செய்வது அக்கிரமம். திவசம் என்பது பித்தலாட்டம். கோவிலுக்குச் சென்று தேங்காய்

உடைப்பதால் ஒன்றும் பிரயோசனம் இல்லை'' என்று பேசிவிட்டு வீட்டுக்குச் சென்ருல், என் வீட்டிலிருக்கும் பெண் தெய்வம் நிறைய விபூதி பூசி, கோவிலுக்குச் சென்று, பாரப்பான் காலில் கும்பிட்டு விழுந்து, தேங்காய் உடைத்துக் கொண்டு வந்து ''விபூதி பூசிக் கொள்ளுங்கள், பிரசாதம் எடுத்துக் கொள்ளுங்கள்'' என்று என்னிடம் வந்து வம்பு செய்ய ஆரம்பித்தால் எப்படியிருக்குமென்பதை நீங்களே யோசித்துப்பாருங் கள். பாம்பும் கீரியும் போல அடித்துக்கொண்டு சீரழி வதைத் தவிர வேறுவழியில்லை. இந்தச் சங்கடம் சுய மரியாதை ஆட்களில் நூற்றுக்கு தொண்ணூறு பேருக்கு மேல் உண்டென்பது எனக்குத் தெரியும். இப்பொழுது நடைபெறும் கல்யாணங்கள் வியாபார முறையில் நடைபெறுகின்றன. நகை, பணம், முதலிய வற்றிற்காகவே பல மணங்கள் நடக்கின்றன. எட்டு ஒன்பது வயதுக் குழந்தைகளுக்கும் கூடக் கல்யாணம் நடைபெறுகின்றன. எலெக்ஷனுக்காகவும் பெண்களை விவாகம் செய்யப் படுகிறது. தனக்குப் போட்டியில்லா மல் ஒரு எம். எல். ஸி. கிடைப்பதாயிருந்தால், பெண்ணைக் கல்யாணம் செய்து கொடுப்பதில் ஆட் சேபணையில்லை (சிரிப்பு) ஹிந்து மதத்தில் நடைபெறும் கல்யாணங்கள் எப்படியிருக்கிறதென்ருல், ஒணுனும் தவளையும் போலவேயிருக்கிறது. ஒன்று கரைக்கு இழுக்கவும், ஒன்று தண்ணீருக்கு இழுக்கவுமாக இருந்து வாழ்நாள் முழுவதும் துன்பமயமாக இருக் கிறது. ஹிந்து லாவில் புருஷனும் மனைவியும் விரும் பாத பொழுது விலகிக் கொள்வதற்கு உரிமையளிக்க வில்லை. ஒன்ருக இணைக்கப்பட்ட இரண்டு எஞ்சின்களில் ஒன்று சென்னையை நோக்கியும் மற்ருென்று திரு வனந்தபுரத்தை நோக்கியும் இழுத்தால் எவ்வாறு

காரியம் ஒழுங்காக நடைபெறும்? அதனைப் பிரித்து விட்டாலன்றி வேறு வழியில் செல்வதற்கு மார்க்கமில்லை. பிரித்து விடவும் முடியாதென்றால் துன்பத்தைத் தவிர வேறொன்றுமில்லை. சுயமரியாதை இயக்கத்தின் நோக்கம் ஆண் பெண் இருபாலாருக்கும் சரிசமமான சுதந்தரத்தை அளிக்க வேண்டுமென்பதாகும். முந்தின பெண்களைக் கெஞ்சிப் பார்த்தோம். கும்பிட்டுப் பார்த்தோம். ஒன்றுக்கும் ஒத்து வரவில்லை. அப்பெண்ணுக்குப் பணம் கொடுப்பதிலும், வீடு கொடுப்பதிலும், ஆடையாபரணங்கள் கொடுப்பதிலும் ஆட்சேபனையில்லை. அதனோடு கூட இருந்து துன்பப்பட முடியவே முடியாது. ஒரு கம்பெனியோடு ஒரு ஒப்பந்தம் செய்கிறோம். அந்தக் கம்பனியோடு தகராறு ஏற்பட்டால் புதுக் கம்பனியோடு ஒப்பந்தம் செய்ய வேண்டியதுதானே. ஹிந்து மதத்தில் இதுவரை செய்யப்பட்டிருக்கிற கல்யாணங்களைப் பற்றி பரிசீலனை செய்து முடிவு கட்டும்படி எனக்கொரு அதிகாரம்கொடுக்கப்படுமானால் முதலாவது இதுவரை செய்யப்பட்டிருக்கும் அத்தனை கல்யாணங்களையும் ரத்து செய்து விடுவேன். ரத்து செய்துவிட்டு ஒவ்வொருவரையும் யாரைக் கட்டிக்கொள்ள இஷ்டமென்று கேட்டு, அவர்களைக் கட்டிக்கொள்ள ஏற்பாடு செய்வேன். அவர்களில் பழைய புருஷனும் பழைய மனைவியும் மறுபடியும் கல்யாணம் செய்து கொள்ள எத்தனைபேர் விரும்புவார்களென்பது அப்பொழுதுதான் தெரியும். சுற்றியிருக்கிறவர்களின் சுக சௌகரியங்களுக்காக ஒணானையும் தவளையையும் ஒன்று சேர்த்துக் கட்டுவது போலக் கட்டி ஆயுட்காலமுழுமையும் துன்பப்படுத்துகின்றனர். இப்பொழுது நடக்கும் கல்யாணத்திற்குத் தசவிதப் பொருத்தம் பார்க்கவில்லை. நல்ல புரட்டாசி மாதத்தில்

கல்யாணத்தை நடத்துகிறோம். சுப்பிகளைப் போட்டுக் கொளுத்தி, நெய்யைவிட்டுப் புகைய வைக்கவில்லை. சடங்கும், சுப்பியும் நமக்கு முக்கியமல்ல. ஒரு நல்ல ஆணையும், ஒரு நல்ல பெண்ணையும் இங்கு ஜோடி சேர்த்து விடுகிறோம். மாப்பிள்ளையும் படித்தவர்; பெண்ணும் படித்தவர். மாப்பிள்ளையும் நல்ல சீர்திருத் தக்காரர்; பெண்ணும் அதற்கு ஒருபடி அதிகம்தான். குணமும் நலமும், அறிவும், உணர்வும் பொருந்திய இருவர் ஒன்று சேருவது அறிவுடைய எல்லாருக்கும் மகிழ்ச்சியளிப்பதாகும். அப்படிப்பட்டது இந்தக் கல்யாணமென்று உங்களுக்கு நான் எடுத்துக் கூறுகிறேன். இவ்விருவரும் நம்முடைய இயக்கத்திற்கு தங்கள் வாழ்நாளை அர்ப்பணம் செய்து பெரிதும் உழைப்பார்களென்று நான் நம்புகிறேன்.

''திராவிடன்'' ஆசிரியர் திரு.ஜே. எஸ். கண்ணப்பர் பேசியதன் சாரம் வருமாறு:—

சகோதரிகளே! சகோதரர்களே!

பெரியாரும் முருகப்பாவும் இந்தக் கல்யாணத்தின் அவசியத்தைப்பற்றி நன்கு கூறிவிட்டார்கள். மண மகள் நீலாவதி அவர்கள் நன்கு கட்டுரை எழுதக் கூடியவர்கள். அவர்களுடைய கட்டுரைகள் திராவிடன், குமரன், குடியரசு, முதலியவற்றில் வெளியாகியிருக் கின்றன. மணமகன் ராமசுப்பிரமணியமும் நன்கு கட்டுரை எழுதக்கூடியவர். அவருடைய கட்டுரைகள் குமரன் முதலிய பத்திரிகைகளில் வெளியாகியிருக் கின்றன. அவர்கள் சங்கீதத்தில் மிகுந்த ஆராய்ச்சி யுடையவர்கள். மணமகளும், மணமகனும் பத்திரிகை

உலகத்தில் சிறந்தவர்களாயிருக்கின்றனர். மணமக்கள் இருவரும் நேசித்து நீடூழி காலம் வாழும்படி வாழ்த்து கிறேன்.

இராமநாதபுரம் ஜில்லா போர்டு தலைவர் திரு W. P. A. சௌந்தர பாண்டியன் பேசியதன் சாரம் வருமாறு:—

சகோதர சகோதரிகளே!

நமது தேச விடுதலைக்கு முக்கிய இடையூறாக இருப்பது ஹிந்து மதமும், ஜாதிப் பேயும்தான். ஜாதி வேற்றுமை ஒழிந்தாலன்றி தேசம் முன்னேற்றமடைய முடியாது. தேசத்திற்கு இன்று தேவையாக இருப்பது இங்கிருக்கும் தம்பதிகளைப் போன்ற வீரப்பெண்ணும், வீர ஆணுமேயாகும். இந்தச் சதிபதிகள் சிறந்து வாழ விரும்புகிறேன்.

திரு. கி. ஆ. பெ. விஸ்வநாதம் பேசியதன் சாரம் வருமாறு:—

சகோதர சகோதரிகளே!

எதிர்பார்த்தபடி இன்று தினம் திருமணம் சிறப்பாக நடைபெற்று விட்டது. இடம் போதாததினால் சிறிது கஷ்டமேற்பட்டது. இக்கல்யாண விஷயத்தில் முயற்சியெடுத்து உழைத்தவர்களுக்கும், உதவி செய்தவர்களுக்கும் தம்பதிகள் சார்பாக மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்திக்கொள்கிறேன்.

பின்னர் திரு விஸ்வநாதன் அவர்களால் திருவாளர்களான இராமசாமிப் பெரியார், நாகம்மாள், கண்ணப்பர், சௌந்திரபாண்டியன், முருகப்பா, கை

வல்ய சாமியார் ஆகியவர்களுக்கு மாலை அணிவிக்கப் பட்டது. தஞ்சை பிராமணரல்லாத இளைஞர் சங்கத்தார், துறையூர் டி. எம். நாயர் வாசக சாலையார், ஷியூர் வாலிபர் சங்கத்தார், திருச்சி மருத்துவகுல சங்கத்தார் ஆகியவர்களின் சார்பாகத் தம்பதிகளுக்கு மாலைகள் அணிவிக்கப் பெற்றன. அதன் பின்னர் நகரத்தாருக்கும் நகரத்துப் பெண்மணிகளுக்கும் முதற்பந்தி நடை பெற்றது.

மணமகனுக்கு வயது இருபத்து நான்கு. நல்ல தமிழறிஞர். சங்கீதக் கலையில் தேர்ச்சி பெற்றவர். சுயமரியாதை இயக்கத்தில் மிக்க ஊக்கமுள்ள நாட்டுக் கோட்டை இளைஞர். சிறந்த குடும்பத்தில் பிறந்தவர். நிறைந்த செல்வமுடையவர். குடும்பத்தினராலும், பொது ஜனங்களாலும் மிகவும் போற்றப்படுபவர். மண மகள் திருச்சி திரு S.A.K. கலிய பெருமாள் அவர்களின் புதல்வியாவர். வயது பதினெட்டு. தமிழறிவு நிரம்பப் பெற்றவர். சுயமரியாதை இயக்கத்தில் மிகுந்த உணர்ச் சியும், பேரூக்கமும் உடையவர். நாயுடு வகுப்பைச் சேர்ந்தவர். தந்தை திரு. கலிய பெருமாள் அவர்கள் ஜஸ்டிஸ் பார்ட்டியில் சென்ற பல ஆண்டுகளாக உழைத்து வருபவர். பார்ப்பனரல்லாதார் இயக்கத்தில் ஈடுபட்டுழைப்பவர். திருமணம் சிறப்பாக முடிந்ததும், செட்டிமார் நாட்டிலிருந்து மணமகன் சுற்றத்தார்களும் ஜாதி இனப் பற்றுடையவர்களும் பெரும் அளவில் வந்து எதிர்ப்பு ஆர்பாட்டம் செய்யலானார்கள். மணமக்களுக்குப் பல தீங்குகள் செய்வார்கள் போல் தெரிந்ததும் திருமணத்திற்கு வந்திருந்த இராமநாத புரம் ஜில்லா போர்டு தலைவர் பட்டிவீரன்பட்டி திரு. W. P. A. சௌந்தர பாண்டியனார் மணமக்களை சுமார்

ஒரு மாத காலம் தகுந்த பாதுகாப்புடன் தமது கொடைக்கானல் பங்களாவில் தங்க வைக்க ஏற்பாடு கள் செய்வதாகச் சொன்னார். அச்சமயம் கொடைக் கானல் சீதோஷ்ண நிலை சரியாக இருக்கவில்லை எனக் கருதி பெரியார் ஈ. வெ. ரா. அவர்கள் ஈரோட்டில் தம் மாளிகையின் மேல் மாடியில் ஒரு மாதம் தகுந்த பாதுகாவலுடன் தங்க வைத்து எல்லா வசதிகளும் ஏற்படுத்திக் கொடுத்ததுடன், அவர் தமையனார் ஈ. வெ. கிருஷ்ணசாமி அவர்களின் குமாரன் (8 வயது) ஈ. வெ. கி. சம்பத்தை உடன் இருக்கச் செய்து உணவு சிற்றுண்டி முதலியவற்றைக் கொண்டுவந்தளிக்க ஏற்பாடு செய்திருந்தார். ஈ. வெ கிருஷ்ணசாமி அவர் கள் அடிக்கடி வந்து விசாரித்து உதவி செய்தார் என்பது குறிப்பிடத் தக்க சிறப்பு அம்சமாகும். அதன் பின்னர் தனவணிக நாட்டு இளைஞர்கள் தங்கள் ஆர்வ மிகுதியால் காரைக்குடியில் ஒரு உபசார விருந்துக்கு ஏற்பாடு செய்து அதைச் சிறப்பான முறையில் நடத்தி வைத்தார்கள்.

நன்றி : "குமரன்" காரைக்குடி, 9-10-1930
நன்றி : "குடியரசு" ஈரோடு, 12-10-1930

# காரைக்குடியில் நகரத்தார் இளைஞர்கள் பாராட்டு விருந்து

இயக்கத்தில் அபிமானமுள்ள பல ஊர் அன்பர்கள் சேர்ந்து திரு. நீலாவதி ராமசுப்பிரமணியம் திருமணத்தை ஆதரிப்பதின் அறிகுறியாக காரைக்குடியில் சென்ற வியாழனன்று மாலை ஒரு சிற்றுண்டி விருந்து (Tea party) நடத்தினர்கள். திருவாளர் ஆ. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் வீட்டில் விருந்து நடைபெற்றது. செடிகளாலும் கொடிகளாலும் வீட்டின் முன்புறம் அலங்கரிக்கப்பட்டிருந்தது. மூன்றரை மணிமுதல் விருந்தினர்கள் வந்துகொண்டிருந்தனர். புஷ்பச் செண்டுகள் வழங்கப்பட்டன. போஜன ஹால் ஒரே மாதிரியான மஞ்சள் நாற்காலிகளாலும், தூய கதராடைகள் விரிக்கப்பட்ட அழகிய மேஜைகளாலும், அவற்றின் மேல் வைக்கப்பட்டிருந்த கோப்பைகளாலும் பிளேட்டுகளாலும் புதிய அழகைப் பெற்று விளங்கியது. சரியாக 4 மணியை கடிகார முட்கள் நெருங்கியவுடன் யாவரும் ஆசனங்களில் அமர்ந்தனர். முக்கிய மேஜை அருகில் திரு. ராமசுப்பிரமணியம், நீலாவதி, மரகதவல்லி, சுப. கண்ணகி (பிச்சப்பா சுப்பிரமணியம் குமாரத்தி) முதலியோர் இருந்தனர். குதூகலமாக சிற்றுண்டி விருந்து நடைபெற்றது. விருந்தில் சுமார்

இருநூறு பேர்கள் கலந்து கொண்டனர். அவர்களுள் சிலரை இங்கு குறிப்பிடுகிறேன்:—

காரைக்குடி:— மு. ராம. பெரியணன் செட்டியார், சி. மு. அரு. நாராயணன் :செட்டியார், பாலசுப்பிர மணியம் (முனிசிபல் செக்ரெட்டரி), அ.தெ.மு.நடேசன் செட்டியார், நா. அ. தேவராஜன் செட்டியார், ஆறு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார், சி. பெரி. சி. மெய்யப்பா, அ.பொன்னம்பலனுர், சொ. முருகப்பா, மரகதவல்லியார், சு. ராம. அரு. சோமசுந்தரம் செட்டியார், ப. ராம. பழ. ராம. இராமநாதன் செட்டியார், M. சுகானந்தம், டாக்டர் பொன்னம்பலம், L.M.P. ராம. மு. நா. இராமனுதன் செட்டியார், வெ. ராம. லெ. ராம. லெட்சுமணன் செட்டியார், சி. மு. அரு. அருணுசலம் செட்டியார், ராம.மு. ராம. சுப்பிரமணியம் செட்டியார், முத்து நாராயணன் செட்டியார், முரு. லெ. நா. நடேசன் செட்டியார், சுப. முத்தையா செட்டியார், நா. ரரம. முருகப்ப செட்டியார், ஆ. சொக்க லிங்கம், நா. பழ. கதி. முத்தரசப்ப செட்டியார், அழ. அருணுசலம் செட்டியார், ராம். நா. முரு. அருணு சலம் செட்டியார், ராய. சிதம்பரஞ் செட்டியார், சி. மெ. பழ. வள்ளியப்ப செட்டியார், பழ. சேவு. மெ. மெய்யப்ப செட்டியார், சு. கும. பழநியப்ப செட்டியார், முத்து. குப. முருகப் பசெட்டியார், ந.ப.ராம. திருநாவுக் கரசு செட்டியார், மு. பழ. பழநியப்ப செட்டியார், பழ. செ. முத்து. முத்துக்கருப்பன் செட்டியார், அழ. சு. கண்ணப்ப செட்டியார், பண. மெ. மெ. வெங் கிடாசலம் செட்டியார்,T.R.N.தாஸ், பல்டாக்டர் தாமஸ் வர்கீஸ், K.S. சர்மா (செட்டி நாடு பத்திரிகை ஆசிரியர்). சித. க. கதிரேசஞ் செட்டியார், டாக்டர் கோவிந்த ராஜுலு.

காணாடுகாத்தான்:— சா. அ. ராம. அண்ணுமலை செட்டியார்.

கோட்டையூர்:—அ.நா. அண்ணுமலை செட்டியார், வயி. லெ. குமரப்ப செட்டியார், ராம. அழ. லெ. இராம நாதன் செட்டியார், வி. ஜி. நாயர், உ. அ. பழ. பழநி யப்ப செட்டியார், லெ.அ.மு. அண்ணுமலை செட்டியார், அ. கருப்பன் செட்டியார் குமரிமலர், A.K. செட்டியார், பெ. மு. அ. வெ. சிதம்பரம் செட்டியார், ராம. அழ. சித. சிதம்பரம் செட்டியார், மெ. பழநியப்ப செட்டியார்.

அரிமழம்:— அ. ஞானசம்பந்தம் செட்டியார், செ. முருகப்ப செட்டியார், முரு. செல்லப்ப செட்டியார், லெ. சோமசுந்தரம் செட்டியார், K. ஏகப்ப செட்டியார், முரு. சின்னக்கருப்பன் செட்டியார்.

பள்ளத்தூர்:— க. கு. ராம. காசி செட்டியார், மு. அ. அருணுசலம் செட்டியார், V. முத்தையா செட்டியார், K.R.S. நடராஜன் செட்டியார், R. M. வெங் கிடாசலம் செட்டியார், சொ. அருணுசலம் செட்டியார், M. S. உடையப்ப செட்டியார்.

அமராவதி புதூர்:—பிச. ராம. ராமநாதன் செட்டி யார், அ. மு. அ. அண்ணுமலை செட்டியார், அரு. ராம. சு. சுப்பிரமணியன் செட்டியார், சுப. கண்ணகி, தி. நாராயண ஐயர்.

கோனுபட்டு:—பெ. சு.சுப்பிரமணியன் செட்டியார், M. A O.L. சோமசுந்தரம் செட்டியார், மு.சோம. முத்து ராமன் செட்டியார், ஆ. ப. சாமிநாதன் செட்டியார், மு. அ. ஞானசம்பந்தன் செட்டியார், மு. பெ. மு. முரு கப்ப செட்டியார், அரு. ராம.சு. சுப்பையா செட்டியார்,

M. S. அருணுசலம் செட்டியார், சுப. கு. பழநியப்ப செட்டியார், மு. ஆ. பழ. பழநியப்ப செட்டியார், ராம. சு. லெ. ஷண்முகம் செட்டியார், ராம. பெரிச்சியப்ப செட்டியார், சுந்தரமய்யர் (பம்பாய்).

சொக்கலிங்கம் புதூர்:—பழ. மு. முத்தழகப்ப செட்டியார். ராம. அருணுசலம் செட்டியார்.

கண்டனூர்:—முரு. அண்ணுமலை செட்டியார், ந. வீரப்ப செட்டியார், வயி. ப. சுப்பிரமணியன் செட்டியார், வயி. நா. சித. நாகப்ப செட்டியார்.

புதுவயல்:—எ. பெரி. பழநியப்ப செட்டியார்.

மகிபாலன்பட்டி:—மு. சின்னையா செட்டியார்.

தேவகோட்டை:—வக்கீல் ஈப்பன் B. A. B. L., பழ. சேவகன் செட்டியார்.

லெட்சுமிபுரம்:—ந. சொ. அரு. அருணுசலம் செட்டியார், S. M. N. கோவிந்தன் செட்டியார், V.L.M சிவராமன் செட்டியார், R. பத்மநாபன் (பள்ளி ஆசிரியர்), மு. பி. அரு. சுப்பிரமணியன் செட்டியார், சொ. மு. அரு. அழ. அருணுசலம் செட்டியார், உ. செ. உ. மு. பழநியப்ப செட்டியார், ராம. பி. ராம. ராமநாதன் செட்டியார், S.M.N. வைரவன் செட்டியார், க. ப. ராம. இராமன் செட்டியார், க. ப. சு. பழநியப்ப செட்டியார்.

இராமச்சந்திரபுரம்:— தீ. சொ. தீ. சொ. சொக்கலிங்கம் செட்டியார், தீ. சொ. முரு. சுப. சொக்கலிங்கம் செட்டியார், K.P.M.K. சாமிநாதன் செட்டியார், மு. மு. கு. சுப. சுப்பையா செட்டியார், சொ. கி. முத்தையா செட்டியார்.

ஆத்தங்குடி:—அ. ராம. ஸ்ரீநிவாசன் செட்டியார், பெரி. சா. ராமசாமி செட்டியார், அ. கும. வெங்கிடாசலம் செட்டியார்.

கண்டரமாணிக்கம் :— வி. சா. காசி செட்டியார், வி. சா. ஆவிச்சி செட்டியார், சூ. சி. இராமசாமி செட்டியார்.

ஓ. சிறுவயல்: - P.K. அழகப்ப செட்டியார், S. அழகப்ப செட்டியார்.

நாச்சியார்புரம்:— ப. ஜீவானந்தம்.

சிற்றுண்டி விருந்து முடிந்ததும் முன் ஹாலில் பிரசங்கங்கள் நடைபெற்றன. விருந்துக்கமிட்டிக்காரியதரிசி காரைக்குடி நகரசபைத் தலைவர் திருவாளர் முரு. நாராயணஞ் செட்டியாரவர்கள் எழுந்து,

"சகோதரர்களே!

நாமின்று திருவாளர் ராமசுப்பிரமணியம் அவர்கட்கும் திருமிகு நீலாவதி அவர்கட்கும் நடந்த திருமணத்தைப் பாராட்டுவதற்காக இங்கு வந்துள்ளோம். இக்கல்யாணம் தனவணிக நாட்டில் பேருக்கத்தையும் பெருமுற்சாகத்தையும் ஊட்டியிருக்கின்றது. இத்தகைய மணங்கள் பல நம்மிடையே நடக்க வேண்டும். நாட்டின் முன்னேற்றத்திற்கும் நம் விடுதலைக்கும் அவை இன்றியமையாதனவாகும். இன்னும் இது போன்ற பல கலப்பு மணங்கள் நம் நாட்டில் நடைபெறப் போகின்றன என்றறிந்து மகிழ்கின்றேன். இங்ந நம் சந்தோஷத்திற்கும் பாராட்டுதலுக்கும் அறிகுறியாக இவ்விரண்டு மலர் மாலைகளையும் திரு ராம சுப்பிரமணியம் அவர்களுக்கும் திருமிகு நீலாவதி

அவர்களுக்கும் அணிவிக்கின்றேன்'' என்றுமொழிந்து அழகிய ரோஜாமலர் மாலைகளை இருவருக்கும் அணிவித்தார்.

அப்பால் மகிபாலன்பட்டி திருவாளர் மு. சின்னையா செட்டியாரவர்கள் (பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியாரின் சகோதரர்) பேசியது வருமாறு:—

''சகோதரர்களே!

நாமின்று நமது அன்பர் ராமசுப்பிரமணியம் அவர்கட்கும் ஸ்ரீமதி நீலாவதி அவர்கட்கும் நடந்தேறியிருக்கின்ற திருமணத்தை முன்னிட்டு இங்கு கூடியிருகின்றோம். இக்கலப்புமணத்தின்பால் நமக்கு அளப்பரிய சந்தோஷமுண்டு. பாராட்டுத்தம்பதிகள் பல மைல் தூரத்திலிருந்து (ஈரோடு) புயல், பெரும் மழை காரணமாக நீர் நிறைந்து பயங்கரமாயிருக்கின்ற ஆறுகளையும் குளங்களையும்கடந்து, இந்த மழைக்காலத்தில் இங்கு வந்திருப்பதே நாமதனை ஆதரிக்கின்றோமென்பதற்குச் சான்றாகும். நம் சமூகம் மிகப் பழமையானது; பல சீர் சிறப்புக்களைக் கொண்டுள்ளது;பெருவாரியான கட்டுப்பாடுகட்கு இடமானது; நீண்ட நாளாக ஏற்பட்ட வரையறைகளை வெளிப்படையாக மீறுது இருந்து வருகின்றது. ஏதோ ஆங்காங்கே சிற்சில நடந்துவிட்டாலும் அவற்றை இரகசியமாக வைத்திருக்கின்றோம். இன்று நம் சமூகக் கட்டுப்பாடுகளைப் பரிசீலனை செய்து பார்த்தால் அவை பெரிய மலையாகத் தோற்றக்கூடும். அவற்றால நமக்கு அபரிமிதமான தொல்லைகள் விளைகின்றன. உலக நாகரிகத்தில நமக்கு ஏற்படும் நஷ்டம் கொஞ்சமல்ல. இக்கஷ்டங்களிலெல்லாம் பெரிதும் குறிப்பிடத்தகுந்தது கல்யாண விஷயமாகும். கல்யாண காலத்தில் நமக்கு அமிதமான

தொகை செலவாகின்றது. சடங்குகளும் பலவே. இவற்றின் தொல்லைகளால் நம் சமூகத்தில் மணமாகாமலிருப்போர் பல்லோர். இத்தகைய சமூகக்கட்டுப்பாட்டை உடைத்தெறிய வேண்டும். இந்த உணர்ச்சியோடு பல வருடங்கட்கு முன்னரே நாம் முயன்று பார்த்துவிட்டோம். தொண்ணூற்ருறூர்க் கூட்டம் முதலியன இம்முயற்சியின் பயனாகும். அவைகளெல்லாம் எள்ளளவும் பயனளியாது போயின. ஆகவே பலர் புதிய மார்க்கங்களைக் கண்டுபிடிக்கப் பிரயாசைப்பட்டனர். அப்பிரயாசைகளில் ஒன்றே இன்று நம்மிடையில் காணப்படுகின்ற இக்கலப்பு மணம்.

நான் நீண்ட நாளாக நம் சமுதாயத்தில் மறுமணம் (விதவைமணம்) நிகழுமென்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்; கலப்பு மணம் நடைபெறுமென்று நினைக்கவில்லை; நம்வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் மறுமணமும் கலப்பு மணமும் மிகவும் அவசியமானவைகள். இவற்றைக் கண்டு எவரும் பயப்பட வேண்டிய தேவையில்லை. நம் சமுதாயத்தில் பண்டைக் காலந்தொட்டே கலப்பு மணம் புரியும் வழக்கமிருந்து வருகின்றது. முன்னோர்கள் பயந்து அதைஇரகசியமாக வைத்துக்கொண்டார்கள்; நம் வாலிபர்கள்வெளிப்படையாகச் செய்து காட்டுகிறுர்கள். அது நல்லதா? கெட்டதா? என்ருல், நல்லது என்றே கூறுகின்றேன். சாஸ்திர ஆராய்ச்சியுடையோர், பண்டையோர் காந்தர்வ மணத்தையே புகழ்ந்தார்கள் என்றும் போற்றினுர்களென்றும் கூறுகின்றனர். ஒருவனுக்குத் தகுந்த நல்ல ஒத்த மனைவியை அளிப்பது காந்தர்வ மணமொன்றேயென்று துணிந்து கூறலாம். ஆனுல் சிலகாலங்களில் இயல்பாகவே நல்ல மனைவி கிடைப்பதுமுண்டு. அதனை ஒரு பெரும் அதிர்ஷ்டமென்று

கொள்கின்றேன். அவ்வாறு ஒத்த மனைவி கிடையாமற் போனால் வேறு கல்யாணத்தைச் செய்து கொள்ளலாம். மனிதனுக்கு இன்பமே பெரிது. அவன்தன் ஜீவிதம் இன்பமயமாகக் கழிவதற்கே விரும்புவான். ஆகவே அழுது அழுது மனங் கோணலான ஒரு மங்கையோடு உயிர்வாழ்வதிலும் அவளைத் தள்ளிவிட்டு சந்தோஷ மாக வாழ்க்கை நடத்துவதே சாலச்சிறந்தது. அவ் வாறு செய்வதில் பிறர் எவ்வளவுகுறைகளைச் சொன்ன போதிலும் அவற்றிற்குச் செவிசாய்க்க வேண்டாம். கிழவர்களுக்கு நம் கூற்று ஏற்றதாகத் தோன்றாமலிருக் கலாம். அதனைப்பற்றிக் கவலையில்லை. இது இரத்தக் கொதிப்பும் இளமையுமுடையவர் கவனிக்க வேண்டிய விஷயமாகும். சந்தோஷமடைய விரும்புகின்ற ஒருவன் பிறர்சுசப்பை எதிர்பார்த்து நடக்க முடியாது.

இத்தகைய விஷயங்கள் சமுதாயத்தைக் கெடுத்து விடுமென்று சிலர் ஓலமிடலாம். உலக வாழ்க்கை எப் பொழுதும் மாறுதலை அடிப்படையாகக் கொண்டே நிகழ்கின்றது. எங்குபார்த்தாலும் எந்த விஷயத்தை நோக்கினும் ஒன்றும் இருந்தபடி இருப்பதில்லை. மாறுதலையடைந்து கொண்டேயிருக்கின்றது. இதனை உணராத மக்களே நம்மைக் காய்வர். கொஞ்ச வருஷங் களுக்கு முன்பு கிராப் செய்து கொள்ளவேண்டுமென்று கிளர்ச்சி செய்தேன். அப்பொழுது நடந்த விஷயங்கள் உங்களுக்கு ஞாபகமிருக்கலாம். சுமார் ஒன்றரை வருடங்கள் கிளர்ச்சி செய்தோம். என்னோடு அக் காலத்து ஒத்துழைத்தவர் திரு.சொ.முருகப்பர்மட்டிலுமே. எனக்கு சிறுபிராயத்தில் "கிராப்" வைத்துகொள்வது நலமென்று தோன்றிற்று. அழகாகவும் சுகாதாரத் திற்கு ஒத்ததாகவும், இருப்பதாக எண்ணினேன்.

மேனுட்டாரும் செட்டியார்களல்லாத பல ஜாதியாரும் கிராப் செய்து கொண்டிருப்பதையும் பார்த்தேன். ஆகவே நம்மிடையும் அதனைப்பரப்ப வேண்டுமென்று தோன்றிற்று. அதற்காக சாஸ்திரங்களையோ, புராணங்களையோ ஆராயவில்லை. நான் கிராப் செய்துகொண்டு வெளியே வரத்தொடங்கியதும், பல பல ஜனங்கள் எதிர்த்து என்னோடு வாதாடினார்கள். (திரு ராமசுப்பிரமணியம் சிறுவயதில் கிராப் வைத்தபோது ஒருமாதம் வீட்டுக்குள் வர வீட்டார் அனுமதியில்லை) நான் ஒருவரோடும் பகைமை கொள்ளவில்லை; எனக்கு இது அழகென்று தோன்றுகிறது; ஒரு தீங்கும் விளைவதில்லையென்றும் எண்ணுகிறேன்' ஆகவே இதை வைத்திருக்கின்றேன். உங்கள் குழந்தைகட்கும் இவ்வாறு செய்யுங்கள் என்றே பதில் கூறினேன். (கூட்டத்திலிருந்த ஒருவர்: இப்போதெல்லாம் சரியாகி விட்டது என்று கூறினார்) இந்தக் கிராப்புக்கு இவ்வளவு எதிர்ப்புஇருந்தால் கலப்புக்கல்யாணத்துக்கு எவ்வளவு எதிர்ப்பு ஏற்படக் கூடும்!

இப்படிப்பட்ட எதிர்ப்புக்களைப் பற்றி பத்திரிகைகளில் சண்டை வேண்டாம். எந்த விஷயத்தை எவர் எப்படித் திரித்துக்கூறிய போதிலும் நயமாகச் செய்ய வேண்டும்.

டீ பார்ட்டி நடத்துவது ஓர் நல்ல முறை. இதைக் கொஞ்சகாலமாக எல்லோரும்பின்பற்றிவருகின்றார்கள். இதில் சிக்கனமும் வேலைக் குறைவும் கால லாபமுமிருக்கின்றன.எவரும்அதற்குஆக்ஷேபம் சொல்வதாகதெரியவில்லை. இங்ஙனமே புனர் விவாகமும் (விதவைமணம்) நம்மிடையே பரவவேண்டும்; காலத்துக்குத் தகுந்த முறைகளைச் சமுதாயத்தில் புகுத்திக் கொள்வதே

அறிவுடையோர் செய்கை. நம் சமூகத்தில் விதவைகளுக்குஏற்படும் கஷ்டம் அளவிடமுடியாதது. அதனைத் தீர்ப்பதற்கு முயல்வதே நமது அடுத்த வேலையாக இருக்கவேண்டும். இப்போது புருஷர்கட்கு ஓர் வழி (கலப்புமணம்) திறந்தாகிவிட்டது. பெண்களுக்கும் சீக்கிரத்தில் வழி ஏற்படவேண்டும். அவ்வாறு செய்ய முற்படுவது பலருக்கு இதைவிட ஆயிரந்தரம் கசப்பாக இருக்கலாம். உண்மையாக முன்னேற்றங் கருதும் மக்கள் அதனைப் பொருட்படுத்தக்கூடாது. அனுவசியமான செலவுகளைக் குறைத்து உங்களால் இயன்ற அளவு விதவைகளுக்குப் பாதுகாப்பளிக்க வேண்டும். இங்கு இப்போது கூடியிருக்கின்ற அன்பர்களெல்லோரும் ஒருமுகப்பட்டவர்களாதலால் இதனைக் கூற முன்வந்தேன்.

அடுத்தாற்போல நான் கடைசியாகக் கூறவிரும்பும் விஷயம்தேசத்தைப்பற்றியதாகும். நாம் இப்போது சட்ட மறுப்புக்கோ சிறைசெல்லவோ தயாராக இல்லை, என்றிருந்தாலும் தேசத்திற்குச் சிறிது தொண்டுபுரியலாம். அதாவது அன்னிய ஆடைப்பகிஷ்கார இயக்கத்தில் சிறிது கலந்துகொண்டு கதர்கட்ட எல்லோரும் முன்வர வேண்டும். அந்த ஒன்றினால்இன்று நாம்தேசத்திற்குச்: சிறிதாவது தொண்டு செய்தவர்களாவோம். முடிவாக, நான் திருவாளர் ராமசுப்பிரமணியமவர்களையும் அவரது துணைவி லீலாவதி அவர்களையும் வாழ்த்திக் கொண்டு என் பிரசங்கத்தை முடித்துக் கொள்கிறேன்.

பிறகு, கோட்டையூர் ராம. அழ. சித. சிதம்பரம் செட்டியாரவர்கள் பேசினார்கள் அதன் சாரமாவது:—

"சகோதரர்களே!

நாமிங்கு கூடியிருப்பதின் உத்தேசத்தையும் நாம் செய்யவேண்டிய வேலைகளையும் பற்றி அன்பர் மு. சின்னையா செட்டியாரவர்கள் கூறிவிட்டார்கள். நம் சமுதாயத்தில் கலப்புக் கல்யாணம் ஓர் பெருங் கிளர்ச்சியான விஷயமல்ல. நம் நகரத்தார் சரித்திரத்தை ஆராய்ந்து பார்த்தால் விஷயம் நன்ருக விளங்கும். நம் முன்னேர்கள் வேளாள குலத்திலிருந்து பெண்களைக் கல்யாணம் செய்திருந்தார்களாம். அவர்களின் வழித்தோன்றல்கள் தாம் நாமெல்லாரும். ஆகவே இக் கலப்பு மணத்தில் என்ன பிரமாதமிருக்கின்றது? நம் ஜாதியார் அன்னிய நாடுகட்குப் போகும்போது ஜாதியைப் பாராது கோத்திரத்தை நினையாது குலத்தை எண்ணுது தாராளமாக எவரோடும் உறவு வைத்துக் கொள்ளுகிருர்கள். மதத்தைக் கூட சிலபோழ்து கவனிப்பதில்லை. அவ்வாறு பிறந்த குழந்தைகளை நாமே கட்டிக் கொடுப்பது ஒரு சாதாரணமான விஷயமேயாகும். இதனையேயன்றி நாம் எவரோடும் கலந்து சாப்பிட்டும் வருகின்ருேம். இதுவரையிலும் எந்தச் செட்டியாராவது ஜாதியைப் பார்த்து சாப்பிட மாட்டேனென்று கூறியதுண்டோ? நம்மைச் செட்டியாரென்று எவரேனும் தள்ளினுலொழிய நாம் கலப்புச் சாப்பாட்டிற்கு இசையாமலில்லை. இப்படியிருக்க ஜாதியைப் பற்றிப் பிரமாதமாகப் புகழ்ந்து பேசுவதில் என்ன பொருளிருக்கின்றது. செட்டியார்கள் என்ருல் ஒரு நல்ல ஜாதிதான். பலவகையான சிறப்புகளிருக்கின்றன. பணம் ஏராளமாக இருக்கின்றது; என்ருலும் அதனை அனுபவிக்க வழி தெரியவில்லை. நம் சமூகம் முழுதும் பலவகையான கெட்ட பழக்கங்கட்காளாகி இருக்கின்றது. இதனைப் பல வருஷங்களாகவே உணர்ந்து கொண்ட நம் மக்கள் சீர்பெறுவதற்காகக் கிளர்ச்சிகள்

கள் செய்து வருகின்றார்கள். அந்தக் கிளர்ச்சியினால் எழுந்ததே நம் தொண்ணூற்றாறூர்க் கூட்டம் முதலியனவாகும். அவற்றால் நாம் எதிர்பார்த்த பயன் சிறிதளவும் கிடைக்கவில்லையென்பது வெளிப்படை. நாம் சிறிதும் முன்னேற்றமின்றியே இருக்கின்றோம். இப்படியே இருப்பதென்றால் கஷ்டப்பட்டு இறப்பதைத் தவிர வேறு வகையில்லை. தலையில் அப்படித்தான் எழுதியிருக்கின்றதென்பதும் புத்திக்குப் பொருந்தாது. விடுதலை வேண்டுவோர் கட்டுப்பாட்டைத் தகர்த்தெறிய வேண்டும். மேனாட்டையுற்றுப் பாருங்கள். நாம் மாட்டு வண்டியில் பன்னூறாண்டுகளாகச் சென்றுகொண்டேயிருக்கின்றோம். அவர்கள் சைக்கிளைச் செய்து;மோட்டாரைத் தோற்றுவித்து, கப்பலைக் கட்டி இன்னும் எத்தனையோ விதமான வாகனங்களை உற்பத்தி செய்து, இப்போது ஆகாயக் கப்பலில் தேவர்கள் போல் பறக்கின்றார்கள். மோட்டார் முதலியன புறக்கணிக்கப்பட்டு வருகின்றன. ரேடியோ (ஆகாயவசனி) ஒன்றை 170 ரூபாய்க்குக் கொண்டு வந்து விட்டார்கள். உலகம் இவ்வளவு தீவிரமாய்ப் போய்க்கொண்டிருக்க நாமேன் கஷ்டப்படவேண்டும்? நமது அன்பர் சின்னையா செட்டியார் அவர்கள் கூறியது போல முதலாவது ஒரு விஷயம் நடைபெறத்தொடங்கினால் ஆதியில் எதிர்ப்பு வருவது இயல்புதான். சுமார் 20 வருஷங்கட்கு முன்பு கிராப்பு வேண்டுமென்று கூறியபோது எல்லோரும் எதிர்க்கத்தான் செய்தார்கள். இப்போது அதற்காகச் சண்டையிடுவாரெவருமில்லை. எல்லோரும் கிராப்பையே விரும்புகின்றனர். மணப்பெண்ணைக் கேட்டால் எனக்கு கிராப்பு வைத்த புருஷனே வேண்டுமென்கிறாள். (கரகோஷம்). முன்னாளில் ரவிக்கை அணிவதில்லை. இப்போது

ரவிக்கை அணியாத பெண்ணைக் காண முடியாது. அவ்வழக்கம் கொஞ்சமாவது ஜாதியை அழித்திருப்பதாகத் தெரியவில்லை! சிவநேசர் விரும்புகின்ற வண்ணமே ஜாதி இருந்து வருகிறது. முன்பு கைக்கட்டு, மணி முதலிய அநாகரிக நகைகள் அணிந்து வந்தார்கள். இப்போது அவைகளைக் காணமுடியாது. இவ்வாறு காலப்போக்கிருக்க சிலர் எதனையும் பாராது வசைபாடுவதென்றே வைத்துவிட்டார்கள்.

நம்மிடையில் ஓர் அழைப்புக் கிடைத்தால் அதனை நிறைவேற்றுவதியல்பு. அவ்வண்ணம் நானும் எனக்குத் தெரிந்த எத்தனையோ நண்பர்களும் திருச்சிக்கு நீலாவதி ராமசுப்பிரமணியம் கல்யாணத்திற்குப் போயிருந்தோம். சிவநேசன் ஆசிரியர் பலவான் குடி ராமசாமி செட்டியார் அங்கு திருமணத்திற்கு வந்த எல்லோரையும் காலிகள், ஜட்கா வாலாக்கள், டெம்பரரி ஆசாமிகள் என்று எழுதியிருக்கிறார். அவரை நாம் ஒன்றும் செயயவேண்டாம். அவர் மேலும் மேலும் போய்க்கொண்டேயிருக்கட்டும். மலை மீது ஏறிவிட்டால் இறங்குவதைத் தவிர வேறு வழியில்லை. அவர் கண்ணுக்கு இங்கு நடப்பது முற்றிலும் அநுவசியமாகத் தோன்றலாம். கூடியிருப்பவர்களும் காலிகளாகத் தோன்றலாம். நாளை அவர் பத்திரிகையில் அப்படி எழுதி வரக்கூடும். சில வாரங்கட்கு முன்பு பள்ளத்தூரில் திரு. முருகப்பா முதலியோர் பிரசங்கம் புரிந்தார்கள். ஏராளமான ஜனங்கள் வந்து கேட்டுக் கொண்டிருந்தனர். அங்கு மேஜையோ நாற்காலியோ காணப்படவில்லை. என்றிருந்தும் "சிவனேசனில்" பிரசங்கம் கேட்க ஒருவரேனும் கடைசிவரை இருக்க

வில்லையென்றும் திரு. பொன்னம்பலனும் திரு. முருகப்பாவும் மேஜை நாற்காலிகளைத் தூக்கிகொண்டு போனார்களென்றும் எழுதப்பட்டிருக்கிறது. அதே மாதிரி கோனபட்டிலும் உண்மைக்கு முற்றிலும் மாருக பிரசங்கம் கேட்க ஒருவரும் வரவில்லையென்றும் சாப்பிடக்கூட எவரும் அழைக்கவில்லையென்றும் ஆகவே இரவிலேயே திரும்பிவிட்டார்களென்றும் எழுதினர். அவர் எழுத்து முழுவதும் எவ்வளவு பொய் நிரம்பியது என்பதை எல்லோரும் அறிவார்கள்.

அவர் என்ன எழுதினாலும் நாம் அச்சங் கொள்ள வில்லை. நமக்கு எது நியாயம் உண்மை தகுதியென்று தோன்றுகிறதோ அதனைக் கடைப் பிடிப்போம். நம்மிடையே இன்றிருக்கின்ற நிலையில் புருஷர்கட்கும் பெண்களுக்கும் விடுதலை வேண்டுவதாகும். எனவே இத்தகைய கலப்பு மணங்களை ஆதரிப்போம். பலர் இன்னும் இப்படிப்பட்ட கலப்பு மணத்துக்கு முன் வர வேண்டும்.

அப்பால் திருவாளர் சொ. முருகப்பா பேசியதன் சுருக்கம் வருமாறு :—

உலகில் மக்கள் எதற்காகப் பிறக்கிறார்கள் என்பதை யோசித்தல் வேண்டும். மதவாதிகள் மதத்தைக் காப்பாற்றவே மக்கள் பிறந்திருக்கிறார்கள என்று சொல்லுகிறார்கள் ஜாதியபிமானங் கொண்டவர் ஜாதியைக் காப்பாற்றுவதற்காகவே பிறந்திருப்பதாகச் சொல்லுகின்றனர். கோவில் கட்டுகிறவர் அதற்காகவே மனிதா பிறந்திருப்பதாகக் கூறுகின்றனர். நாங்கள் மனிதன் நல்வாழ்வு வாழ்வதற்காகவே பிறந்திருக்கிறானென்று சொல்கிறோம். தான் சுகமாக வாழவும்

ஏமாருதிருக்கவும் பிறரை யேமாற்ருமல் உதவி செய்யவும் மனிதன் தன் முயற்சியை உபயோகிக்க வேண்டும். கல்யாணமென்பது ஏதோ பரலோக வாழ்வுக்கென்று கருத வேண்டிய அவசியமொன்றுமில்லை. இன்ப வாழ்வுக்காகவே கல்யாணம் செய்யப்படுகிறது. அது இன்ப வாழ்வைத் தரவேண்டும், இல்லாவிட்டால் கல்யாணத்தால் ஒரு பிரயோசனமும் ஏற்படாது. இம் மாதிரியான கலப்பு மணங்களால் ஜாதிக்கு ஆபத்து வந்துவிட்டதென்றும் ஜாதியைக் கெடுக்கிருர்களென்றும் சிலர் சத்தம் போடுகின்றனர். ஜாதிக்காக நன்மை செய்ய வேண்டுமென்று முன்வந்து வேலை செய்பவருள் நானும் ஒரு முக்கியமானவனென்பதை ஞாபகப்படுத்துகிறேன். சுமார் 20 ஆண்டுகட்கு முன்னர் இதோ இருக்கிற திரு சின்னையா செட்டியாரவர்கள் "சமூக சீர்திருத்தம்" எனும் விதையை இந்த சமூகத்தாரிடையில் தூவினுர்கள். அந்நாளில் வைசியமித்திரனை ஆரம்பித்து நடத்தின தேவகோட்டை ராமநாதன் செட்டியார் சீர்திருத்த நெறியில் தலைப்பட்டார். இவ்விருவருமே அன்று ஜாதித் திருத்தம் அவசியமென்று கருதி வேலை செய்தனர். வேறெவருக்கும் இவ்வுணர்சசி அன்று ஏற்படவில்லை. திரு சின்னைய்யா செட்டியாரவர்களே என்னை இத்துறையிலீடுபடும்படி செய்தவர்கள். அன்று முதல் சுமார் 18 ஆண்டுகளாகநான் இததுறையில் ஈடுபட்டிருக்கிறேன். அந்த நாளில் நாங்கள் சொன்ன முக்கியமான திருத்தம் இரண்டு. ஒன்று, பெண்ணுக்கு விலை கூறி அக்கிரமாகப் பணம் வாங்குவதையொழித்தல். மற்ருென்று வீண் செலவையொழித்தல். இவ்விரண்டு திருத்தமும் இன்றுவரை முற்றுப் பெறவில்லை. சமூகத்திலுள்ள ஜனங்களிடம் சொல்லிப் பார்த்தோம்; நயமாகப் பேசி

னேம்: சிபார்சு செய்தோம்; கூட்டம் கூட்டினேம். சிறு கூட்டங் கூட்டியாய் விட்டது; பெரிய கூட்டங்கூட்டி யாய் விட்டது. ஊர்க் கூட்டம், கோயில் கூட்டம், வட்டகைக் கூட்டம், தொண்ணூற்ருறூர்க் கூட்டம் எல்லாம் கூட்டிப் பார்த்தோம். தீர்மானங்கள் நிறை வேற்றினேம் என்றாலும் இவ்விரண்டு கொடுமைகட்கும் சிறு பரிகாரமும் கிடைக்கவில்லை. பழங் கொடுப்பதோடு பச்சை அப்பளங் கொடுப்பதைக் கூட இந்தக் கூட்டங் கூடி நிறுத்த முடியவில்லை. எண்ணெயில் பொறித்தா வது கொடுக்க முன்வரவில்லை. (கரகோஷம்) வாழைப் பழம், மாம்பழம் என்பதைப் போல் கடைசியில் 'பழம்' என்று வருவதற்காகப் பச்சை அப்பளமும் பழவகை யென்று நினைத்துக் கொடுக்கின்றனர். இதை நிறுத் தக்கூட ஊக்கமும், பலமும் ஏற்படாத நிலையில் சீர் திருத்தம் எப்படிச் செய்ய வேண்டுமென்பதை யோசித் துப் பாருங்கள். புதுமை கல்யாணங்களில் பழப்பை களை வாங்கித் தூக்கிக் கொண்டு வெட்கப்படாமல் தெருவில் போகிறார்கள். எவ்வளவு பெரிய மனிதரும் இதற்குத் தயார் தான். குழந்தைகளை இரண்டு மூன்று தரங்கூட உள்ளே தள்ளி விட்டுப் பை வாங்கப்படு வதைக் காணலாம். இந்தத் திருத்தங்கூடச் செய்ய முடியவில்லை. இதைச் சொன்னால் ஜாதியை அவமானப் படுத்திப் பேசுகிறார்களென்று ஆத்திரப்படுகின்றனர். ஆத்திரப் படுகிறவர்கள் அவமான செய்கைகளைச் செய்யாதிருக்கும்படி ஏற்பாடு செய்யட்டும். தொடை யில் சிலந்தி (கட்டி) புறப்பட்டால் ஆப்பரேஷன் செய் யாமல் மருந்து போட்டுப் பார்க்கலாம். என்ன மருந்து போட்டும் குணமாகாமல் மேலும் மேலும் சீழ்பிடிக்கு மானால் என்ன செய்வதென்பதே கேள்வி. டாக்டரிடம் காட்டுவதற்கு வெட்கப்பட்டு ஆவதென்ன? கிறிச்

சீழை வெளிப்படுத்தாமல் முடியாது. வேறு வைத்தியம் வேண்டும். நோய் குணமாக வேண்டும். இல்லாவிட்டால் பலருக்குத் தெரியுமே என்ற பயத்தை விட்டுவிடுவதே நியாயமாகும். இல்லா விட்டால் சாக வேண்டியதைத் தவிர வேறு வகையேது!

சென்ற இருபதாண்டு முயற்சியால் பட்டபாடு நிறைவேறவில்லை என்ற கோபத்தால் இம்மாதிரிக் கல்யாணம் முதலியவற்றைச் செய்ய முன்வரவில்லை. இதைவிட வேறுவழி என்னவென்று கேட்கிறேன். பெரிய மனிதர்களிடம் நாங்கள் எடுத்துச் சொன்ன போது அவர்களும் உணர்ந்தனர். ஆத்திரப்பட்டனர். கூட்டங்கட்கு வந்தனர். பேசினர், தீர்மானித்தனர். தீர்மானங்கள் நிலைபெற முடியவில்லை. அவர்களிடம் வஞ்சகமில்லை. ஆனால் கட்டுப்படுத்தமுடியவில்லை. கூட்டத் தீர்மானத்தால் கட்டுப்பாடு செய்து நிலை நிறுத்த முடியாதென்பதை வெட்ட வெளிச்சமாகச் சொல்லிவிட்டனர். பிறகு செய்வதென்னவென்று கேட்கிறேன். விஷயங்களில் நான் அணுவளவும் மாறுபடவில்லை. 15 வருஷங்களுக்கு முன்பு சொன்ன திருத்தங்களைத் தான் இன்றும் சொல்கிறேன். நாள் தோறும் முயற்சி செய்து கொண்டுதான் வந்திருக்கிறேன். மற்ற செட்டிப்பிள்ளைகட்கிருப்பதை விட. இந்த ஜாதிபார் உன்னத நிலையடையவேண்டுமென்பதில் அதிகமான ஆசை எனக்குண்டு. வேறுவகையொன்றை மற்றவர் சொல்லட்டும். எந்தக் கூட்டமாவது கூடிப் பெண் விலையைக் குறைக்கட்டும். வீண்செலவை ஒழிக்கட்டும். நான் இந்த முயற்சியை விட்டுவிடுகிறேன். மலைக்குப் போய் தவம் புரியச் சொன்னாலும் சரியென்று ஒப்புக்கொள்கிறேன் மூலையிலிருந்து குறை சொல்வதற்காகப் பின்வாங்க

முடியாது. கலப்பு மணத்தை நான் ஏன் ஆதரிக்கிறேனென்ருல் இரண்டு திருத்தமும் ஒரேயடியாகக் கிடைக்கின்றன. பெண்ணுக்கு விலை முப்பதாயிரம் நாற்பதாயிரங்கொடுப்பது தொலைகிறது. சடங்கு முதலிய காரியங்களும் முறைதலைகளும் பிறவும் இல்லாதபடியால் வீண்செலவும் தொலைகிறது. இவ்விரு திருத்தத்திற்கும் கலப்பு மணமே சிறந்த உபாயமாக இருப்பதைக் காணலாம். இந்தக் கல்யாணத்தில் ஒரு தாரமிருக்க மறுதாரம் செய்து கொள்ளலாமா என்று சிலர் கேட்க முன்வருகின்றனர். நம்மை எதிர்ப்பதையே கொள்கையாகக் கொண்டிருக்ககிற ஆட்கள் அதைப் பற்றிப் பேசுகிறதில்லை. ஏனென்ருல் அத்திருக்கூட்டத்தின் முக்கியஸ்தருக்கு மூன்று மனைவி (சிரிப்பு) அடுத்த இளவரசருக்கு இரண்டு. இதனுல்தான் எதிர்ப்பில் இந்தப் பேச்சு வருகிறதில்லை. (சிரிப்பு) இனி இதைப்பற்றி நான் கூறுவதென்னவென்ருல், வைதீகர்கள் இரண்டு தாரம் கொள்வதைப் பிழையென்று கூற அதிகாரமில்லை. சுப்பிரமணிய சுவாமிக்கு இரண்டு பெண்டாட்டியுண்டு. சுந்தரமூர்த்தி சுவாமிகட்கு இரண்டு. கண்ணபிரானுக்கு 16000த்துச் சொச்சம். தசரத சக்கரவர்த்திக்கு 60000 பெண்டாட்டிகள். சாஸ்திரப்படி ஒருவன் அறுபதாயிரம் பெண்டாட்டி கட்டிக் கொள்ளலாம். அறுபதாயிரத்து ஒன்று கட்டும் போதுதான் வைதீகர் நம்மைக்குறை சொல்லமுடியும். அவ்வளவு பெண்டாட்டி இந்தக் காலத்தில் யாருக்கும் தேவையிராதென்றே நினைக்கிறேன். (சிரிப்பு) சீர்திருத்த நெறியில் வந்த நமது நண்பர் சிலர் இக்கேள்வியைக் கேட்கின்றனர். இது நியாயமேயாகும். இதில் என்னுடைய கொள்கை என்னவென்ருல் ஒத்துவராத ஜோடிகள் பிரிந்து கொள்ள

வேண்டுமென்பதுதான். கல்யாணத்தை நான் பார மார்த்திக காரியமாகக் கொள்ளவில்லை. காண்ராக்ட் ஒப்பந்தமாகவே கொள்கிறேன். இப்படியே உலகி லுள்ள பல்வேறு தேசங்களிலுள்ள மக்கள் கொள் கினறனர். இவ்வுலகத்தில் மக்கள் இன்பமாக வாழ் வதற்காகக் கல்யாணம் செய்வதும பிடிக்காவிட்டால் விலகி வேறு ஒருவரைக் கல்யாணம் செய்து கொள் வதும் இயல்பாகவுள்ளன. கிறிஸ்தவர்களும், புத்தர் களும், மகமதியரும் இந்துக்களில் பலரும் இக்கொள் கையுடையவர்களாக இருக்கின்றனர். அப்படி நாமும் இருக்கவேண்டுமென்பது என் அபிப்பிராயமாகும். இதற்கு மாறுபட்டு, ஒத்துவராத இருவர் சேர்ந்து வாழ முன்னின்று நாள்தோறும் நாழிகை தோறும் சண்டை போட்டுத் துன்பப்படுதல் அனுவசியமாகும். புருஷன் மனைவியோடு இன்பமாக வாழ முடியாத போது வேறு விவாகம் செய்து கொள்ளவிரும்பினுல் மனைவிக்கும் அந்த உரிமையை மறுக்காதிருக்க வேண்டும். அவ்வளவு தான். ஆதலால் சீர்திருத்த நெறிபற்றும் நண்பர்கள் இந்தக் கல்யாணத்தில் பேத அபிப்பிராயங் கொள்ள இடமேது? ஜாதிக்குச் சொந்தக்காரர் என்று சொல்லிக்கொண்டு நம்மோடு சண்டைக்கு வருபவர்கள் ஒரு பெண்ணை வைத்துவிட்டு மறு பெண் கொள்வதைப் பற்றி ஆக்ஷேபிக்கவில்லை ஆனுல் சொந்த ஜாதியில் செய்து கொள்ளவேண்டுமென்கின்றனர். பணங்கொடுக்க முடியாதென்ருல் வைப்பாட்டியாக எத்தனை பேரை வேண்டுமானுலும் வைத்துக் கொள்ளுங்கள்; பகிரங்க மாகக் கல்யாணம் செய்யவேண்டாம் என்கின்றனர். எதிலும் திருட்டுத்தனம் வேண்டாமென்று நான் கூறு கிறேன். இப்படி ரகசியமாக எதையும் செய்ய சொல் பவரால் ஜாதிக்கு என்ன நன்மை விளையக் கூடு

மென்பதை யோசித்துப் பாருங்கள்! இந்த ஜாதியாருள் சுமார் 12,000 குடும்பங்களிருக்கின்றன. ஜாதிக்கட்டுப் பாடு ஒன்று வேண்டுமென்ருல் அது அந்த ஜாதியி லுள்ள எல்லோருக்கும் சௌகரியமாக இருக்க வேண்டும். இந்த வீட்டினுள் இருநூறு பேர் இருக் கிரும். 50 பேரை கீழே தள்ளி மற்றவர் போட்டு அமுக்குவதென்று ஆரம்பித்தால் கீழே கிடப்பவர் எப்படியாவது மேலே இருப்பவரை உதறித்தள்ளிவிட்டு எழுந்து உட்கார பார்க்க வேண்டும். அது முடியுமாளுல் இந்த வீட்டை எல்லாரும் சேர்ந்து காப்பாற்ற வேண்டும். அது முடியாவிட்டால் எப்படியும் தப்பித்து வெளியே போக வேண்டியதைத் தவிர வேறு யோசனை யென்னவென்று கேட்கிறேன். இந்த சமூகத்தில் சுமார் கல்யாணமாக வேண்டிய வாலிபர்கள் தொகை இரண்டாயிரமென்று 10 வருஷங்கட்கு முன் கணக் கெடுக்கப்பட்டது. இப்போது இன்னும் அதிகமாக இருக்கக்கூடும். இவர்கள் எதற்காக இருக்கின்றனர்? செத்த விட்டில் பிணம் தூக்குவதற்கா என்று கேட் கிறேன்? (சிரிப்பும் கரகோஷமும்) பிணந்தூக்குவதும், கல்யாணங்கட்குச் சாப்பிடக்கூப்பிடவும், சந்தைச் சாமான் வாங்கவும், கணக்கெழுதவும் இவர்கள் உப யோகப்படுகிருர்கள். மைசூர் அரண்மனையின் அந்தப் புறத்தில் வேலைக்கிருப்பவரைப் போல் இங்கும் பலர். கல்யாணமில்லாதிருக்க வேண்டுமென்று நினைப்பது பெருங்கொடுமையாகும். முப்பது நாற்பது ஆயிரம் ரொக்கமாகக் கையில் வைத்துக்கொண்டு இந்த ஜாதியில் பெண்டாட்டி கிடையாமல் இருக்கின்ற னரென்பதை உணர வேண்டும். நம்மிடத்தில் எட்டு ரூபாய் சம்பளம் வாங்குமொருவன் இஷடப்பட்டால் இரண்டு பெண்டாட்டி கட்டிக் கொள்ள இடமிருக்

கிறது. இவ்வளவு பணத்தை வைத்துக்கொண்டு ஒரு பெண்டாட்டிக்கு கதியில்லை. 25000 ரூபாய் கையிலுள்ள ஒரு வாலிபன் இஷ்டப்பட்டால் நான்கு பெண்டாட்டி கட்டி ஒரு அழகான பங்களாவும் கட்டிக் கொண்டு ஒரு பெரிய மோட்டாரும் வாங்கி அதில் ஏறிக்கொண்டு ஷோக்காக உலாவ உலகில் வழியுண்டு (கரகோஷம்) ஜாதியைக் காப்பாற்றுவதற்க்காக இத்தனையும் இழப்பானேன் என்று கேட்கிறேன். திரு. சிதம்பரஞ் செட்டியாரவர்கள் சொன்னது போல ஜாதியினால் நன்மையேற்படுமானால் ஜாதியைக் காப்பாற்றலாம். அதனால் சிலருக்கு நன்மையும் சிலருக்குத் தீமையுமேற்படுவதானால் தீமையுடையவர் அதை உடைத்தெறியத்தான் பார்க்க வேண்டும்.

பழைய கொள்கையைத் தான் பின்பற்ற வேண்டுமென்றும் புதிதாக ஒன்றையுங் கொள்ளக் கூடாதென்றும் சில அன்பர்கள் சொல்கின்றனர். இது எவராலும் முடியக்கூடிய காரியமல்ல. எவரொருவர் இப்படிச் சொல்கிறாரோ அவரே அவருடைய மனைவியிடம் சென்று, கழுத்துரு மணி கங்கணக் காப்பு கைக்கட்டு அணிந்து கொள்ளச் சொல்லிப் பார்த்தால் தெரியும். நெற்றியில் பிறை சீதேவியைக் கோர்த்துத் தொங்க விட முடியுமா என்று கேட்கிறேன். காதில் கோபில சுருட்டி போன்ற கொப்பு முடிச்சுக்களை அணிவிக்கப் போனால் தெரியும். இந்த மாதிரிக் குறை சொல்வதற்கு ஒன்றும் பொருளில்லை. இங்கிருக்கிற நீங்கள் யாவரும் புத்தம் புதியவர்களல்லவா? இங்கே எழுபது வயதுக்கு மேற்பட்டவர் இருக்கமாட்டாரென்று நினைக்கிறேன். எழுபது ஆண்டுக்கு முன்னிருந்த பழைய மனிதர் இங்கேயில்லை. 100 வயதுக்கு முந்திய ஆசாமி

கள் உலகத்திலேயே இல்லை. பழைய மனிதர், பிராணி கள், மரம், செடி, இலை முதலிய எல்லாம் ஒழிவதும், புதியனவாக இவைகள் ஒவ்வொரு நாளும் தோன்று வதும், இயற்கையாகும். அப்படி நடவாவிட்டால் இந்த உலகம் ஜீவித்திருக்க முடியுமா? ஒரு கட்டிடத்தைக் கட்டினால் பழசாகும். பழசானபோது சீர்திருத்த வேண்டும். திருத்த முடியாத போது இடித்து நொறுக்கிவிட்டுப் புதிதாக அமைக்க வேண்டும். பழமைதான் வேண்டுமென்றால் முடியுமா? சீர்த்திருத் தஞ்செய்யாமல பழமை பழமையென்று கவனியாதிருந் தால் சங்கரப்பொதிக்கோட்டை அறந்தாங்கிக் கோட்டை களைப் போல மரமும் செடியும் முளைத்துப் பாழாவதைத் தவிர வேறென்னவாகும்? இப்படியே ஜாதி சமயம் முதலியவற்றின் தன்மையுமிருக்கின்றது. சுமார் 70—80 ஆண்டுகளாக இந்த ஜாதியானது சீர்திருத்தும் வேலையைச செய்யவில்லை. அரியக்குடியில் முளை யடித்துக்கூடிய கூட்டத்தில சில திருத்தங்கள் செய்ய பட்டதாகக் கேள்விப் படுகிறோம். அதிலிருந்து இன்று வரை துன்ப நெறியில் வளர்ந்து வருகிறதென்பதை நினைப்பூட்டுகிறேன.

சீர்திருத்த நெறியிலீடுபட்டு நான் கண்ட அனுப வத்தில ஒன்றைக் கூறுகிறேன். 6 அடி பாய்ந்தால 4 அடியில் நின்றிருக்கலாமென்று சொல்ல படுகிறது. 10 அடி பாய்ந்தால் 8 அடி பாய்ந்திருக்கலாமென்கிறார் கள். 16 அடி பாய்ந்தால் இது முழு மோசம். 12 அடி வரை அபாயம் வராது என்று கருதும் நிலையை அடை கிறார்கள். முதலாவது தொண்ணூற்றாறார்க் கூட்டத் திற்கு முன் பெண்ணுக்கு விலை ஒரு காசு கூட வாங்கக் கூடாதென்று கண்டிப்பாய்ச் சொன்னோம். முதல் கூட்டத்தில் செலவுக்காக இரண்டு வராகனுக்கு

(ரூபாய் 7000) ஒத்துக்கொள்ளும்படி சொன்னூர்கள். ஒப்புக் கொண்டோம். அப்பால் கூமய கூட்டத்தில் இது நிலைக்கவில்லை. ஆதலால் நான்கு வராகன் (ரூபாய் 14000) வைக்கலாமென்ருர்கள். சரியென்று இறங்கி வந்தோம். அதற்கடுத்த கூட்டத்தில் இதை கட்டுபடுத்த முடியாது ஆதலால் வீட்டுக்குப் போகலா மென்ருர்கள். வேறு ஜாதியில் கல்யாணம் செய்தோம். ஜாதி போய்விட்டது, குடி முழுகிவிட்டது, ஜாதியைக் கெடுக்கிருர்கள் என்று சத்தம் போட்டார்கள். விதவைப் பெண்களைக் கல்யாணம் செய்தோம். விதவையைக் கட்டலாமா, இதற்கு வேறு ஜாதியில் கன்னிப் பெண் களைக் கட்டினுலும் பாதகமில்லையென்றனர். நாகர் கோயிலில் குழந்தையோடிருக்கும் விதவைப் பெண் ஒன்றுக்குக் கல்யாணம் செய்து வைத்தோம். அதைக் கேட்டவர்கள் பிள்ளையில்லாத விதவையைக் கல்யாணம் செய்யலாமென்ருர்கள். இப்போது சிலர் "வெளி ஜாதியில் கல்யாணம் செய்வதைவிட நம்முடைய ஜாதியிலிருக்கும் விதவைகளைச் செய்ய லாம்" என்று சொல்ல ஆரம்பித்து விட்டார்கள். அப்படிச் சொல்பவர்கள் விதவைக்கு நடக்கும் கல்யா ணத்திற்கு வந்திருந்து நடத்துவார்களா என்பதில் எனக்குச் சந்தேகந்தான். நமது நண்பர் சின்னையா செட்டியாரவர்கள் விதவா-விவாகத்தின் அவசியத்தை பற்றி நன்கு எடுத்துச் சொன்னுர்கள். பெண்ணும் மாப்பிள்ளையும் கிடைத்தால் நாங்கள் பின்வாங்கப் போவதில்லை. நாளையே கல்யாணம் நடத்தத் தயார். (கரகோஷம்) வாயினுல் இங்கே சொல்லிவிட்டுப் போவ தல்ல (அங்கிருந்த ஒருவர், அப்படிச் செய்தால் தான் சரிக்கு வரும், அநியாயமாகவிருக்கிறது என்ருர்) (கரகோஷம்) இயன்றவரை நாங்கள் முயற்சி செய்வதில்

பின்வாங்கப் போவதில்லை. எங்கள் இயக்கத்தை எதிர்த்து பேசுகிற ஒருவர் என்னைப் பற்றி சொல்கிறார். ஆ. தெக்கூர் சுப. அருணகிரி கல்யாணம் முதலியன நடக்கும்போது "ஊரில் இருக்கிறவர்களைப் பிடித்து விட்டு ஏமாற்றுகிறான்; இவன் ஒன்றிலும் அகப்பட்டுக் கொள்ள மாட்டான்; எல்லாவற்றிலும் தப்பிவிடுவான்" என்றனர். நானே எனக்கு கல்யாணம் செய்ய முன் வந்துவிட்டேன். இப்போது "வாலிழந்த நரி மாதிரி இவனுடன் துணைக்கு ஆள் சேர்க்கிறான்" என்று கூற முன்வந்திருக்கின்றனர். ஏதாவது இந்த மனிதர்கட்கு யோக்கிய பொறுப்பிருக்கிறதா என்று யோசித்துப் பாருங்கள். இம்மாதிரி கூற்றுக்களையும் எதிர்ப்பையுங் கண்டு பின்வாங்க முடியுமா? பிள்ளையார்பட்டிக் கோவிலாரும், இரணிக் கோவிலாரும, இளையாற்றக் குடிக் கோவிலாரும் மற்ற நகரத்தாரும் சீர்திருத்த இயக்கத்தில் சம்பந்தப் பட்டவர்களைத் தள்ளி வைக்க வேண்டுமென்று ஒருவர் சொல்லுகிறார். தள்ளி வைப்பது சட்ட விரோதமென்பது ஒருபுறமிருக்கட்டும். ஜாதிக்குத் தீங்கிழைப்பதாகக் "கருதித் தள்ளிவைப்பதாக நினைத்தால்: ஜாதியினுள்ளிருந்து கஷ்டப்படுபவர்களுக்கு வழி சொல்ல வேண்டியதும் அவர்களுடைய கடமையல்லவா? குறிப்பிட்ட இந்தக் கோவிலாரும், மற்ற கோவிலார்களும் தங்கள் தங்கள் கோவில்களிலுள்ள கல்யாணமில்லாமல், கஷ்டபபடுகிறவர்களுக்குக் கல்யாணம் செய்துவைக்க முன் வரட்டும். கோவில் கட்டுவதற்குப் பணம் கொடுப்பதைப் போல நாளையே இதற்கு வரி எழுத ஆரம்பிக்கட்டும். பத்து இருபது லட்சம் வரி எழுதி நிதியேற்படுத்தி அதிலிருந்து கல்யாணம் செய்து வைக்க முன்வருவார்களா? கஷ்டங்கள் ஏற்படும்போது அதற்குப் பரிகாரம் செய்

யாமல் ஏதாவது பரிகாரத்தை அவர்கள் தேடினல் அதற்குக் கேடு செய்து ஒதுக்கி வைப்பதென்பது ஒழுங்கல்ல. இப்படிப் பலரை இவ்வூரிலேயே தள்ளி வைத்ததுண்டு. பிறகு தாங்களாகவே ஆட்களைவிட்டு சிபார்சு செய்து தங்களோடு சேர்த்துக் கொண்ட கதையும் தெரியும். (கரகோஷம்) இந்த மாதிரியான காரியங்களால் அடக்கிவிடக்கூடுமென்று நம்புவது முட்டாள்தனத்தைத் தவிர வேறில்லையென்றே நான் கருதுகிறேன். எங்களைப் பற்றிய வரையில் இம்மாதிரி வார்த்தைகளைப் பொருட்படுத்தச் சந்தர்ப்பமில்லை. நாங்கள் இறந்துபோனல் எங்களைத் தூக்கிப் புதைக்க வேண்டிய வேலையொன்றிருக்கிறது. இதைப்பற்றி எப்பொழுதுமே கவலைப்படுகிறதில்லை. இறந்து போய்த் தூக்கிப் போட ஆளில்லாமல் போய்விட்டால் நமது முனிசிபாலிட்டியார் பொறுப்பில் காரியம் நடப்பது நிச்சயம். சட்டப்படி அவர்கள் செய்தாக வேண்டும். பங்காளிகள் தள்ளிவைப்பதற்காக அவர்கள் மாட்டே னென்று சொல்லமுடியாது (சிரிப்பு) இம்மாதிரியான காரியங்களையெல்லாம் பற்றிக் கவலைப் படுவதானல் பொது உழைப்பை எட்டிப் பார்க்கக் கூடமுடியாது. கல்யாணத்தை ஆதரிப்பதென்ருல் தீர்க்காயுசாய் இருக்கவேண்டுமென்று சொல்லி விட்டுப் போவதில்லை. மாப்பிள்ளையையும் பெண்ணையும் கும்பிட்டு விழச் சொல்லி வாய்திறக்க வகையறியாது எதிரே நின்று விட்டுப் போவதுமல்ல. தம்பதிகளின் வாழ்வுக்கு, அவர்களுக்குக் கஷ்டம் நேர்ந்தால் அந்தச் சந்தர்ப்பத் தில் ஏதாவது இயன்ற உதவி செய்வதுதான் ஆதரிப் பதின் பொருளாகும். இம்மாதிரியான ஆதரவே உண்மை அன்புக்கு இலக்கியமாகுமென்று கூற விரும்புகிறேன். இந்த விருந்திற்கு ஊக்கமும் உணர்ச்சி

யும் அறிவும் அன்பும் நிரம்பிய ஒத்த மனப்பான்மை யுடைய நூற்றுக் கணக்கானவர் விஜயம் செய்திருப் பது எனக்கு மிகுந்த மகிழ்ச்சியைத் தருகிறது. என்னுடைய வாழ்வில் இம்மாதிரியான மகிழ்ச்சிகள்தான் எனக்கு இன்பத்தைத் தருவனவாகும். பணத்தால் வரும் இன்பத்தை நான் பெரிதாக நினைக்கவில்லை. நாளுக்கு நாள் நான் ஏழையாகிக் கொண்டுதான் வரு கிறேன். நேற்று நான் முக்கால் ஏழை; இன்று முக்காலே வீசம் ஏழை; நாளை முக்காலே அரைக்கால், நாளுக்கு நாள் ஏழையாகிற பட்டியலில் நான் சேர்ந்திருக் கிறேனே தவிர பணக்காரனாகிற பட்டியலில் சேர வில்லை. அப்படி நான் எப்பொழுதும் விரும்பினதில்லை. இன்னும் ஏழையாவதற்கே விரும்புகிறேன். ஒருவேளை நான் முழுமையும் ஏழையாகி விட்டால் இங்கிருக்கும் உங்களில் யாராவது சோறு போட மறுக்க மாட்டீர் கள் என்று உறுதியாக நம்புகிறேன். (கரகோஷம்) இம்மாதிரியான கல்யாணங்களையோ இயக்க சம்பந்த மான மற்ற காரியங்களையோ செய்கையில் காட்டு வதற்கு எவ்வளவு கஷ்டப்பட்டிருப்போம்? எத்தனை நாள் அலைந்திருப்போம்; எவ்வளவு கவலைப் பட்டிருப் போம்; என்பது இதில் ஈடுபடுவோருக்குத் தான் தெரியும். எங்களை எவ்வளவு திட்டுத் திட்டுகிறார்கள் என்பதும் உங்களுக்குத் தெரியும். வாழ்த்துகிறவர்களும் இருக்கிறார்கள். வாழ்தையும் வருத்தத்தையும் கணக்கு போட்டுக் கழித்தால் நாங்கள் தான் மிச்சம். இத்தனை கஷ்டங்களுக்கிடையில் இம்மாதிரியான நிகழ்ச்சிகளும் உங்களைப் போன்றவர்களின் ஆதரவுமே தோன்றி இடையிடையே எங்களுக்கு மிகுந்த சந்தோஷத்தை அளிக்கின்றன. இவ்வியக்கத்தில் இன்றே இவ்வுலக மெல்லாம் சேர்ந்துவிட வேண்டுமென்று நான் கூற

வில்லை. பிரித்துவிட்டு துன்புறுத்த வேண்டுமென்பது என்னுடைய கருத்தல்ல. இயக்கத்தில் சேருவதற்காக எவரையும் குடும்பத்தில் சண்டை போட்டுக் கொள்ளும்படி நான் சொன்னதே கிடையாது. தகப்பனுக்கு கீழே இருப்பவர்கள் தனக்குப் பணம் கிடைக்காதென்ருல் அதனை விட்டு விட்டுச் சண்டை போட்டுக் கொண்டு வரவேண்டிய அவசியமில்லை. எங்காவது கடைகள் வைத்து தொழில் செய்பவர் தவணைப் பணம் வாங்குவதற்கு ஆட்சேபனை ஏற்படுமென்று கருதினுல் அவர்களும் அந்நலங்களை இழந்து கஷ்டப்பட வேண்டாமென்று நான் கூறுகிறேன். நம் இயக்கத்தில் சந்தேகமிருந்தால் அவர்களையும் நம்முடன் சேர வேண்டுமென்று கூறவில்லை. ஆனுல் எவரையும் எதிர்ப்பார்க்க வேண்டிய அவசியமின்றித் தனக்குத் தானே குடும்பத்தலைவனுயிருந்து இவ்வியக்கத்தின் கொள்கை முற்றும் தமக்கு உடன்பாடாயிருந்தால் அப்படிப் பட்டவர் ஏன் பின்வாங்க வேண்டுமென்பதே என்னுடைய கேள்வி. ஊர் ஜனங்களும தமக்குச் சம்பந்தம் இல்லாதவர்களும் மக்கள் நன்மைகளில் ஊக்கம் இல்லாதவர்களும் குறைசொல்லுவார்கள். குறை சொல்லுகிருர்கள் என்பதற்காக பின் வாங்குவது நியாயமன்று. "விருந்துக்கா போனீர்கள்" என்று யாராவது கேட்டால் 'இல்லை' யென்று இழுத்தாற்போல் சொல்லக்கூடாது என்று சொல்லுகிறேன். அப்படிச் சொன்னுல் அவர்கள் குணத்தைக் காட்ட ஆரம்பித்துவிடுவார்கள். "ஆம் சென்றேன் அதிலென்ன பிசகு" என்று சொன்னுல் சரிதான் அந்தக் கட்சியைச் சேர்ந்தவர்கள்" என்று நினைத்துக்கொண்டு மரியாதையாக இருப்பார்கள் மனித வாழ்விற்குச் சிறிது துணிவும் அவசியமாகும்.

பின்னர் திருவாளர் ராமசுப்பிரபிணியம் அவர்கள் எழுந்து விருந்தளித்தோருக்கு நன்றி கூறும் முகத்தால் பேசியதாவது:—

பேரன்புடைய சகோதரர்களே!

எங்கள் திருமணத்தின் பொருட்டு இங்கு எல்லாரும் ஒருங்கு கூடி எங்களைப் பாராட்டியதற்காக வந்தனமளித்துக்கொள்ளுகிறேன். இன்று நம் நாடு எவ்வாறு இருக்கும் என்பதை அன்பர்கள் பலர் கூறி விட்டார்கள். தற்போதைய நிலைமையில் வாழ்க்கை நடத்த முடியாது. எவ்வழியாலும் சீர்திருத்தம் செய்தே தீர வேண்டும். சீர்திருத்தம் செய்ய முற் படும் போது பல எதிர்ப்புகள் உண்டாகின்றன. அவற்றைப் பொருட்படுத்தலாகாது. நாம் அனுபவிக்க நினைக்கும் ஓரிடத்தில் கற்ருழைகள் ஏராளமாகப் படர்ந்திருந்தால் அவற்றை அப்படியே வைத்துவிடு வதில்லை. அவற்றை அறவே வெட்டி ஒழித்து அழகிய பூஞ்செடிகொடிகள் நட்டு செம்மை செய்கின்ருேம். அங்ஙனமே நம் சமுதாயத்தில் கண்மூடித்தனமான சில கொள்கைகளாகிய கற்ருழைகள் நிரம்பியிருக்கின் றன. அவற்றை ஒழிக்க வேண்டும். அதற்கு முட்டுக் கட்டைபோட எவர் வந்தாலும் நாம் அவரோடு வாதாட வேண்டியதே அவசியமாகும்.

உலகிலுள்ள நாடுகளை எடுத்துப்பார்த்தால் எல்லாம் சீர்திருத்ததினுலேயே மேன்மை பெற்றிருக் கின்றன. நாம் நம் முன்னேர் கண்டுபிடித்த மாட்டு வண்டியிலேயே பிரயாணம் செய்து கொண்டிருக் கிருேம். சிறிதும் மாறுதலில்லை. ஏதேனும் மாறுதலி ருந்தால் ஒரு வெள்ளிப் பூணையோ வெள்ளிப்

...லில், திரு. ஈ. வெ. இராமசாமி அவர்கள் விஜயம் செய்திருந்தபொழு
...நம் திருமதி கமலாம்பாளுக்கும் நடந்த (விதவாவிவாக) திருமணத்தில்

நீலாவதி—ராம சுப்ரமணியம்

# திருமண அழைப்பு.

ஐயா:— "குடி அரசு" "திராவிடன்" "குமரன்" பத்திரிகைகளுக்கு வியாசம் எழுதிவரும் மதிநிறைச் செல்வி திருச்சி

நீலாவதிக்கும்,

மதிநிறைச்செல்வன் கோத்தமங்கலம்

ராம சுப்ரமணியத்திற்கும்,

பிரமோதூத ஆண்டு புரட்டாசி மீ 19-ம் (5.10.30) தேதி ஞாயிற்றுக்கிழமை காலை 10மணிக்கு திருச்சியில் தென்னூர்ரோட் 4 நெம்பர் இல்லத்தில் திருமணம் நடத்த ஏற்பாடாகி இருக்கிறபடியால் அதுபோது தாங்கள் தயவுசெய்து தங்கள் வாழ்க்கைத்துணையுடன் எழுந்தருளி சாக்ஷியளிக்கவிழைகின்றோம்.

ஈரோடு
1—10—30

ஈ. வே. ராமசாமி
ஈ. வே. ரா. நாகம்மாள்

தங்கள் மேலான வரவை ஆசையோடு எதிர் நோக்கும்
S. A. K: கலியபெருமாள், திருச்சி.

பார்ப்பனியம் ஒழிந்த திருமணம்

அம்பா சமுத்திரம் தா[illegible] ... மதி அம்மாளுக்கும் திருவாளர் செல்வன் சொக்கலிங்க முதலியாருக்கும் ஆவணிமாதம் 20ந்தேதி (5-9-1930) [illegible]

23-9

"குடி அரசு" "திராவிடன்" பத்திரிகைகளில் வெளியிட்டும் பல அன்பர்களுக்குத் தனியே தபாலிலும் அனுப்பப் பட்டது.

## 10-10-30ல் "ஈரோடு பெரியார் இல்லம்"



முதல் வரிசை :-

ஈ.வெ.ரா. நாகம்மாள்,
மெ. வ. அலர்மேலு,
நீலாவதி-
இராம சுப்பிரமணியம்
சுப. விசாலாட்சி,
ஈ.வெ.ரா. தங்கை
கண்ணம்மாள்,
ஈ.வெ.கி. சம்பத்
(8 வயது)

இரண்டாவது வரிசை:

ஈ. வெ. ரா.
மெ. வ. வள்ளியப்பா,
ராமசாமி,
மலேயா பழனியப்பா,
காரைக்குடி
ராம சுப்பையா,
எஸ். ராமசாமி
(ஈ. வெ. ரா தங்கை
கணவர்)



பண்டிட் நேருஜீ திருச்சி விஜயத்தின் பொழுது சகோதரி நீலாவதி பேட்டி கண்டு விருந்தளித்தல். பண்டிட் நேருஜீ, எஸ். சத்தியமூர்த்தி, F. G. நடேசய்யர், நீலாவதி—இராம சுப்பிரமணியம், நேருவுக்குப் பின்னல் திரு. K. காமராஜ்.



சகோதரி நீலாவதி சென்னை மாகாண காங்கிரஸ் தலைவராயிருந்து திரு. வி. வி. கிரியை வரவேற்றல். இடதுபுறம் திரு. O. V. அழகேசன், வலதுபுறம் தேவநாகய்யா.



அண்ணல் காந்தி அடிகளைச் சந்தித்த பிறகு கதராடையுட
னும் ஆபரணக் குறைவுடனும் ஏற்பட்ட மாறுதல்.



சென்னை மருத்துவக் கல்லூரி மாணவி - செல்வி மணிகுமாரிக்கு கர்நாடக இசைப் போட்டியில் முதல் பரிசாக (மத்திய அரசு நிதியமைச்சர்) டாக்டர் சர் R. K. ஷண்முகம் செட்டியார் வெள்ளிக் கோப்பையைப் பரிசளிக்கிறார்.



1962-ல் டாக்டர் மணிகுமாரி அமெரிக்கா மருத்துவ மனையில் பணியாற்றிய பொழுது (மருத்துவர் உடையில்)



திரு. சா. கணேசன் அவர்கள் விடுதலையை முன்னிட்டு நண்பர்கள் பாராட்டு விழா.

(விவரம் தனியே)

1942ம் ஆண்டு அலிபுரம் சிறையிலிருந்து விடுதலை பெற்ற

திரு. சா. கணேசன் அவர்கட்கு நண்பர்கள் பாராட்டுக் கூட்டம்.

முதல் வரிசை : திருவாளர்கள் 1. எஸ். வையாபுரிப் பிள்ளை, 2. வ. ரா , 3. நாமக்கல் கவிஞர் வெ. ராமலிங்கம், 4. எம். பக்தவத்சலம், 5. குமாரசாமி ராஜா, 6. ஸி. என். முத்துரங்கம், 7. சா. கணேசன், 8. மெ. நா. சித. சிதம்பரம், 9. தினமணி டி. எஸ். சொக்கலிங்கம், 10. ரசிகமணி டி. கே. சி., 11. தீப. நடராஜன், 12. பி. ஸ்ரீ. ஆச்சாரியார், 13. பெ. நா. அப்புசாமி, 14. இராம சுப்பிரமணியம்

இரண்டாவது வரிசை : திருவாளர்கள் 1. ..........., 2. ..........., 3. வை. கோவிந்தன், 4. சு. ராம. அரு. சுப்பையா, 5. ..........., 6. ம. பொ. சி. 7. நடிகர் கே. எஸ். அனந்தநாராயணன், 8. சித. இராமநாதன், (தவத்திரு இராமநாத சுவாமிகள்) 9. பரலி சு. நெல்லையப்பர், 10. மு. அருணாசலம், 11. நேமத்தான்பட்டி பழ. கிருஷ்ணன், 12. ........., 13. பி. வி. சுப்ரமணியம், 14. அ. தெ. மு. நடராஜன்

மூன்றுவது வரிசை : திருவாளர்கள் 1. காரைக்குடி நாராயணன், 2. ......, 3. ரா. கிருஷ்ணசாமி, 4. சு. நா. அழகப்பன், 5. ........., 6. மயிலை ரத்னசபாபதி, 7. மெ. நா. மெ. மெ, மெய்யப்பன், 8. சந்திரசேகர முதலியார், 9. ரா. வெங்கடராஜலு, 10. ......... 11. ஏ. கே. செட்டியார், 12. ப. ராமசாமி

தரையில் இருப்பவர் செல்வி மணிகுமாரி (நீலாவதி—இராம சுப்ரமணியம் மகள்) சகோதரி நீலாவதியார் சிறையிலிருந்தமையால் இடம் பெறவில்லை

பட்டையோ இணைப்பதாக இருககலாம். ஆனால் மேனாட்டார் தினமொரு புதிய புதிய வாகனத்தையமைத்து இன்பம் நுகர்கின்றார்கள். மோட்டார்களை எடுத்துக் கொண்டால் வருஷத்துக்கு வருஷம் 'நியூ மாடல்' என்ற பெயரோடு, புதிய அமைப்புகளோடு, சௌகரியங்களோடு வெளியிடுகின்றார்கள். ஆகாய விமானங்கள் எத்தனையோ மாதிரியில் செய்யப்பட்டுவிட்டன. ரேடியோ அற்புதமான அமைப்பாக முடிந்துவிட்டது. இங்கு இந்தியாவில் ஒருவன் அதனைச் செய்துவிட்டானென்றால் கடவுள் செய்து விட்டதாக நினைத்துக் கொள்ளுவார்கள். எனவே நம் நிலைமையையும் வெளிநாட்டார் நிலைமையையும் ஒத்து நோக்குதல்வேண்டும். சீர்திருத்தம் இன்றியமையாததாகும். நாமிருந்தபடி இருப்பதென்றால் பகுத்தறிவு படைத்தவராக மாட்டோம். தகுந்த புதிய முறைகளைக் கையாள வேண்டும். எங்களை கௌரவப்படுத்தியதற்காக மீண்டுமொரு முறை உங்களுக்கு நன்றி செலுத்திக் கொள்கிறேன்.

அப்பால் ஸ்ரீமதி நீலாவதி அவர்கள் பேசியதாவது:-

பேரன்புமிக்க சகோதரர்களே!

இன்று எல்லோரையும் ஒன்றாக இங்கு காணப் பெற்றதற்கு மிகவும் சந்தோஷமெய்துகிறேன். எங்கள் கலப்புத் திருமணத்தைப் பாராட்டி நீங்கள் கௌரவப் படுத்தியதற்காக எங்கள் நன்றி உரியதாகின்றது. இந்தச் செட்டிமார் நாட்டில் கலப்பு மணத்திற்கு இவ்வளவு ஆதரவு இருக்குமென்று முன்பு நான் கருதவில்லை. கலப்புக் கல்யாணங்களினால் ஜாதி என்கின்ற கொடிய முறை ஒழிகின்றது. அது ஒழிந்தாலல்லது நம் தேசம் விடுதலை பெறாது. ஆதியில் நான்கு ஜாதி

யினரை வகுத்தனராம். இப்போது நாலாயிரமாக மாறி எவ்வளவோ கொடுமை செய்கிறது. இவைகளெல்லாம் வயிற்றுப் பிழைப்புக்காக ஏற்படுத்தப்பட்டவைகளாகும். இந்த ஜாதிகளையேயன்றி பெண்களுக்கு ஆண்களிடமிருந்தும் கஷ்டம் ஏற்படுகின்றது. அதுவும் ஒழிய வேண்டும். நம் நாட்டின் கீழான நிலைமைக்குப் பெண் அடிமைகளே காரணம். எங்கள் கல்யாணத்தினுல் ஜாதியைத் தொலைத்துவிட்டோம் என்று சிலர் கூறலாம். ஜாதி எப்படி நாட்டில் இருக்க முடியும்? இனிமேல் ஜாதி பித்தலாட்டமும் சமய ஏமாற்றமும், அடிமையாக்கும் கொடுமைகளும் நம் நாட்டில் இருக்கலாகாது. எங்களைப் பாராட்டிய தன வணிக நாட்டு அன்பர்களுக்கு எங்கள் வந்தனத்தை மீண்டும் ஒருமுறை செலுத்திக்கொள்கிறேன்.

அப்பால் உபசார விருந்துக்கமிட்டிக் காரியதரிசி திரு. நாராயணன் செட்டியாரவர்கள் அழைப்புக்கிணங்கி அங்கு விஜயம் செய்த கனவான்களுக்கும் விருந்திற்காக வீடு கொடுத்து உதவிய திரு. ஆ. சொக்கலிங்கம் செட்டியாரவர்கட்கும் நன்றி கூறினுர்கள். சுமார் 7 மணிக்குக் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

நன்றி. குமரன் 6.11.1930

## திருமணத்தைப் பாராட்டி தந்திச் செய்திகள்

சீர்திருத்தக் கலப்பு மணம் செய்து கொண்ட திரு நீலாவதி ராமசுப்பிரமணியத்தைப் பாராட்டுகின்றேன்.

சுப. முத்தையா
கிள்ளான் (மலேயா)
9.10.30

நீலாவதி ராமசுப்பிரமணியம்கலப்புமணத்தை வாழ்த்துகிறேன்.

P. K. அருணுசலம் (P. K. அருணுசலக் கௌண்டர்)
அண்ணுமலை யூனிவர்சிட்டி ஹாஸ்டல்
அண்ணுமலைநகர் 14.10.30

நீலாவதி ராமசுப்பிரமணியம் திருமணம் பற்றி அளவுகடந்த மகிழ்ச்சி அடைகிறேன்.

M. M. ரெங்கநாதன்
மீன்லா (பர்மா) 14.10.30

நீலாவதி ராமசுப்பிரமணியம் கலப்பு மணத்தைப் பாராட்டுகிறேன்.

A. R. L. ராமசாமி செட்டியார்
அவுப்போ (பர்மா) 15.10.30

பல எதிர்ப்புக்களைப் பொருட்படுத்தாது நீலாவதி அவர்களை வாழ்க்கைத் துணைவியாகப்

பெற்ற ராமசுப்பிரமணியத்துக்கு வாழ்த்துக்கள்.

சித. ராமநாதன், (V. C. T. RM)
தோஞ்சை (பர்மா) 16.10.30
(பிற்காலம், கோவிலூர் தவத்திரு ராமநாத
சுவாமிகள்)

சீர்திருத்தக் கலப்பு மணத் தம்பதிகள் நீலாவதி ராமசுப்பிரமணியத்தைப் பாராட்டுகிறேன்.

ராம. சுப. பழநியப்பன் (K. S. A. R. M.)
மாந்தளே (பர்மா)
23.10.30

கலப்பு விவாகம் செய்து கொண்ட நீலாவதி ராமசுப்பிரமணியத்தைப் பாராட்டுகின்றேன்,

லெ. சிதம்பரம்
அவுப்போ (பர்மா)
19.11.30

நீலாவதி ராமசுப்பிரமணியம் திருமணச் செய்தி அறிந்து ஆனந்தமடைந்தேன்.

கோனகர் சுப்பிரமணியன்
S. R. M. M. C, T.M. Ampang St
கோலாலம்பூர் (மலேயா)
23.10.30

நீலாவதி ராமசுப்பிரமணியம் திருமணத்தைப் பாராட்டுகிறோம்.

தலைவர். ராமேஸ்வரம் பிராமணரல்லாத
இளைஞர் சங்கம் 4.11.30

செல்வர்கள் நீலாவதி ராமசுப்பிரமணியம் திருமணம் உறுதியான சீர்திருத்த திருமணமாகும். வாழ்த்துகிறேன்.

**வயி. சு. ஷண்முகம்**
பத்துப்பகாட், சிங்கப்பூர்
**15.10.30**

நீலாவதி ராமசுப்பிரமணியம் கலப்புத் திருமணம் தனவணிக நாட்டுச் சரித்திரக் குறிப்பில் ஒரு முக்ய ஸ்தானம் பெற்றது.

**ராம. ரெங்கநாதன்**
மீன்லா (பர்மா)
**4.11.1930**

திரு நீலாவதி ராமசுப்பிரமணியம் காதல் கலப்பு மணம் நடைபெற்றதற்கு மகிழ்வுறுகிறேன்.

**பெ. பெரி. சுப்பிரமணியம**
கொழும்பு "வீரகேசரி" ஆசிரியர்
**8.10.30**

நாங்கள் மகிழ்ச்சியோடு தம்பதிகளை ஆசீர்வதிக்கும்படிகடவுளை வேண்டிக்கொள்கிறோம்.

**கோலாலம்பூர் தனவணிக வாலிபர்கள்**
**20.10.30**

நாங்கள் பொருத்தமான தம்பதிகளாகிய உங்களை ஆசீர்வதிக்கின்றோம்.

**திருப்பதி செட்டியார், கருப்பன் செட்டியார், ராமன் செட்டியார்**
சிங்கப்பூர் **17.10.30**

ராமசுப்பிரமணியம் நீலாவதி கலப்புத் திருமணத்தைப் பாராட்டுகிறோம்.

இளைஞர் சங்கம். ஈப்போ (மலேயா),
8.10.30

முதல் மந்திரி டாக்டர் P. சுப்பராயன் வாழ்த்து சென்னை அரசாங்க முதல் மந்திரி கனம் டாக்டர் P.சுப்பராயன் அவர்கள் தனது மனைவியாரை லண்டன் வட்ட மேசை மகாநாட்டுக்கு அனுப்பிக் கொடுப்பதற்காக பம்பாய் செல்ல வேண்டியிருப்பதால் நீலாவதிராமசுப்பிரமணியம் திருமணத்திற்கு திருச்சிக்கு வர முடியவில்லை. மணமக்கள் இன்பமாய் நீடூழி வாழவேண்டுமென்று ஆசைப்படுகிறேன்.

P. சுப்பராயன் 5.10.30
சென்னை.

நீலாவதி ராமசுப்பிரமணியத்தை மனமாரப் பாராட்டுகிறேன்.

சா. தெ. நடராஜன் செட்டியார்
பினாங்கு (மலேயா) 9.10.30

நாங்கள் மகிழ்ச்சியுடன் ஆண்டவனிடம் தம்பதிகளை ஆசீர்வதிக்கும்படி வேண்டுகிறோம்.

தனவைசிய வாலிபர்கள்- கிள்ளான் (மலேயா)
9.10.30

நீலாவதி ராமசுப்பிரமணியத்தின் உறுதி

யான கலப்புமணத்தை மனமாரப் பாராட்டு கிறேன்

**சித.சோம. சிதம்பரம் செட்டியார்-டெலுக்கான்ஸன் (மலேயா) *10.10.30***

நீலாவதி ராம சுப்பிரமணியம் தைரியமாக கலப்பு மணம் செய்து கொண்டதை நாங்கள் அங்கீகரிக்கின்றோம்.

கோலக்கஞ்சார்(மலேயா) வாலிபர்கள்

ராமசுப்பிரமணியம் நீலாவதியாரை திரு மணம் செய்திருப்பதறிந்து மிகவும் பாராட்டு கிறேன். அவர்கள் இருவருக்கும் கடவுள் அருள் புரிவாராக.

**செல்லப்பா ராமசாமி. இரங்கூன் (பர்மா)14.12.30**

## சிவநேசர் திருக்கூட்டத்தாரின் கடும் எதிர்ப்பு.

தனவணிக நாட்டில் பலவான்குடி ராமசாமி செட்டியாரின் தலைமையில் சிவநேசர் திருக்கூட்டம் என்று ஒன்று அமைத்து 'சிவநேசன்' என்ற ஒரு வாரப் பத்திரிகையை நடத்தி வந்தார்கள். தலைவரான ராமசாமிச் செட்டியார் வாரந்தோறும் சகோதரி நீலாவதி ராமசுப்பிரமணியம் கலப்பு மணத்தைப் பற்றியும் ஆ. தெக்கூர் சுந்தரி-அருணகிரி கலப்புமணத்தைப் பற்றியும் மட்டமான பாஷையில விமர்சனம் செய்து கொண்டும் ஆபாசமாக எழுதியும் பல சீர்திருத்தங்களில் உழைக்கும் திரு சொ. முருகப்பா போன்றவர்களைக் கடுமையாக தாக்கியும் கலப்பு மணம், விதவா விவாகம் இழிவென்றும் மனம் போன போக்கில் வெறுப்பாக எழுதி வந்தார். இது மட்டுமல்ல, தெ.பொ.கிருஷ்ணசாமிப்பாவலர் நடத்திய வாரப்பத்திரிகையிலும் தீவிரமாக எதிர்த்தார். (தெ. போ. மீ. சகோதரர்) இதற்குச் சரியான பதில் கூறுமுகத்தான், பெரியார் ஈ. வெ. ரா. அவர்கள் தமது குடியரசு பத்திரிக்கையில் 'சிவநேசர் சிறுமை' என்ற ஒரு தலையங்கம் எழுதினர்கள். மேலும் இதன் காரணமாக 'பெண் ஏன் அடிமையானுள்' என்ற நூல் ஒன்று பெரியார் ஈ. வெ. ரா. அவர்களாலும் 'பெண்ணின் பெருமை' என்ற பெயரில் திரு. வி. கல்யாண சுந்தரனுர் ஒரு,

நூலும் எழுதி வெளியிட்டார்கள். திரு. வி. க. அவர்கள் மிகுந்த சைவப்பற்றுடையவராக இருந்து கொண்டே கலப்பு மணத்தையும் கணவன் இழந்த மாதர் மறு மணத்தையும் நாட்டில் நடைபெற ஊக்கம் காட்டினுர். மேலே குறிப்பிட்ட சிவநேசர் கூட்டத்தாரும், முக்கிய மாக ராமசாமி செட்டியாரும் சைவ நெறி கொள்கைக்கு ஏற்ப சிவநேசத்தை வளர்க்க முற்பட்டிருக்கலாம். அதை எங்கோ விட்டுவிட்டு கலப்பு மணத்தை முழு மூச்சாக திட்டித் தீர்ப்பதிலும், கூட்டங்கள் போட்டு பிரசாரம் செய்வதிலேயும் முழுக் கவனம் செலுத்தினுர் கள். முடிவாக சிவநேசர் திருக்கூட்டம் மறைந்துபோய் அதன் தலைவர் ராமசாமி செட்டியாரே தஞ்சை மாவட் டம் திட்டை என்ற திருத்தலத்தில் கலப்பு மணம் செய்து கொண்டு குழந்தை குட்டிகளுக்குத் தந்தை யானுர். அது சமயம் சிவநேசன் பத்திரிக்கை இல்லை. இருந்திருக்குமானுல் கலப்பு மணத்தைப் பற்றி என்ன எழுதியிருப்பாரோ! சுமார் ஐநூறு ஆண்டுகட்கு முன்பு சோழ மன்னர் ஆட்சியிலிருப்பதை சில காரணங்களால் புறக்கணித்து காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து பாண்டி நாட்டிற்குக் குடியேறிய தனவணிக சமூகத்தினர் தங்கள் பெண்மணிகள் உடன்வர மறுத்த காரணத் தால் பாண்டி நாட்டிலுள்ள சைவ வேளாளர் குலத்தில் வெள்ளாட்டிகளை (அந்தக் காலத்தில் ஆண்களை வெள் ளாளன்என்றும்பெண்களை வெள்ளாட்டி என்றும் கூறு வது மரபு) கலப்பு மணம் செய்து கொண்டு வணிகத் துறையை வளர்க்கலானுர்கள். இது சரித்திரம் கூறும் சான்று.கலப்பு மணத்தைத் தாக்குவதென்ருல் ஐநூறு ஆண்டுகட்கு முந்திய கலப்புமணத்தின் வேர் தூர்களை எட்டிப் பார்த்திருக்க வேண்டும். தனிவணிக நாட்டில் சிவத்தொண்டு செய்து சைவப் பற்றுடையார் பலர்

இல்லாமலில்லை. அவர்களில் முதன்மையானவர் காரைக்குடி சொக்கலிங்க ஐயா ஆவர். மற்றும் சொ. திருநாவுக்கரசு செட்டியார். முத்த. வெ. சொக்கலிங்கம் செட்டியார், கா. கா. அழகப்ப செட்டியார், தேவகோட்டை ராமநாதன் செட்டியார், இராமசந்திர புரம் T. N. முத்தையா செட்டியார், அரிமளம் அண்ணாமலை ஐயா ஆகிய இது போன்ற இன்னும் பலர் உண்மைத் தொண்டர்கள் எனலாம். இவர்கள் சைவத் தொண்டைத் தவிர வேறு எதிலும் ஈடுபட மாட்டார்கள். மேற்கண்ட சிவநேசன் ராமசாமி செட்டியார் பற்றி நான் கூறியிருப்பதை வைத்து தனிவணிக நாட்டை குறைவுபடுத்தியதாக வாசகர்கள் எண்ணி விடக்கூடாதெனக் கேட்டுக் கொள்கிறேன்.அந்நாட்டில் பல இளைஞர்கள் நுட்பக் கலைகளில் வல்லுநர்கள் என்பதையும், நான் நன்கறியேன்.

மனோன்மணீய இலக்கியத்தில், ஒரு புனித பாத்திரமாக திரு. சுந்தரம்பிள்ளை அவர்கள் வடித்துத் தந்த 'சுந்தர முனிவரோ!' என்று எணணத் தோன்றும் சாந்த வடிவம் தவத்திரு. இராமநாத சுவாமிகள் பிறந்த நாடு. அது மட்டுமல்ல அறிவுக் கண்ணைத் திறக்க எண்ணிக் கொடுக்காமல் அள்ளிக் கொடுத்த அரசர் அண்ணாமலையார் பிறந்த நாடு. அதுமட்டுமல்ல அறிவு வாடிக் கிடந்த மக்களுக்கு பாரியைப் போல் வாரி வழங்கிய வள்ளல் அழகப்பர் பிறந்த நாடு. அது மட்டுமல்ல மாணிக்கவாசகர் அருளிய திருவாசகத் தேனை மக்கள மாந்த 'நீத்தல் விண்ணப்பத்தை' விரிவுரையாக விளக்கித் தந்த மகிபாலாபுரி பண்டிதமணி மு. கதிரேசனார் பிறந்த நாடு. அது மட்டுமல்ல புதைந்து மங்கிக் கிடந்த கம்பன் புதையலை வெளிப்

படுத்தி பொங்க வைத்துக் காண்பித்த கம்பன் அடிப் பொடி கணேசனார் பிறந்த நாடு. அது மட்டுமல்ல தமிழெல்லாம் கடலா; கடலெல்லாம் தமிழா என்று வியக்குமாறு வங்கக் கடலாகினும் சங்கத்தமிழ் கடைந்தெடுக்கும் ஆற்றல் மிக்க தமிழ்க்கடல் மேதை ராய. சொக்கலிங்கனார் பிறந்த நாடு. அதுமட்டுமல்ல- அறிவெல்லாம் உடம்பா உடம்பெல்லாம் அறிவா என அறிவு ஓசை ஒலிக்கும் சீர்திருத்தக் குன்றிலமர்ந்த குமரன் ஆசிரியர் திரு சொ. முருகப்பர் பிறந்த நாடு. (ராய. சொக்கலிங்கனாரும், சொ. முருகப்பரும் இளம் வயதிலேயே சிதம்பரம் ஐயர் என்பவரிடம் முறையாக இலக்கண இலக்கியங்களைப் பிழையறக் கற்றுத் தேர்ந் தவர்கள்.) அது மட்டுமல்ல ஆகாயத்தில் பறந்து பல அற்புத சாகஸங்களை காட்சி காட்டிய ஆவுடையப்பர் பிறந்த நாடு. அதுமட்டுமல்ல இடது கை கொடுத்தால் வலது கை பிடுங்கிக் கொள்ளும் காட்சியைப் பார்த்துக் கொண்டேயிருக்கும் நமக்கு ஒரு கைக்குத் தெரியாமல் மறுகை கொடுத்த தர்மசீலர் தர்ம நாராயணர் பிறந்த நாடு. அது மட்டுமல்ல சொல்லெல்லாம் கவி யாக கவியெல்லாம நறுங்கனியாக கலை ஊற்றுக் கொப்பளிக்கும் கவிக்குன்று கண்ணதாசனைப் பெற்ற நாடு. கண்ணதாசன் தவறைத் தவறென்று உண்மை பேசும் உத்தமர், குழந்தை வடிவம், குமிழ் சிரிப்பு, அதுமட்டுமல்ல, உடம்பை வளர்த்தேன், உயிர் வளர்த் தேனே என்பதற்குச் சான்றாக உடல் பலசாலி வீரர் கீழைக்கதிரோன் சாண்டோ சோமசுந்தரனாரைப்பெற்ற நாடு. அதுமட்டுமல்ல அப்பா குழந்தைகளுக்குப் பாட்டு சொல்லிக் கொடுத்தால், அன்பாய்க் கேட்கும் என்பதறிந்து மலைமலையாகப் பாடிக்குவித்த குழந்தைக் கவிஞர் **'வள்ளி அப்பா'** வைப் பெற்ற நாடு. அதுமட்டுமல்ல பண்டை நாளில் பாட்டெல்லாம் பாடிப்

பாடிப் பரவசமளித்த பாடுவார் முத்தப்பர் பிறந்த நாடு. அது மட்டுமல்ல தரைமட்டமிருந்த திரைபடத்தை உயர் மட்டமாக்கிக்காட்டினுர் ஒரு முயற்சியாளர். அவர் தான் 'முயற்சி தன் மெய்வருந்தக் கூலி தரும்' என் பதை மெய்ப்பிக்கத் தோன்றிய ஏவி. எம். மெய்யப்பர் பிறந்த நாடு. அதுமட்டுமல்ல ஏங்கிக் கிடந்த வங்கித் தொழிலை ஓங்கச் செய்த **M. C. T.** முத்தையா சிதம் பரனுரும் வாடிக் கிடந்த தொழிலாளர் குடும்பத்தை தேடி வகை செய்த கருமுத்து தியாகராயரும் **A. M. M.** முருகப்பரும் இன்னேரன்ன பலரையும் பெற்ற நாடு. மகளிர் அறிவுக் கண்களைத் திறக்க அடி கோலி வைத்த கலைமகள் கல்லூரியை நிறுவிய கோப்பனுபட்டி மெய்யப்பர் பிறந்த நாடு என்று அடுக்கிக் கொண்டே போகலாம்... இது கட்டுரை யன்று. கருத்து, ஒரு விளக்கமேயாகும்.

# புதுமை விழாவில் வரவேற்பு

மேகண்ட நிகழ்ச்சிகளுக்குப் பிறகு முதன் முதலாக மணமகன் சொந்த ஊரான (பகை மிகுந்த) கொத்த மங்கலத்திற்கு மிகஅருகிலுள்ள லெட்சுமிபுரம் என்ற ஊரில்திருவாளர்களான சொ.மெ.நா.கோவிந்தன்செட்டியார்,சோலச்சி ஆச்சி ஆகியவர்கள், தங்கள் புதல்வன் நாராயணன் புதுமை விழா. (முதலாவது பிறந்த நாள் விழா) நிகழ்ச்சிக்கு மிகத் துணிச்சலாக கலப்பு மணத் தம்பதிகளை வரவழைத்து சிறப்புவிக்க ஏற்பாடு செய்திருந்தார்கள். அதற்கு மிக்க நன்றி செலுத்துகிறேன். இச்செய்தியறிந்து இம்மணமக்களைப் பார்க்க வேண்டுமென்ற ஆர்வத்தில் பக்கத்து ஊர்க்காரர்களும் உள்ளூர்க் காரர்களும்,ஏன்,கொத்தமங்கலத்துக் காரர்களும் கூட ஒவ்வொருவர் வீட்டு வாசற் படியிலும் சாலையோரங்களிலும் சாரி சாரியாக நின்று கொண்டு அதிசயமாகக் கலப்பு மணமக்கள் வருவதைப் பார்த்துக் கொண்டிருந்தது அதிசயக் காட்சியாகவே இருந்தது.

## முதல்மேடை திருச்செந்தூரில் பிரசாரம்

தமிழ்நாட்டில் பல ஊர்களுக்கும் வர வேண்டுமாய் பல அன்பர்கள் வேண்டுகோள் விடுத்திருந்தார்கள். அதில் முதன்முதலாக மிக்க ஆர்வத்துடன் அழைத்திருந்த திருச்செந்தூர் Y.M.I.A. சங்க அங்கத்தினர்கள் அழைப்புக்கிணங்க திருச்செந்தூர் சென்றார்கள். அங்கு பாரதியார் பெண் விடுதலை பற்றியும் சுதந்திர இந்தியா பற்றியும் பேச குறிப்பிடப்பட்டிருந்தது. அதற்கு செக்கிழுத்த செம்மல் திரு. வ. உ. சிதம்பரனார் அவர்கள் தலைமை வகித்தார்கள். சகோதரியாரின் வீர உரைகளைக் கேட்ட தலைவர் வ. உ. சிதம்பரனார் அவர்கள் முடிவுரையில் இம்மாதிரி சகோதரிகள் வீர உரைகளை பாரதி நேரில் கேட்டால் கூத்தாடி மகிழ்ச்சிக் கடலாடுவான் என்று சொன்னார்கள். மேற்படி கூட்டத்திற்கு ஏற்பாடு செய்து முக்கிய பங்கேற்றுக் கொண்டவர்களில் ஒருவரை இங்கு அறிமுகப்படுத்த வேண்டுவது மிகமிக முக்கியமாகும். அவர்தான் திருச்செந்தூர் கோவில் அர்ச்சகர்களில் ஒருவரான திரு. மு. கிருஷ்ண சர்மா என்பவர். பெரியார் ஈ. வெ. ரா. அவர்களைப் பெரிதும் மதிப்பவர். நல்ல சீர்திருத்த வீரமனப்பான்மையுடையவர். சுயமாகப் பாடல்களை சீர்திருத்தமுறையில்

அருவி போல் இயற்ற வல்லவர். உதாரணத்திற்கு அவர் பாடிய ஒரு பாடலைக் கீழே குறிப்பிடுகிறேன்.

"உற்றுரும் நீரும் சேர்ந்து உண்டுவந்தாடிக்களிக்க
சிற்றுடை சுற்றத் தெரியாச் சிறுமியர்க்கு—
பொற்றுலி
பூண்பிக்கும் புன்றெழிலால் அன்னவர் நூல்
அற்றுலஃதும் பிழையோ அன்றேல்
விதிப்பயனே?!"

இம்மாதிரி பல பாடல்கள் பாடியுள்ளார். 'சுமார் 60 ஆண்டுகளுக்கு முன்பு 7, 8 வயது சிறுமியருக்கு வேக வேகமாக மணம் முடித்துவிடுவார்கள்)

திரு. மு. கிருஷ்ணசர்மா அவர்களும் அவர் மனைவியாரும் நீலாவதி ராமசுப்பிரமணியம் தம்பதிகளை 2-3 தினங்கள் தங்கள் இல்லத்திலேயே தங்கவைத்து விருந்து உபசாரம் செய்து பல இடங்களுக்கு அன்போடு அழைத்துச் சென்றுர்கள். திருச்செந்தூரில் திரு. மு. கிருஷ்ணசர்மாவுக்கு அவர் இனத்தாராலேயே பலரின் எதிர்ப்பு உண்டு. அவர் எதிர்நீச்சல் வாழ்க்கை நடத்தியவர் என்பது குறிப்பிடத் தக்கது.

திருச்செந்தூரிலிருந்து நேரே சேரமாதேவி சென்று குருகுலம் பார்க்கச் சென்றுர்கள். மேற்படி குருகுலத்திற்கு மலேயா அனபர்கள் முக்கியமாக வயி. சு. ஷண்முகம் ஆகியோர் உதவிப்பெற்று V. V. S ஐயரால் நிறுவப் பட்டு மகாதேவய்யரால் நிர்வாகம் செய்யப்பட்டு வந்தது. காந்திய முறையில் ஆரம்பிக்கப்பட்ட அங்கு மாணவர்களை இரண்டாகப் பிரித்து பிராமண மாணவர்களுக்குத்தனி அறையிலும்

மற்றவர்களுக்குத் தனி அறையிலும் உணவு பரிமாறப் பட்டது கண்டு சகோதரியார் மனம் வெதும்பிப் போனார்கள். தேசத்தியாகி V.V.S. ஐயர் பிரபலமானவர். தொண்டு செய்யவே பிறந்தவர் எனலாம். பல துறைகளில் மகா மேதை. (அதை நிர்வகித்த மகா தேவய்யர் வேறு) இப்படிப்பட்டவர் ஆரம்பித்த ஒரு சிறந்த தொண்டா இக்கதியாவது என்று சகோதரியின் மனம் வெதும்பியதில் ஆச்சரியம் இல்லை (இதற்காக ஒரு போராட்டமே நடந்தது) இச்சம்பவம்தான் ஈ. வெ. ரா. பெரியாரை பிராமண எதிர்ப்பு இயக்கத்தை வலுப் படுத்தக் காரணமாயிருந்தது.

# தமிழ்நாட்டில் பிரச்சாரம்

## சமபந்தி போஜனம்

1931 ஆண்டு முதல் 1936ம் ஆண்டுவரை தமிழ் நாட்டில் உள்ள எல்லா மாவட்டத் தலைநகரங்களிலும் அதிலுள்ள தாலூகா கிராமங்கள்தோறும் பல நூற்றுக் கணக்கான சமூக சீர்திருத்தப் பிரசாரங்கள் செய்து வந்தார். பிரசாரத்தில் கலப்பு மணத்தால் ஜாதி ஒழிப்பு மாதர் மறுமணத்தின் அவசியம், தீண்டாமை ஒழிப்பு திருமணத்தில் தேவையற்ற மூடப்பழக்க வழக்கங்கள் பொட்டுக் கட்டுதலை ஒழித்து பதியிலார் இனம் என்ற ஒன்று மறையச் செய்தல், 7-8வயது சிறுவர்களுக்கு திருமணம் செய்தலை ஒழித்து சாரதா சட்டத்திற்கு ஆதரவு ஆற்றியது, பெண்கள் ஆடவருக்குச் சமமாக கல்வி கற்று அடிமை வாழ்விலிருந்து விடுதலைபெறு வது, பெண்களுக்குச் சொத்துரிமை. போன்ற பல வாகும்.

இவை போன்ற பல துறைகளில் ஈடுபட்டு சுமார் 1000த்துக்குமேலானசொற்பொழிவுகள்செய்து வந்தார். மேலும் திருச்சியில் தங்கியிருந்த ஆறு ஆண்டுகாலம் புரோகித மறுப்புச் சங்கம் போன்ற பல சங்கங்கள் அமைத்துநூற்றுக் கணக்கான கலப்புமணங்களும் மாதர்மறுமணங்களும்அரசுபதிவுடன்செய்வித்துஅவர் களுக்கு தன்னாலும் பிற வசதிபடைத்தோர் மூலமாகவும் வேண்டிய உதவி ஒத்தாசை செய்தார். தீண்டாமை ஒழிப்புக்காக ஒவ்வொரு மாதமும் முதல்தேதி அன்று ஒரு சமபந்தி போஜனம் ஏற்பாடு செய்து அதைச்

சிறப்பாகச் செய்து வந்தார். அதன் விவரம் பின்வருமாறு:—ஹரிஜனங்கள் அல்லாத மற்றையோர் 50 பேர்களிடம் நபர் ஒன்றுக்கு அரை ரூபாய் வசூலித்து ஒரு உணவு விடுதியில் 100 பேருக்கு தயாரித்து பகல் திருச்சி முனிசிபல் சத்திரத்தில் இனமாக இடம் கேட்டு வாங்கி 100 இலைகள் போட்டு 50 ஹரிஜன மக்களை (ஆடவர் பெண்டிர்) ஒரு இலைவிட்டு ஒரு இலையில் அவர்களை முதலில் அமரச் செய்து பின்பு இடையிலுள்ள ஹரிஜன மல்லாத மற்றையோர் (ஆடவர் பெண்டிர்) அமரவைத்து அப்பளம், வடை, பாயசத்துடன் சமபந்தி போஜனம் சுமார் 2 ஆண்டுகாலம் நடை பெற்றது. சுமார் 50 ஆண்டுகளுக்கு முன்பு கால் ரூபாயில் இத்தனை சிறந்த உணவு கிடைத்தது இன்றையச் சமுதாயத்தினருக்கு பெரும் வியப்பாக இருக்கலாம்.

# காந்தியடிகளின் சந்திப்பு

காந்தி அடிகள் 1933ல் தமிழ்நாட்டுக்கு வந்திருந்த சமயம் திருச்சியில் டாக்டர் T. S. S. ராஜன் அவர்கள் இல்லத்தில் தங்கிபிருந்தார். சகோதரியாருக்கு காந்தி அடிகளை நேரில் கண்டு பேச வேண்டுமென்ற அவாவில் திருச்சியிலுள்ள காங்கிரஸ் முக்யஸ்தர்களான T. S. S. ராஜன், சங்கிலியா பிள்ளை, சாமிநாத சாஸ்திரி ஆகியவர்களிடம் தெரிவித்த போது காந்தி அடிகளை டாக்டர் ராஜன் இல்லத்தில் சுமார் அரைமணி நேரம் சந்தித்துப் பேச ஏற்பாடு செய்திருந்தார்கள். அதுபோல் மேற்படிசந்திப்பில் தான்செய்துவரும் சமூக சீர்திருத்த தொண்டுகளைப் பற்றிச் சொன்னபோது காந்தி அடிகள் மகிழ்ச்சியைத் தெரிவித்தார். சந்திப்பில் விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்ட முக்கிய விஷயம் நாட்டு மக்களுக்கு சமூகசீர்திருத்தம் முதலில் அவசியமா? நாட்டுவிடுதலைபெற அன்னியர் ஆட்சியை ஒழிக்க வேண்டியது அவசியமா? என்பதேயாகும். நீண்ட நேரம் கேள்வி பதில்களுக்குப் பின் நாட்டு விடுதலைக்குப் போராடுவது அவசியமும் அவசரமுமாகும் என்றும் கூடவே சமூக சீர்திருத்தப் பிரசாரம் செய்வது ஏற்றுக் கொள்ளத்தக்கது தான் என்று காந்தி அடிகள் கூறியதை சகோதரியார் மகிழ்வுடன் ஏற்றுக் கொண்டார். அச்சமயம் சகோதரியார் பட்டாடை அணிந்து கொண்டும் நகைகள் பல அணிந்து கொண்டுமிருந்ததைக் கண்ட காந்தி அடிகள் நீங்கள் பட்டு அணிவதை விடுத்து கைத்தறி ஆடைகளை அணிய வேண்டுமென்றும் கதர் அணிந்

தால் நான் பெருமகிழ்ச்சி அடைவேன் என்றும் பெண்கள் ஏராளமான நகைகள் அணியக் கூடாதென்றும் மேலும் சீர்திருத்தவாதியாகிய தாங்கள் முக்கியமான ஒன்றிரண்டைத் தவிர மற்றவற்றை அகற்றிவிட வேண்டுமென்றும் வேண்டுகோள் செய்வதாகச் சொன்னார். சகோதரியார் அவர் முன்னிலையிலேயே அப்படியே செய்வதாக உறுதிகூறி அன்று முதலே நகைகள் அணிவதைக் குறைத்து கதர் அணியத் தொடங்கி இறுதிவரை கதராடை அணிந்துவந்தார். அரைமணிநேர நேர்முகப் பேட்டி ஒருமணிநேரம் நீடித்தது. காந்தியடிகள் நூல் நூற்றுக் கொண்டே அமைதியாக பேச்சுக்கள் நடத்தினர்.

சகோதரியார் 1940ல் சென்னை ஜில்லா மாதர் காங்கிரஸ் தலைவராகப் பொறுப்பேற்று சிறப்பாக நடைபெறச் செய்தார். தேச விடுதலைப் பிரச்சாரம் செய்ய தமிழ் நாட்டின் பல இடங்கள் சென்று தீவிரப் பிரசாரம் செய்தார்.

'சண்ட மாருதம்' (25-1-32)

தீண்டப்படாத கிறிஸ்தவர்கள் மகாநாடு

லால்குடியில் முதற்கூட்டம்

ஸ்ரீமதி நீலாவதி ராமசுப்பிரமண்யம் திறந்து வைத்தார்

ஸ்ரீமதி நீலாவதி வீரப்பேருரை

திருச்சினுப்பள்ளி ஜில்லா லால்குடி தாலுகா தீண்டப்படாத கிறிஸ்துவர் முதல் மாநாடு லால்குடி தாலுகா போர்டு ஹைஸ்கூல் கட்டிடத்தில் அமைக்கப்பட்டிருந்த பந்தலில் நாளிது ஜனவரி மாதம் 23-ம் தேதியன்று நடைபெற்றது. காலை 8-30 மணிக்குத் தலைவர்கள் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து மகாநாட்டுப்

பந்தலுக்கு பாண்டு வாத்திய கோஷத்துடன் அழைத் துச் செல்லப்பட்டார்கள். மகாநாட்டுப் பந்தல் அழகிய கொடிகளால் சிங்காரிக்கப்பட்டிருந்தது. திருவாளர் களான எஸ். எம். ஞானப்பிரகாசம் B.A. B.L. ராவ் சாகிப் வி. ஐ. முனிசாமிப்பிள்ளை எம். எல். ஸி மிஸஸ் நீலாவதி ராமசுப்பிரமண்யம், கி. ஆ. பெ. விசுவநாதம், டி. வி. சோமசுந்தரம். பி. எ. பி. எல்., டி. பி. வேதாசலம் பி. ஏ. பி. எல்., எஸ். ஜே. ரத்தின சாமி, எம். ஏ. பி. எல்., ஜேசுதாசன் பி. ஏ. பி. எல், ஜெ. ராமானுஜன், பி. ஏ. பி. எல்., திருச்சி நகரசபை கவுன்சிலர் எம். மதுரை, ரிட்டையர்டு டிப்டி கலெக்டர் ஆசீர்வாத நாடார், பி.ஏ., மிஸ்டர் எம். ஏ. அருணுசலம், திருச்சி பார்ப்பனரல்லாத வாலிபர் சங்கக் காரியதரிசி கே. என். வாசுதேவன், டி. ஆர். பால கிருஷ்ணன், ச. ம. சி. பரமசிவம் பாலகிருஷ்ணன், 'விடுதலை' ஆசிரி யர் சாமிநாதன், பகமதலி ஆகியோர்களும், திருச்சி சுயமரியாதைச் சங்க அங்கத்தினர்களும், திருச்சி பார்ப்பனரல்லாத வாலிபர் சங்க அங்கத்தினர்களும், பல சுற்றுக் கிராமத்து மக்களும், உள்ளூரிலிருந்து பலரும் ஆண்களும், பெண்களும் சுமார் 1000 ஜனங் கள் கூடியிருந்தார்கள். மகாநாட்டுப் பந்தலில் ஒவ் வொரு தூண்களிலும் "எங்கும் பேசப்படும் தீண்டா மைக்கு கத்தோலிக்க மதம் ஓர் தங்கு மடமா?"...... என்பன போன்ற வாக்கியங்கள் அட்டைகளில் எழுதிக் கட்டப்பட்டிருந்தன. 9-30க்கு மகாநாடு ஆரம்பமானது. இரு சிறுமிகளால் 'வேண்டாம் தீண்டாமையே' என்ற பாட்டு இனிமையாகப் பாடப்பட்டது. பின்னர் திருச்சி முனிசிபல் கவுன்சிலர் திரு எம். மதுரை அவர் களால் மிஸஸ் நீலாவதி ராம சுப்பிரமண்யம் அவர்கள் மகாநாட்டைத் திறந்து வைக்குமாறு பிரரேபிக்கப்

பட்டது. பிறகு நீலாவதி ராமசுப்பிரமண்யம் அவர்கள் மகா நாட்டைத் திறந்து வைத்துப் பேசியதன் சாரம்:-

அன்புமிக்க சகோதரர்களே!

தீண்டப்படாத கிறிஸ்துவர் முதல் மகாநாட்டைத் திறந்து வைக்குமாறு விரும்பிய உங்களுக்கு வந்தனம். இப்பெரிய கூட்டத்தில் ஓர் அளவு கூட பெண்கள் வராதது சகோதரிகளே! என்றுகூட சொல்ல நாவெழா தபடி செய்து விட்டது. முன்னேற்றம் வேண்டும் என்று சொல்லப்படுகிற எந்த இடத்திற்கும் உங்களது பெண்கள் வராவிடில் நீங்கள் விரும்புகிற எந்த உரிமை யும் கிட்டுவது அருமையே. தீண்டாமை என்ற ஒன்று நம்மைவிட்டு எவ்வளவு விரைவில் தொலைகிறதோ அவ்வளவு விரைவில் நாட்டு மக்களுக்குப் பல நன்மை தானே வந்தடைவது நிச்சயம். தீண்டாமையை வைத் துக் கொண்டு எந்தநன்மையும் அடைய முயற்சிப்பதில் ஒரு பயனும் இல்லை. தீண்டாமையே சுயராஜ்யத்திற்கு முட்டுக்கட்டை. அதை ஒழிப்பதே எனது முதல் வேலை என்று கூறிய காந்தி, அப்படியொரு வார்த்தை சொன்னேமா, அதை எந்த வரை செய்தோம் என்று கூட நினைத்துப் பார்க்க முடியாதபடி ஆக்கப்பட்டிருக் கிருர். உருவத்தில் எந்த பேதமில்லாத மனித ஜாதியை நான்கு ஜாதி என்று சொல்லி அதை நாலாயிரமாக்கி மேலும் பெருக விட்டுக் கொண்டிருப்பதானது மிகவும் வெறுக்கக்கூடியதாகும். ஜாதிக் கர்வத்திஞல் மக்கள் படும் தொல்லை சகிக்க முடியாததாகும். திமிர் படைத்த கூட்டத்தினரே தீண்டாமையைக் கையிலேந்தி நிற் கின்றனர் என்பது நீங்கள் அறியாததொன்றன்று. எனது திருச்செந்தூர் பிரயாண காலத்தில் ரயிலில் பிராமணர் ஒருவரும் பிரயாணம் செய்து கொண்டிருந்

தார். அவர் உணவருந்துவதற்கு முன்பு என்னை 'பிராமண ஜாதியா' என்ருர். நான் 'ஆம்' என்றேன். பல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டே உணவை அமிர்தமாகச் சாப்பிட்டார். ஆனுல் பூரா உணவும் சாப்பிட்டு முடியவில்லை. உடனே நான் 'நாயுடு ஜாதி' என்று கூறினேன். சொன்னதுதான் தாமதம் உணவு விஷமாக மாறி விட்டது. எறிந்தார் எஞ்சிய உணவுமுழுவதையும் வெளியே; பதறினுர்; திணறினுர் அந்தப் பக்காத் தீண்டாமைப் பேர்வழி. பார்த்தீர்களா! எவ்வளவு வரை மனதில் ஊறிப் போயிருக்கிறதென்று. அமிர்தம் விஷமாக மாறும் செயலைவிட வேறு என்ன கொடுமை வேண்டும். நான் சொல்லிய பிற்பாடு நாயுடு ஜாதி என்று தெரிந்து கொண்ட அப்பிராமணரைப் பற்றி நாம் ஒன்றும் கூறுவதற்கில்லை. அவர் ஜாதி! ஜாதி!! தீண்டாமை! தீண்டாமை!! என்று உருப் போட்டு ஊறிப் போய் விட்டார். அப்படியே தான் பொது ஜனங்களும் ஆகியிருக்கின்றனர். இந்து மதத்தில் தான் கொடிய தீண்டாமை இருக்கிறதென்று சாஸ்திரம் எழுதப்பட்டு அனுஷ்டிக்கப்படுகிறதென்று தெரிந்த எனக்கு அன்பே உருவாகக் கொண்ட கிறிஸ்து மதத்திலும் இக் கொடிய தீண்டாமை அனுஷ்டிக்கப் படுகிறதா என்று ஆச்சரியப்பட்டேன். சுயநலப் பார்ப்பனர்கள் உண்டாக்கிய கொடிய தீண்டாமையை கிறிஸ்து மதத்தினரும் கைக்கொள்வது மிகமிக வெறுக்கக்கூடிய செயலாகும். தவிர, கிறிஸ்து மத வேதத்தின்படி தீண்டாமை என்ற ஒன்று அறவேஇல்லை என்பது உலகமறிந்ததாகும். இந்நிலையில் கிறிஸ்துவர்களிலும் தீண்டப்படாதவர் என்று ஒதுக்கியிருப்பதானது, அவர்களது பெருந்தன்மைக்குப் பங்கப்படுத்திக் கொண்டதாகும் எனபது எனது அபிப்பிராய

மாகும். இந்த மதத்தில் பார்ப்பனர்கள் மற்றையோர்களை நசுக்கி தாங்கள் சுகமாக வாழக் கண்டு பிடித்ததான ஜாதியையும், அதன் காரணமான தீண்டாமையையும் அன்பே உருக்கொண்ட கிறிஸ்துநாதர் உபதேசங்களைப் பின் பற்றும் உண்மைக் கிறிஸ்துவர்கள் கைக்கொள்ள மாட்டார்கள் என்பது மட்டும் நான் உறுதியாகக் கூற முடியும். தீண்டாமையின் பேரில் விருப்பம் இருக்குமாயின் நெருப்பு, எலக்டிரிக்ஸிடி, பாம்பு, தேள் முதலியவைகளிடத்தில் மட்டும் உபயோகித்துக் கொண்டிருக்கலாமன்றோ! உங்களால் தீண்டப்படாதவர்களெனச் சொல்லப்படுவர்கள் தங்கள் கொடுக்கினுல் கொட்டி நீங்கள் எப்பொழுதாவது அவஸ்தைப்பட்டதுண்டா? அவர்களுக்கு விஷப்பல் இருக்கிறதென்று பயப்படுகிறீர்களா? எனக்குத் தெரிந்தவரையில் தீண்டப்படாதவர்கள் நெருப்புமாதிரி சுடமாட்டார்கள். மின்சாரசக்தி மாதிரி நரம்புகளைப் பிடித்திழுத்து உங்களைக் கொன்று விடமாட்டார்கள் என்று உறுதி கூறுகிறேன். நீங்கள் தைரியமாகத் தீண்டலாம். பிறகுதான் மேலும் தைரியம் மக்களுக்குண்டாகி சுயராஜ்யமோ, மற்ற நீங்கள் விரும்புகிற எதுவோ கிடைக்கும். நாட்டிற்கு நன்மை செய்யத் தீண்டாமையென்று சொல்லி ஓடி ஒளிகிற கோழைகள் தேவையில்லை. அவர்கள் ஒழிந்தே போகட்டும். தீண்டாமை இல்லாதவாறு செய்வது கஷ்டந்தான். அதற்கு உங்கள் ரத்தத்தைச் சிந்தாமல் தீராது. உங்கள் உடல் பொருள் ஆவியைத் தியாகம் செய்யாமல் தீராது. ஏன்? அவ்வளவு மோசமாக நாட்டிடை பரவி விடப்பட்டிருக்கிறது. நாய், பன்றி, அடைந்திருக்கும் உரிமைகூட இந்தியாவில் ஏழரை கோடிப் பேருக்கு இல்லையென்பதை உணருங்கள். தீண்டாமையை விலக்க திருச்சி ஜில்லாவில் முதல் முதல் வேலை

துவக்கப்படவேண்டுமென்பது எனது ஆசை. இங்கு பலர் உதவி செய்ய முன் வர காத்துக்கொண்டிருக்கின்றனர். இங்கு பக்கத்திலிருக்கும் ஒவ்வொரு அன்பர்களும் வேண்டிய உதவி செய்வார்களென்று உங்களுக்கு உறுதி கூறுகிறேன். தீவிரமாக முயற்சி செய்யுங்கள். இதனுல் வரும் எந்தக் கஷ்டத்தையும் எதிர்த்துப் போராடுவோம். (கேளுங்கள்! கேளுங்கள்!) எந்த அளவு சீர்திருத்தம் அடைய வேண்டுமென்று விரும்புகிருேமோ அந்த அளவு கஷ்டப்பட வேண்டுமென்பதை என் அனுபவத்தில் கண்டிருக்கிறேன். ஒவ்வொரு சீர்திருத்தத்திலும் கஷ்டப்பட்டும், கஷ்டப்பட்டுக்கொண்டுமிருக்கிறேன். இனிமேலும் கஷ்டப்படக் காத்துக்கொண்டிருக்கிறேன்.

சாதித் திமிர் கொண்ட சண்டாளர்களால் அமிழ்த்தி வைக்கப்பட்டிருக்கும் அருமைச் சகோதர சகோதரிகளே! தீண்டாதவர்கள் நகை போடக் கூடாது, பித்தளைப் பாத்திரம் உபயோகிக்கக்கூடாது; உடம்பை துணியால் மூடிக்கொள்ளலாகாது, என்பன போன்ற கொடிய வழக்கம் அனுஷ்டிக்கப்படுவதை உணருகிறீர்களா? துணிபோடக் கூடாத சட்டம், சாப்பிடக் கூடாத சட்டமாகிவிடும் என்பதை உணருங்கள். பன்றி, நாய், குஷ்டரோகி போகும் தெருவில் ஆரோக்யமுள்ள நீங்கள் போகக்கூடாதென்றும், அது கடவுள் இட்ட கட்டளையென்றும் சொல்வதை எவ்வளவு நாள் கேட்டுக்கொண்டிருப்பது? அந்த கடவுளுக்கு மரியாதை வேறு செய்துகொண்டிருக்கிறீர்களே, அதற்கு அர்த்தமேன்ன? பூரண விடுதலையென்ருல் அது தீண்டாமை ஒழிப்பு என்ற எல்லைக்கு அப்புறம் மறைந்து கிடக்கிறதென்பதை உணருங்கள். ஒரு கோடிப் பேர் ஏழரை கோடிப்பேரைப் பன்றிக்கும் கீழாக மதித்திருப்பதை

உடைத் தெறியுங்கள். எதற்கும் தைரியத்தை ஆயுதமாகக் கொண்டு தீவிரமாக எதிர்த்துப் போராட முன் வாருங்கள். நிச்சயமாய்க் கோரிய பலன் கிடைக்கும் என்று தெரிவித்துக் கொள்கிறேன். இந்த மகா நாட்டைத் திறந்து வைத்து சில விஷயங்களைச் சொல்ல சந்தர்ப்பமளித்த உங்களுக்கு மீண்டும் எனது மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்துகிறேன்.

பின்னர் வரவேற்புக் கழகத் தலைவர் திரு எல்.எஸ். ஆரோக்கியசாமி அவர்கள் தமது வரவேற்பு உரையை நிகழ்த்தினார்கள். திரு. யூ. அற்புதம் அவர்கள் திரு.எஸ். எம். ஞானப்பிரகாசம், பி. ஏ.பி.எல், அவர்களை மகாநாட்டிற்குத் தலைவராகப் பிரரேபிக்க இரு கனவான்கள் ஆமோதித்தனர். தலைவருக்கும் ராவ் சாகிப் வி. ஐ. முனிசாமி அவர்களுக்கும் இரு வந்தனோபசாரப் பத்திரம் வாசித்தளிக்கப்பட்டன. தலைவர் வந்தனோபசாரப் பத்திரத்திற்கு பிறகு பதில் கூறிவிட்டு தமது முகவுரைப் பிரசங்கத்தை சொற் பொழிவாற்றினர். பிறகு ராவ் சாகிப் வி. ஐ. முனிசாமி எம். எல். ஸி. அவர்களும், டி. பி. வேதாசலம் பி. ஏ. பி. எல் அவர்களும் சொற்பொழிவாற்றினார்கள். பகல் ஒரு மணிக்கு பகல் போஜனத்திற்காக மகாநாடு கலைந்தது. வெளியூர்களிலிருந்து வந்திருந்த பலருக்கும் மகா நாட்டுப் பந்தலுக்கு எதிர்த்த கட்டிடத்தில் ஓர் சமபந்தி போஜனம் நடைபெற்றது,

மாலை 3 மணிக்கு மகாநாடு ஆரம்பித்ததும் திருவாளர்கள் ஆர். மதுரை, கே. ஏ. பி. விஸ்வநாதம், டி. வி. சோமசுந்தரம் பி. ஏ., பி. எல்., ஜே. எஸ். ராமானுஜம் பி. ஏ., பி. எல். விழுப்புரம் சாமிநாதன் முதலியவர்களும், ஆதி திராவிட கிறிஸ்துவ சமூக இளைஞா

களும், மிக உருக்கமாகப் பேசினார்கள். தலைவர் முடிவுரை கூறியதும் 'ஜே!' கோஷத்துடனும், பாண்டு முழக்கத்துடனும், எல்லோருக்கும் மலர்மாலை சூட்டி நன்றி கூறப்பெற்று, மாலை 6 மணிக்கு மகாநாடு இனிது முடிந்தது. எல்லாத் தலைவர்களையும், லால்குடி ரயில் நிலையம் வரை பாண்டு வாத்திய கோஷத்துடன் ஊர்வலமாகச் சென்று வழியனுப்பிய காட்சி தாழ்த்தப் பட்ட கிறிஸ்துவர்களின் உற்சாகத்தை நன்கு விளக்கியது.

நன்றி, "சண்ட மாருதம்"
திருச்சி 21-1-23

## பண்டித நேருவின் சந்திப்பு

15-10-1936 அன்று திருச்சிக்குப் பண்டித நேரு விஜயம் செய்த போது சகோதரியார் அவருக்குச் சிறு விருந்தொன்று ஏற்பாடு செய்து சுமார் ஒரு மணி நேரம் பல கருத்துக்கள் பற்றி உரையாடினர். அது சமயம் திரு எஸ். சத்தியமூர்த்தி F. G. நடேசய்யர், K. காமராஜ். ரத்னவேல் தேவர் உடனிருந்தனர். விருந்தின் போது நேரு விரும்பியபடி தமிழ் நாட்டுச் சம்பிரதாயமுறையில் தரையிலே இலைபோட்டு ரசம், சாம்பார்-பாயசம் அப்பளத்துடன் தென் இந்திய உணவு வகைகள் பரிமாறப்பட்டு திருப்திகரமாக அமைக்கப்பட்டிருந்தது. திரு காமராஜ் அவர்கள் நேருவுக்குப்பின் நின்று கொண்டே நேருவுக்கு வேண்டியதைச் செய்தார்.

## ஜெயப் பிரகாஷ் நாராயணன் சந்திப்பு

1937-ல் காரைக்குடிக்கு விஜயம் செய்த திரு ஜெயப் பிரகாஷ் நாராயணன் அவர்களும் திரு சா. கணேசன் அவர்களும் சகோதரியார் இல்லம் வந்து காலை சிற்றுண்டி அருந்தி விட்டு நாட்டு விடுதலை பற்றி பல விஷயங்கள் உரையாடி விட்டுச் சென்றார்கள்.

# பர்மாவில் சுற்றுப் பயணமும் பிரசாரமும்

1938-ம் ஆண்டு சகோதரியார் பர்மா இரங்கூனில் தனவைசிய இளைஞர் சங்கத்தார்களாலும் நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கத்துப் பிரமுகர்களாலும் வரவேற்கப்பட்டு பல சொற்பொழிவுகள் ஆற்றினர். மேலும் பர்மா உட்பகுதிகளான பியாப்பன்-சயிலா-மோல்மேன் சூன்- .உவாக்மா - மூப்பின் டேரியா போன்ற நகர அன்பர்கள் வேண்டுகோளுக் கிணங்கி பல சொற்பொழிவுகள் ஆற்றினர். மேலும் தாராவாடி ஜில்லாவிலும் புரோம் ஜில்லாவிலும் மாந்தளைப் பகுதிகளில் பல இடங்களிலும் சொற்பொழிவு ஏற்பாடு செய்யப்பட்டு அது சமயம் பர்மியருக்கும் முஸ்லிம்களுக்கும் கடுமையான எதிர்ப்பும குழப்பமும் உச்சநிலையில் தீவிரமான கலகம் ஏற்பட்ட காரணத்தினால் எந்தப் பகுதிக்கும் பிரயாணம் செய்ய இயலாத நிலையில் ரத்து செய்யப்பட்டு விட்டு இந்தியா திரும்பி விட்டார்.




பர்மா மூப்பின் ஜில்லா உவாக்கமா நகரம்

# உவாக்கமா செட்டியார்கள் சங்கம்

இரண்டாவது ஆண்டு விழாத் தலைவர்
திருமதி. நீலாவதி ராமசுப்பிரமணியம் அவர்கட்கு
அளித்த

## உபசாரப் பத்திரம்

அன்புமிக்க சோதரி!

தங்கள் வரவு எங்களுக்கு ஒரு புதுமையைத் தருகிறது. இதுவரை இந்தப் பர்மாவிலேயே நடந்திராத முறையில் நாங்கள் கூட்டிய இந்த ஆண்டு விழாக் கூட்டம் தங்கள் தலைமையால் ஒரு தனிச் சிறப்புப் பெறுகிறது.

அலுப்பிலா துழைக்கும் அம்மையே!

தாங்களும் தங்கள் துணைவரும் சமூக நலம், தேச நலங்கருதி, சலிக்காமல் உழைத்து வெற்றி காணும் திறமை நிரம்பப் பெற்றவர்கள் என்பதை நாங்கள் அறிவோம்.

பரந்த நோக்கமும் விசாலமான அறிவும் நிரம்பிய சோதரி!

தங்கள் நோக்கம் உயர்ந்தது; பரந்தது மனித சமூகம்— சிறப்பாகப் பெண்கள் சமூகம் முன்னேறுவதற்கான எல்லாத் துறைகளிலும் ஈடுபடுத்துவது. தங்கள் பேரறிவுத்திறமை பல வியாசங்களின் மூலமாகவும்

பிரசங்கங்களின் மூலமாகவும் தமிழ் நாடு முழுவதும் பிரகாசிக்கின்றது. சமீபத்தில் நடந்த காரைக்குடி ஜில்லா அரசியல் மகாநாட்டில், தங்கள் வரவேற்புக் கழக தலைமைப் பதவியேற்றது பெண்களுக்கே ஒரு தனிச்சிறப்பு என்பதையறிந்து, மிக மகிழ்கின்றோம்.

கொள்கையே பெரிதெனக் கொண்ட குணவதி!

இன்றுள்ள நாட்டு நிலைமையை நன்கு உணர்ந்து அவசியமானதும் இன்றியமையாததுமான பல சீர் திருத்தங்களை ஆங்காங்கு எல்லோருக்கும் விளக்கிக் கூறி, நடைமுறையில் கொண்டு வரும் தங்கள் செய் கையைப் பெரிதும் போற்றுகிறோம்.

இல்லற மாட்சி இயைந்த பெருமையீர்!

தங்களுடையவும், தங்கள் உறு துணைவர் திரு ராமசுப்பிரமணியம் அவர்களுடையவும் கூட்டுற வானது தங்கள் இருவருக்கு மட்டுமேயன்றி, மனித சமூகத்துக்கே ஒரு பெரும் பயனை விளைவிப்பதாய் அமைந்தது கருதி உற்சாகங் கொள்வதோடு, தங்கள் வாழநாள் உயரவும் தங்கள் போன்ற பல தலைவர்கள் தோன்றவும் வேண்டுமென விரும்புகிறோம்.

ஈஸ்வர<br>
தை 4<br>
உவாக்மா<br>
17.1.38

இங்ஙனம்<br>
அன்புள்ள<br>
உவாக்கமா செட்டியார்கள் சங்கத்தார்

# தேவகோட்டையில் தமிழ் இசை மகாநாடு

### ஸ்ரீமதி நீலாவதி ராமசுப்பிரமணியம் தலைமையில் சங்கத் திறப்பு விழா உரை

தேவகோட்டையில் தமிழிசை மகாநாடு 1941 அக்டோபர் 25-26 தேதிகளில் வெகு விமரிசையாக நடைபெற்றது. பிரபல இசைவாணர்களும், தமிழறிஞர்களும் மகாநாட்டில் கலந்துகொண்டனர். சுமார் 5000 பேருக்கு மேல் பொதுமக்கள் கூடி மிக அமைதியாக இருந்து விழாவை இனிது ரசித்தனர். மகாநாட்டுக்கு நாட்டப் பெற்ற கொட்டகை மிகப்பெரியதாகவே இருந்தது; என்றாலும் கொட்டகைக்கு வெளியேயும் ஏராளமான ஜனங்கள் இருந்து தமிழிசையை மனங்குளிரப் பருகினார்கள். கொட்டகையின் நாலு பாகங்களிலும் வெளி வாயிலிலும் ஒலிப்பெருக்கிகள் அமைக்கப்பட்டிருந்தன.

முதல்நாள் காலை 8.30 மணிக்கு பந்தநல்லூர் இரத்தினம் பிள்ளை சகோதரர்கள் மேளக்கச்சேரியுடன் மகாநாடு ஆரம்பிக்கப்பட்டது. கனம் செட்டிநாடு ராஜா சர் அண்ணாமலை செட்டியாரவர்கள் வரவேற்று மகாநாட்டை ஆரம்பித்து வைத்தார். தமிழிசைவளர்ச்சி ஒன்றையே நோக்கமாகக் கொண்டு இந்த இயக்கத்திற்கு அன்னார் உதவி வருவதும் அவருள்ளத்தில் பிறபாஷைத் துவேஷம் சிறிதுமில்லை என்பதும் அவரது பேச்சில் விளங்கின.

ஸ்ரீமதி நீலாவதி ராமசுப்பிரமணியம் அவர்கள் தலைமை திறப்பு விழாவுரையில் தமிழ்இசைச் சங்கத்தின் அவசியம் பற்றியும், அதைத் தமிழர்கள் போற்றி வளர்க்க வேண்டியதன் கடமையையும், ஏதோ சென்னையில் ஒரு மூலையில் எதிர்ப்பு இருப்பதற்காக அவர்கள் அதைப் பொருட்படுத்தக் கூடாதென்றும் எப்படி ஒரு குழந்தையின் நலன் அதன் தாய்க்குத்தான் நன்ருகத் தெரிந்திருக்குமோ அதுபோல தாய்மை பாஷையாகிய தமிழின் இசை நலம் தமிழ்த் தாய்மார்களுக்கே அதிகம் தெரிந்திருக்கிறது என்றும், தமிழிசையை முன்னணிக்குக் கொண்டுவர இச்சங்கம் அவசியம் பாடுபடும் என்று தான் நம்புவதாகவும் தெரிவித்தார்கள். (தலைமையுரை விரிவஞ்சி விடுக்கப் பட்டது) தமிழறிஞர் திரு. டி. கே. சிதம்பரநாத முதலியாரவர்கள் கல்கி ஆசிரியர் ரா. கிருஷ்ணமூர்த்தி, M. S. ராமசாமி அய்யர் BA. BL. L. T., இசைச்செல்வர் இலக்குமணப் பிள்ளை, குமார ராஜா சா முத்தையா செட்டியார், நாமக்கல் கவிஞர் வெ. ராமலிங்கம் பிள்ளை, அ. ச. ஞானசம்பந்தம் M. A., அ. சீனிவாச ராகவன் M. A. டாக்டர் T. S. திருமூர்த்தி, சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை, மதுரை மாரியப்ப சுவாமிகள் M. M. தண்டபாணி தேசிகர் 'குமரன்' ஆசிரியர் சொ. முருகப்பா முதலியோர் உரையாற்றினர்கள்.

தமிழிசைக் கச்சேரி செய்தவர்கள்:—தீவளூர் மீனுட்சி சுந்தரம் பிள்ளை, சித்தூர் சுப்பிரமணியபிள்ளை M. M தண்டபாணி தேசிகர் T. N. மகாலிங்கம் அய்யர், மயிலம் வச்சரவேல் முதலியார், மதுரை மாரியப்ப சுவாமிகள், சிதம்பரம் செல்வரத்தினம் பிள்ளை, டைகர் K. வரதாச்சாரியார், தஞ்சாவூர் கா. பொன்

ளையா பிள்ளை, மதுரை மணி அய்யர், திருச்சி சகோ தரர்கள் சுந்தர ஓதுவா மூர்த்தி M. K. கோவிந்தராஜன், பனையப்பட்டி வினைதீர்த்தான் செட்டியார், திருமதி. சரஸ்வதி பாய், முடி கொண்டான் வெங்கடராமய்யர் ஆலத்தூர் சகோதரர்கள் M. K. தியாகராஜ பாகவதர் ஆகியோர்.

நன்றி—குமரன் *30-10-41*

# இலக்கியப் பண்ணை

"இலக்கியப் பண்ணை" *1941*ம் ஆண்டு தியாகராய நகர் போக் ரோட் 4ம் எண் உள்ள தமது புதிய இல்லத் திற்கு "இலக்கியப் பண்ணை" என்ற பெயரிட்டு வாரந் தோறும் சனிக்கிழமை மாலை ஒரு மணி நேரம் இலக் கியச் சொற்பொழிவு ஆற்றுவதற்கு ரசிகமணி டி. கே. சிதம்பர நாத முதலியார் ராஜாஜி, கல்கி. கிருஷ்ணமூர்த்தி திருப்புகழ் மணி டி. எம். கிருஷ்ணசாமி ஐயர், திரு. வி. கலியாண சுந்தர முதலியார் கி. வா. ஜகந்நாதன் எஸ். சச்சிதானந்தம் பிள்ளை, எஸ். வையாபுரிப் பிள்ளை, ரா. பி. சேதுப்பிள்ளை பி. ஸ்ரீ ஆச்சாரியார், டி. எம். பாஸ்கரத் தொண்டைமான், டாக்டர் மு. வரதராசனார், பேராசிரியர் அ. சீனிவாச ராகவன். மு. அருணாசலம், டாக்டர் திருமூர்த்தி, முதலிய இன்னும் பல பேரறிஞர்கள் வாரத்திற்கு ஒருவராகப் பல இலக்கியப் பேருரைகள் நிகழ்த்தினார்கள். நூற்றுக் கணக்கான இலக்கிய ரசி கர்கள் செவிமடுத்துச் சிறப்புறச் செய்தனர். 1942ம் ஆண்டு முதலாம் ஆண்டு விழாவை திருக்குற்றாலத்தில்

திரு. வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள் தலைமை வகித்து நடத்தினார்கள். திரு டி. கே. சி. பாஸ்கரத் தொண்டைமான், அ. சீனிவாச ராகவன் முதலியோர் சொற்பெருக் காற்றினார்கள் அவ்வமயம் பண்டித மணி மு. கதிரேசச் செட்டியாரவர்களுக்கு "மகாமகோபாத்தியாய" பட்டம் கிடைத்ததைப் பாராட்டி ஒரு நிகழ்ச்சி ஏற்பாடு செய்து சிறப்பாக நடத்திவைக்கப் பெற்றது.

# சிறை வாழ்க்கை

"வெள்ளையனே வெளியேறு!" என்று முழங்கிய ஆகஸ்ட் போராட்டத்தின் போது சகோதரியார் சென்னை நகரில் பேட்டைகள் தோறும் பிரசாரத்தில் மிக தீவிரமாக ஈடுபட்டிருந்தார். 1-12-1941-ல் தி. நகரில் பிரிட்டிஷ் ஆட்சியை கண்டித்துப் பேசியபோது கூட் டத்திற்கு திருவாளர்களான சொ, முருகப்பா, சா.கணே சன், சித.ராமநாதன். வழக்கறிஞர் டி.செங்கல்வராயன், அ: பெ. நடராஜன் முதலியவர்கள் வந்திருந்தனர். அது சமயம் கைது செய்யப்பட்டு எழும்பூர் மாஜிஸ் டிரேட் கோர்ட்டில் விசாரிக்கப்பட்டு 4 மாதங்கள் கடுங்காவல் தண்டனையும் 200 ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டது. தற்காலிகமாக எழும்பூர் கோர்ட் சிறையில் வைக்கப்பட்டிருந்தார். பெண் துணையாளர் (ESCORT LADY) கிடைக்காமையாலும் அன்று பெண் போலீசார் இல்லாமையாலும் வேலூர் சிறைக்கு அனுப்பவில்லை. அது சமயம் சென்னை நகரில் பெரு

மழை புயல் காரணமாக பள்ளமான இடத்தில் அமைந்திருந்த எழும்பூர் சிறைக்குள் வெள்ளம் புகுந்து உட்காரக்கூட முடியாமல் அரை அடி தண்ணீரில் இரவு முழுதும் குளிரில் நின்றுகொண்டே இருக்கும் நிலை வந்தது. நிலை அறிந்த திரு. D. R. அருணாசலம் அவர்களும், வழக்கறிஞர் T. செங்கல்வராயன் அவர்களும், சகோதரியின் கணவரும் முயற்சித்து விரைவுபடுத்தி வேலூர்ப் பெண்கள் சிறைக்குத் தக்க பெண் துணையாளருடன் அனுப்பப்பட்டார். அச்சமயம் சகோதரியின் மூன்று வயதுக் குழந்தையான ஜவஹரை உடன் சிறையில் வைத்துக்கொள்ள சிறை அதிகாரிகள் மறுத்துவிட்டனர். ஒருகால், குழந்தையின் பெயரைக் கேட்ட சிறையதிகாரிகள் அஞ்சினரோ என்னவோ! சகோதரி சிறையில் படிப்பதற்காக எடுத்துச் செல்ல விரும்பிய திருக்குறள், கம்பராமாயணம், பாரதியார் பாடல்கள் போன்ற புத்தகங்களை அரசினர் ஆய்வு செய்து விரோதமான நூல்களெனக் குறிப்பிட்டு முத்திரையிட்டு எடுத்துச் செல்ல அனுமதியளியாமல் திருப்பி விட்டனர்.

# விடுதலை

சகோதரி சிறையிலிருந்து விடுதலையாகிவந்த செய்தியைக் காலைப் பத்திரிக்கைகளில் கண்ட அன்பர்கள் பலர் தியாகராயநகர் போக் ரோட்டில் இலக்கியப் பண்ணை என்ற அவர் இல்லத்திற்கு வந்து பாராட்டிச் சென்றனர். அச்சமயம் ரசிகமணி டி. கே, சிதம்பர நாத முதலியவர்கள் அங்கு வந்து சகோதரிக்கு ரோஜா மாலை அணிவித்து விட்டு கம்பீரமாக உட்கார்ந்து கொண்டு இதையெல்லாம் எதற்காகச் செய்தேன் தெரியுமா?' என்று ஒரு புதிரையும் போட்டார். சகோதரியார் அவர்களுக்கு என்ன சொல்வது என்று தெரியாத நிலையில். 'தாங்களே சொல்லுங்களேன்? என்று கேட்டுக்கொள்ள அதற்கு ரசிகமணி டி. கே. சி அவர்கள் 'இது தாங்கள் சிறைக்குச் சென்று திரும்பியமதைப் பாராட்டுவதற்கல்ல' என்றும் 'இனி சிறைக்குச் செல்லாமலிருந்து தமிழ்த்தொண்டுதான் செய்ய வேண்டும். சிறப்பாக கம்பனைக் காக்கப் பெண்மக்கள் ஊக்கம் அதிகம் தேவை. சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட ஏராளமானேர் உள்ளனர். அவர்கள் செய்யட்டும். இதைத் தெரிவிக்கவே மாலை அணிவித்தேன்... என்ன கேட்டீயளா நான் சொல்வது சரிதானே! என்று கேட்டார். உள்ளத்தில் ஏற்பட்ட அன்பினலும் ஆர்வத்தினுலும் சகோதரியார் 'அப்படியே செய்கிறேன் அப்பா' என்று உறுதி கூறி வணக்கம் செலுத்தினர்.

# தியாகி நிலத் தியாகம்

1941 ஆண்டு அரசியல் தியாகியாக சிறைப்பட்டிருந்ததற்கு அரசாங்கத்தாரால் திண்டிவனம் தாலுக்காவில் ஆண்பாக்கம் கிராமத்தில் அளிக்கப்பட்ட 5 ஏக்கர் நஞ்சை நிலத்தை தமக்கு வேண்டாமெனச் சொல்லி ஏழை நிலமற்றோருக்கு முக்கியமாக ஹரிஜன ஏழைகளுக்கு கொடுத்துவிடும்படியும் பிரதிமாதமும் கொடுக்கப்படும் பென்ஷன் தொகை தனக்கு வேண்டாமெனவும் அரசுக்குத் தெரிவித்துவிட்டார்.

சிறு சிறு உதவிகள் ஏழை ஸ்தாபனங்கட்கு பொது மக்கள் தங்களால் இயன்ற உதவிகளைச் செய்ய வேண்டுமென்ற ஆவலில்—சுமார் 15 ஆண்டு காலம், ஆல் இண்டியா ரேடியோவில் பல இலக்கியப் பிரசங்கங்கள் ஆற்றி வந்தபோது அதற்காக அந்நிறுவனத்தாரால் அளிக்கப்படும் காசோலைகளை வாலாஜாபாத் இந்துமத பாடசாலைக்கு அன்பளிப்பாக அளித்து வந்தார். அதுபோல் தினசரி வார மாதப் பத்திரிகைகளில் தன் கட்டுரைக்காகத் தரும் தொகையை எளிய ஸ்தாபனங்களுக்குக் கொடுத்து விடுவார். வாலாஜாபாத் இந்துமத பாடசாலை அதிபர் திருவாளர் வா. திமாசிலாமணி முதலியார் அவர்கள் முக்கியமான குடும்ப நண்பர்களில் ஒருவராகும்.

## ராஜா அண்ணாமலைபுரத்தில் மாதர் சங்கம்

1954ல் ராஜா அண்ணாமலை புரத்தில் சுமார் 300க்கு மேற்பட்ட மாதர்களை அங்கத்தினர்களாகக் கொண்டு ஒரு சங்கம் ஏற்படுத்தி அதற்குத் தலைவியாகவும் காரியதரிசியாக புரொபசர் திருமதி வசந்தி தேவியும் (தற்சமய Prof. Mrs K. Vasanthi Devi, Principal. Ethiraj College, Madras 600 008) பங்கேற்றுக் கொண்டு பல நற்பணிகளைச் செய்தும் ராஜா அண்ணாமலைபுரம் கட்டிடங்களின் சொசைட்டியின் பெண் அங்கத்தினர் பதவியும் பெற்று பல பெண்களுக்கு சிறப்பாக கட்டிட உதவியும் புரிந்து வந்தார்.

## கல்லூரி மாணவர்களுக்கு பாரதி பாடல் வகுப்பு

1933 ல் திருமதி நீலாவதியார் திருச்சி நேஷனல் காலேஜ் பிரின்ஸிபால் திரு. V சாரநாதன் அவர்கள் ஏற்பாட்டின்படி மாதம் ஒரு முறை ஷை காலேஜ் மாணவர்கள் மன்றத்தில் மகாகவி சுப்ரமணிய பாரதியார் பாடல்களிலிருந்து விளக்கம் கூறி 2 ஆண்டு காலம் வகுப்பு நடத்தி வந்தார்.

## "கம்பர் விழாச் சொற்பொழிவு"

காரைக்குடிக் கம்பர் விழாக்களிலும் தேரழுந்தூர் கம்பர் விழாக்களிலும் கோயமுத்தூர் பாண்டிச்சேரி களில் நடைபெற்ற கம்பர் விழாக்களிலும் பங்கேற்றுப் பல இலக்கியப் பேருரைகள் நிகழ்த்தினார்.

## 1948-ல் சிறையில் நற்போதனை 3 ஆண்டுகள்

ராமகிருஷ்ணமடம் அதிபர்கள் விருப்பத்திற்கிணங் கவும் சகோதரி சுப்புலக்ஷிமி அம்மாள் அவர்கள் திட்ட மிட்டபடியும் சென்னை மத்திய சிறையில் வைக்கப்பட் டிருக்கும் பெண் கைதிகளுக்கு பிரதி வாரமும் ஞாயிற் றுக்கிழமை மாலை ஒரு மணி நேரம் கைதிகளை ஒன்று கூட்டி அமரவைத்து அவர்களுக்கு நற்போதனைகளைச் சொற்பொழிவு செய்தும் பின்பு தனித்தனியே ஒவ் வொருவரையும் அழைத்து அவர்கள் கஷ்டங்களைக் கேட்டும் குற்றங்களைத் தெரிந்து கொண்டும் இனி அவ் வாறு நடவாதிருக்கவும் சிறிதளவு வருவாய் கிடைத் தாலும் உழைத்து உண்ணவேண்டுமெனவும் விடுதலை ஆகி வந்ததும் தன்னை வந்து பார்த்தால் வேலை ஏற் பாடு செய்து கொடுப்பதாயும் சொல்லி அப்படி வந்த பல பெண் கைதிகளுக்கு தகுதிக்கு ஏற்ப வேலை அமர்த் தியும் கொடுத்தார். அவர்களில் பலர் அடிக்கடி வந்து நிலைமையும் தெரிவித்து நன்றியும் தெரிவித்து

விட்டுப் போவார்கள். 3 ஆண்டு காலமும் பிரதி வார மும் காரில் போய் வந்த செலவுகளை மடத்து அதிபர் கள் கொடுக்க விரும்பியதை தொண்டுக்கு மாசெனக் கூறி ஏற்க மறுத்து விட்டார் --அது மட்டுமல்ல ராம கிருஷ்ண மடத்தாரால் வெளியிடும் ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் பத்திரிகைக்கு பலமுறை இலக்கியக் கட்டுரை களும் எழுதி உதவினர்.

## சீனிவாச காந்தி நிலையம்

சுமார் நான்கு ஆண்டு காலம் சென்னையில் பிரபல தேசத் தலைவரும் வழக்கறிஞருமான சீனிவாசய்யங்கார் புத்திரி அம்புஜம்மாள் அவர்களால் நடத்தப்பட்டுவரும் சீனிவாச காந்தி நிலையத்தில் பங்கு கொண்டு பல ஏழை எளியவர்களுக்கும் சிறப்பாக பெண்களுக்கும் பல தொண்டுகள் செய்தும் அரசினர் ..உதவியால் பெண் களுக்கென்று நடத்தி வரும் "ராஜ்யலக்ஷ்மி" என்ற மாதப் பத்திரிகைக்கு சுமார் நான்கு ஆண்டு காலம் கௌரவ ஆசிரியராகப் பணியாற்றி பல சிறந்த கட்டு ரைகள் எழுதி வந்தார். சீனிவாச காந்தி நிலயத்தில் ஏழைக் குழந்தைகளுக்கும் ஏழைப் பெண்களுக்கும் பல உதவிகளும் தொண்டுகளும் கல்வி வசதியும் செய்து வந்தார்.

# கல்கி வெளியீடு

"கல்கி" 23-6-1957

'கல்கி' பத்திரிகையில் "மாதர் குல திலகங்கள்"
என்ற பகுதியில் வெளி வந்தவை.

ஸ்ரீமதி நீலாவதி ராமசுப்பிரமணியம் அவர்கள் நாயுடு வகுப்பினர். ஹிந்து மதத்துக்குப் புல்லுருவி களாக விளங்கிய சாதிப் புதர்கள் குரோத முட்கள் முதலிய கேடுகள் சூழ்ந்திருப்பதை உணர்ந்தார். அவற்றைப் போக்குவதில் தாமும் சேவை செய்ய வேண்டுமென்று ஆவல் கொண்டார். உண்மையான சீர்திருத்த வாதியாக வேண்டுவதின் அவசியத்தை உணர்ந்தார். அதன்படி நகரத்தார் வகுப்பைச் சேர்ந்த அறிவாளர் ஸ்ரீ ராமசுப்பிரமணியம் அவர்களை 1930-ம் ஆண்டு திருமணம் செய்துகொண்டார். திருமணத் திற்கு முன்னதாகவே அம்மையார் அவர்கள் தேசியத் துறையில் ஈடுபட்டு வந்தார். தேசியத் துறையில் அம்மையாரவர்களைக் காந்தி மகான் அவர்கள்தான் திருப்பினர்கள் என்று கூற வேண்டும். இருபத்து நான்கு ஆண்டுகளுக்கு முன் காந்திஜி தமிழ்நாடு சுற்றுப் பிரயாணம் மேற்கொண்டபோது ஸ்ரீமதி நீலா வதி அம்மையார் அண்ணலைப் பேட்டி கண்டு, தேச நிலைமை குறித்தும் சமூக சீர்திருத்தங்கள் பற்றியும் உரையாடினர். "காங்கிரசுக்கு உங்களை அர்ப்பணம் செய்து கொள்ளுங்கள்! உங்களைப் போன்ற சீர்திருத்த நோக்கமுடைய மாதர்களின் சேவை காங்கிரசுக்கு, மிகவும் தேவையாயிருக்கிறது!" என்று காந்தி மகான்

கூறினார். அதிலிருந்து ஸ்ரீமதி நீலாவதி தேசீயப் பொது வாழ்வில் ஈடுபடலானார். காங்கிரஸ் நடத்திய போராட்டங்களில் பங்கெடுத்துக் கொண்டார். வேலூர் சிறையில் சிறைவாசப் பரிசும் பெறலானார்.

தேசீயப் பாதையில் ஸ்ரீமதி நீலாவதி ராமசுப்ரமணியம் அவர்களைத் திருப்பியவர் காந்தி மகான் என்றால் தெய்வீகத் தமிழ் இலக்கியப் பாதையில் அம்மையாரைத் திருப்பியவர் ரசிகமணி டி. கே. சி. அவர்களாகும்.

ஸ்ரீமதி நீலாவதி அவர்கள் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்காகச் செய்து வரும் தொண்டுகள் பல. ஸ்ரீமதி நீலாவதி சிறந்த எழுத்தாளர். சிறந்த பேச்சாளர். இலக்கியத் துறையில் சிறந்த பணியாளர், ''சௌபாக்யம்' என்ற மாதப்பத்திரிகையின் ஆசிரியர் பதவியை ஏற்று அதைத் திறம்பட நடத்தி வருகிறார். ஸ்ரீமதி நீலாவதி அவர்களுக்கு 45 வயது ஆகின்றது. அவருடைய சேவை தமிழ் நாட்டுக்கும் தமிழ் மாதர் குலத்திற்கும் இன்னும் பல காலம் கிடைத்து வர வேண்டுகிறோம்.

# குடும்பத்தில் ஒரு சோக சம்பவம்

**1961**ம் வருடம் டிசம்பர் மீ 4 வ அன்று மாலை ஒரு தாங்க முடியாத சோகம் அமெரிக்காவிலிருந்து ஒரு தாங்கொணுத் துயரச் செய்தி வந்தது. தங்கள் அருமைக் குமாரத்தி உயிருக்குயிரான குணக்குன்று டாக்டர் மணிகுமாரி காலமாகி விட்டார் என்ற பேரிடிச் செய்தி கேட்டு குடும்பத்தார் அனைவரும் அதிர்ச்சி அடைந்து கதி கலங்கிப் போனுர்கள். சகோதரியார் நினைவிழந்து மூர்ச்சையாகி மிக மிக வேதனைக்குள்ளா ஞர்கள். அவர்களுக்குப் பல மருத்துவ சிகிச்சை அளிக் கப்பட்டது. அந்த நாள் முதல் சுமார் 20 ஆண்டுகாலம் மனம் ஆராத்துயரத்தால் விரக்தியடைந்து எந்தப் பொது நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ளாமல் இல்லத் திலேயே ஒரு துறவியைப் போல் வாழ்ந்து வந்தார்கள். இந்த நிலையிலும் மறைந்த மணிகுமாரியின் ஒரு வயது மகளான பேத்திக் குழந்தை கற்பகத்தை தாயற்ற நிலையில் ஏற்று கடமை உணர்ச்சியோடும் பொறுப்பு டனும் வளர்த்து வந்தார்கள். இந்தச் சோக சம்பவத் தின் காரணமாக பல (இளைஞர்கள் வரவேற்க எதிர்ப் பார்த்த மலேசியா, சிங்கப்பூர் முதலிய சுற்றுப் பிர யாண பிரசார ஏற்பாடு) ரத்து செய்யப்பட்டு விட்டது. வெளிநாட்டில் எதிர்பார்த்த இளைஞர்களுக்கு ஏமாற்ற நிலை ஆகியது வருந்தத் தக்கதேயாகும்.

## "சகோதரி நீலாவதியார் எழுதி வைத்திருந்த குறிப்புகள்"

ஆந்திர மொழியை அன்னை மொழியாகக் கொண்ட குடும்பத்தில் 1913ம்ஆண்டு பிறந்தேன். மூன்று ஆண்டுகளில் அன்னையை இழந்தேன். தாய்மொழி தெலுங்கு ஆனாலும் தமிழ்மொழி பயின்றேன். ஆங்கிலமும் இந்தியும் விரும்பிக் கற்றேன். தந்தையின் ஆதரவால் நீதிக் கட்சியிலும் ஈ. வெ. ரா. பெரியாரின் பிரவேசத்தினால் ஏற்பட்ட சுயமரியாதை பகுத்தறிவு இயக்கங்களில் பங்கு கொண்டேன். அரசியல் கருத்து வேறுபாட்டால் பிரிந்தேன். தாய்நாட்டின் பாரதத் தலைவர் சத்திய உருவம் அண்ணல் காந்தி அடிகளை திருச்சியில் பேட்டி கண்டு பல விஷயங்கள் பற்றி உரையாடினேன். அவர் ஆணைப்படி தேசத் தொண்டில் அடி வைத்தேன். சிறைக்கும் சென்றேன். தமிழ் நாட்டின் 'தவச்செல்வர்' ரசிகமணி டி. கே. சி. ஆணையால் இலக்கியத் தொண்டில் ஈடுபட்டேன். கடலிலும் பெரிது கம்பன் காவியம். என்னால் நீந்த முடிந்தது சிறிதளவேயாகும். உலக வாழ்க்கையில் எதிர் நீச்சலடிக்க எனக்கு சிலர் வாய்ப்புக் கொடுத்தார்கள். கணவரின் சுற்றத்தார்களும் நண்பர்களும் உள்ளன்போடு பழகியவர்கள் பலராகும். அந்த ஊன்று கோலில்தான் என் சக்கரம் இதுவரை சுழன்றது. இதற்கு மாறாக இரண்டொருவர் தோன்றாமலில்லை. அடைந்த கஷ்டங்களைச் சகித்துக் கொள்ள வேண்டியதுதான். மறக்க முடிந்தால் மகிழ்ச்சிக்குரியதே! "பிறவாமை வேண்டும். மீண்டும் பிறப்பு உண்டேல் உன்னை என்றும் மறவாமை வேண்டும் அறவா!"

என்று ஆடவல்லான் அரங்கிலிருந்து ஒரு பாடவல்ல அம்மையின் பக்திக் குரல் தோய்ந்த விண்ணப்பம் என் காதில் ஒலிக்கின்றன-என் விண்ணப்பம் பிறப்பு உண்டேல் பிறர் கொடுத்த கஷ்டம் மறக்க வேண்டும் என்பதாகும். கண் நிறைந்த கணவரை விரும்பி மணக்கப் பெற்றேன். அன்று கூறிய மணவாழ்க்கை உறுதி மொழிக்குச் சிறிதும் பிசகாது அன்று முதல் இன்று வரை ஐம்பது ஆண்டுகளுக்கு மேல் வாழ்க்கை நடத்தினேம். நிறை பல உண்டு, குறை கண்டேனில்லை. பண்பாடு வளர்ந்தது, மற்றவைக்கு இடமில்லை. வேறென்ன வேண்டும். மகிழ்ச்சி மகிழ்ச்சி!! எனது நல்வாழ்வுக்கு அஸ்திவாரம் போட்டுக் கொடுத்தவர் பண்பாட்டுச் சிகரம் அன்புத் தந்தை திரு. வி. க. அவர்களேயாகும். அன்னாரின் அறிவு சார்ந்த நூல்கள் என் மனதில் வேரூன்றி விட்டன. அவர்களுக்கு நன்றி வணக்கம் பல. குடும்ப அன்பர்கள் பலர். அதில் முதற்படியில் இருப்பவர் உடன் பிறவாச் சகோதரர் காரைக்குடி திரு. மெ. நா. சித அண்ணன் அவர்களாகும், மற்றும் கொத்தமங்கலம் திரு. ராம நாராயணன் அவர்களாகும் (என் துணைவரின் இளைய சகோதரர்) என்றால் இது உண்மை. வெறும் புகழ்ச்சி அல்ல! தனவணிக நாட்டில் சீர்திருத்த முற்போக்குடைய இளைஞர்கள் பலரிருந்தார்கள். அதில் குறிப்பிடத்தக்கவர்கள் காரைக்குடியில் இருவர். ஒருவர் திரு. சொ. முருகப்பா. மற்றொருவர் திரு ராய. சொக்கலிங்கனார். இருவரும் தனவணிக நாட்டைச் சீர்திருத்தி பாலைவனத்தைச் சோலைவனமாக்கிவிடப் பல எதிர்ப்புச் சக்திகளுக்கிடையே பாடுபட்டார்கள். வெற்றிப்பாதை அவர்களுக்கு வழிவிடவில்லை. சோம்பிக் கிடக்க முடியுமா? திரு. ராய. சொ. தேச விடுதலையில் ஈடுபட்டு

"ஊழியன்" தலைமேற்கொண்டு சிறையும் சென்றார். தமிழ்க் கடலுமானார். திரு. சொ. முருகப்பா சீர்திருத்தக் குன்றேறி குமரன் ஆசிரியர் ஆகி பல தொண்டுக ளாற்றினார்.

எனக்குத் தமிழில் பற்றுக் கொள்ளக் காரண மானவர்கள் இருவர் ஒருவர் திரு. வி. க. மற்றொருவர் மறைமலை அடிகள் இவர்களின் அடிச்சுவட்டில் தமிழ அன்னையைத் தரிசிக்க அளாவற்ற ஆவல். நினைத்த பொழுதெல்லாம் பல்லாவரம் அடிகளையும் ராயப் பேட்டை முனிவரையும் கண்டு உரையாடிவரச் சென்ற பயணங்கள் பலவாகும்.

மறையா உருவம் மறக்க இயலா ஒரு அருமை மகளின் (அமெரிக்காவில்) கூற வொண்ணா மர்ம மரணம் மீளாத் துயரில் என்னை வாட்டி வதக்கி விட்டது.

"வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன் பால், மீளாத காதல் நோயாளன் போல்" (குலசேகர ஆழ் வார், கேரளா, வித்துவக்கோடு) ஆறுதல் அடை வதைத் தவிர வேறொன்றறியேன். என்னிடம் ஏதே னும் குறை காணப்படுமாயின் தமிழ் நாட்டின் தவச் செல்வர்கள் தங்கள் சகோதரியிடம் வணக்கம் பரிவு காட்டி மன்னிக்க வேண்டுகிறேன்.

சீர்திருந்தச் செம்மல்

# திரு. சொ. முருகப்பா பற்றி ஒரு கட்டுரை

சகோதரியார் திரு. சொ. முருகப்பா பற்றி
ஆர்வத்தோடு எழுதிய கட்டுரை
1956-அக்டோபர்-''பாரதி'' பத்திரிகை

''ஒரே புஷ்பக் குவியலிலிருந்து பலவிதமான மாலை களையும் தொடுத்து விட முடியும். அதைப் போலவே, அநித்தியமான மனிதன் தன்னுடைய ஒரே பிறவியி லேயே எத்தனையோ விதமான நற் காரியங்களை எல் லாம் சாதித்து விட முடியும்'' என்ற புத்தர் பிரானின் திருவாக்கை மெய்ப்பிக்கும் மேதாவிகளிலே திரு. முருகப்பாவும் ஒருவர்.

நாட்டைப் பிடித்த பிணி நலிய ஒரு போராட்டம். சமூகத்தைச் சல்லடைக் கண்களாகத் துளைத்த சங்க டங்கள் தீர ஒரு புரட்சி. இந்த இரு போர்களிலும் ஈடு பட்டவர்களுக்கு எதில் துன்பம் மிகுதி என்று பார்ப் போமானால், சமூகப் போரில் இறங்கியவர்களுக்குத் தான். அந்நிய ஆட்சியிலிருந்து மீட்சி பெற போரா டியதில் அந்நியன் ஒருவனே எதிரி. சமூகப் புரட்சியில் சங்கடங்களும் ஜன சமூகமே எதிரிகள். பெற்றோரும் மற்றோரும் பெரும் பகைவர்கள். இந்தப் பகைகளை யெல் லாம் பக்கத்தில் இருத்திப் புகை நடுவினில் தீயென ஒளி வீசினார். சொ. முருகப்பா.

சமூகத் துறையில் தனவணிக நாட்டில் செய்ய வேண்டிய திருத்தங்கள் நிறைய இருந்தன. பக்திச் செல்வமும், பொருட் செல்வமும் நிரம்பிய நாடான தாலே எடுத்த காரியத்திற்கெல்லாம் எதிர்ப்பு பலமா யிருந்தது.



இராம சுப்பிரமணியம்—நீலாவதி தம்பதிகள் பர்மா சுற்றுப் பிரயாணம். (பிரசாரத்திற்குச் சென்றபொழுது.)



ஸ்ரீ ஈ. வி. ராமஸ்வாமி நாயக்கர் (தமிழ்நாட்டுக் காங்கிரஸ் அக்ராசனர் - 1923)



ஸ்ரீ ஸி. ராஜகோபாலாச்சாரியார்
(தமிழ்நாட்டுக் காங்கிரஸ் உபதலைவர் 1923)



கல்லூரிகளில் டாக்டர் மணிகுமாரி—கர்நாடக இசைப் போட்டிகளிலும் தேவாரப்பண் இசைப் போட்டிகளிலும் பரிசாகப் பெற்ற வெள்ளிக் கோப்பைகளும் தங்கம், வெள்ளி மெடல்களும்.



சகோதரியார் காந்தி அடிகளைச் சந்திக்கு முன்பு (பட்டாடை ஆபரணங்களுடன்)



ஈ. வெ. ரா. நாகம்மாள் (சகோதரியாருக்குப் பெரிதும் உதவியவர்)



தனவணிக நாட்டில் ஆரம்ப கால சீர்திருத்தச் செம்மல் மகிபாலன்பட்டி மு. சின்னையா



சீர்திருத்தச் செம்மல்
காரைக்குடி "குமரன்" ஆசிரியர்
திரு. சொ. முருகப்பா



சீர்திருத்தச் செம்மல்
காரைக்குடி "ஊழியன்" ஆசிரியர்
தமிழ்க்கடல் திரு. ராய-சொக்கலிங்கன்

ராயப்பேட்டை முனிவர்



திரு. வி. கலியாணசுந்தர முதலியார்
(தமிழ்நாட்டுக் காங்கிரஸ்
உப அக்ராசனர் 1923)

பல்லாவரம் அடிகள்



சுவாமி வேதாசலம்
(மறைமலை அடிகள்)

ரஸிகமணி · டி. கே. சி.



தென்காசி

12. 3. 52

அருமைப் புதல்வி
லீலாவதி அம்மையார்க்கு

மிக்க அன்புடன்
டி. கே. சிதம்பரநாதன்



சகோதரியாரின் குடும்பமும் நண்பர்களும் (29-11-1979)

முதல் வரிசை : இராம. சுப்பிரமணியம், மெ. நா. சித., எஸ். கண்ணன், பாப்பி, நீலாவதி, சித. அடைக்கம்மை, சுப. மீனாட்சி.

இரண்டாவது வரிசை : எஸ். ஜவகர், கா. வள்ளியப்பன், எஸ். ராமநாதன், மாலா, கற்பகம்

கல்யாணத்தில் பெண்ணுக்கு விலை கொடுக்கும் பழக்கம் சர்வ சாதாரணம். பெண் கல்வி என்பது பேசப்படாத ஒன்று. பெண்ணை வியாபாரப் பொருளாக்கி விலை பேசும் பழி கண்டு உள்ளங் கொதித்து எத்தனையோ பேசி எழுதிப் பெண்ணின் பெருமையை உணர்த்தினர் முருகப்பா.

தம் கொள்கையை ஒத்துக் கொள்கிறார்களோ இல்லையோ, அதை எடுத்துப் பேசத் தயங்குவதில்லை. எங்கும் யாரிடமும் அஞ்சாமல் வாதாடுவார். கொள்கைப் பிடிப்போடு பேசும் போது மென்மையை விட வன்மையே மிகுந்திருக்கும். ஆனால் வன்மையோடு ஹாஸ்யமும் கலந்திருக்குமாதலால், கேட்பவர்கள் சினங்கொள்ள வழி இருப்பதில்லை.

செந்தமிழ்ப் புலவர் திரு. வயிநாகரம் அ. இராமநாதன் செட்டியாரிடம் ஒரு முறை பெண் விலை பற்றி முருகப்பா அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். திரு. இராமநாதன் செட்டியார் பழமைப் பற்று மிக்கவர்; நல்ல புலவர். முருகப்பாவின புதுமைக் கருத்தும், பேச்சுத் திறனும், அவர் மனத்தை ஈர்த்து விட்டன. அதை ஒரு பாட்டாகவே பாடி விட்டார்.

“மின் அனைய மடவார்க்கு
விலை என்ன? வீண் செலவு
வேண்டுந்தானே?

பன்னரிய கல்விக்குப்
பணம் எங்கே? ஏழையென்று
பாரிற் சூழ்ந்த

இன்னலுக்கு விடை காண
வேண்டாவோ? இரக்கமெலாம்
குடி போயிற்ரே?

உன்னுக!'' 'என்று உரைத்த மொழி
முருகப்ப! கேட்டு மனம்
உருகினேனே.

'நினைத்துப் பாருங்கள் ஐயா, இந்நேர்மையற்ற செய்கையை! என்று முருகப்பா எடுத்துக் காட்டியது அவர் நெஞ்சை என்ன செய்தது என்பதைப் பாட்டு காட்டுகிறதல்லவா? சாதி ஒழிப்பு, கன்னி விதவைத் துயர் களைதல், தீண்டாமை முதலிய சீர்திருத்தங்களை அந்நாளில் அஞ்சாமல் இடி முழக்கம் செய்த பெருமை அவருக்குண்டு.

பத்திரிகை உலகில் முருகப்பா அவர்கள் செய்த ஊழியங்கள் பல. பிரசாரம் வலுக்க, கொள்கை பரவ, பத்திரிகைகளே சிறந்த சாதனம் என்பதில் அவருக்கு அபார நம்பிக்கை. 'தனவைசிய ஊழியன்', 'குமரன்' முதலிய பத்திரிகைகளைத் திறம்பட நடத்தியவர். மக்களிடையே அறிவுச் செல்வம் நிரம்பி வழிய வேண்டும் என்பதில் பேரார்வம் கொண்டவர்.

அத்தகைய இளைஞர்களைக் கண்டால், உடனே தம் உள்ளத்தில் பிடித்துப் போட்டு, உற்சாகமூட்டி உழைத்திடச் செய்வார். பத்திரிகைகள் இன்று புற்றீசல்கள போல் புறப்பட்டு விட்டன. சிலவற்றைக் காணக் கண் கூசுகிறது. கருத்து வேற்றுமையால் அல்ல; கழிபட்ட பாஷையைக் கையாண்டிருப்பதால். அந்த நாளில் திரு. ராய. சொ. அவர்களால் நடத்தப் பட்ட, 'ஊழியன்', தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்களால் நடத்தப்பட்ட 'தேசபக்தன்' 'நவசக்தி'

முருகப்பாவால் நடத்தப்பட்ட 'தனவசிய ஊழியன், 'குமரன்' முதலிய பத்திரிகைகளைப் பார்த்தால் பாடிய வாய் தேனூறும் என்றதுபோல், படித்த வாயல்லவா தேனூறும்? சுருக்கமாகச் சொன்னால் இன்னும் பத்திரிகை உலகிலும் எழுத்துலகிலும், பிரகாசிக்கும் எழுத்தாளர்களில் பலர் குமரன் தோற்றுவித்த குழவிகள்; ஊழியன் உதவிய உத்தமர்கள்; நவசக்தி அளித்த நாயகங்கள். உதாரணம் - வ. ரா. - பி. ஸ்ரீ ப. நீலகண்டன், கல்கி கிருஷ்ணமூர்த்தி இன்னும் பலர் சீர்திருத்தத் தொண்டோடு இலக்கியத் தொண்டிலும் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார் முருகப்பா. தமிழ் இலக்கியங்களில் சிறந்த புலமை உடையவர். இருதய நோய் உள்ளவர்கள் எவ்வளவோ ஜாக்கிரதையாக இருக்க வேண்டுமென்பது விதி. அது முருகப்பா போன்றவர்களை ரொம்பவும் சங்கடப்படுத்தி விட்டது. பாலியத்திலிருந்து தமிழ், சமூகம், சீர்திருத்தம் என்ற நினைப்பிலே நீந்தி, ஓயாமல் எழுதியும், பேசியும் வந்தவருக்கு இது எவ்வளவு கொடுமையான சோதனை! சமீபத்தில் ஒரு முறை அமராவதி புதூரில் அவரைப் பார்க்கச் சென்றிருந்தோம். உடல் நலம் குறைவான பின் தான் படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்து பழைய நிலைமையில் பேச ஆரம்பித்து விட்டார். நாங்கள் எவ்வளவோ நாசூக்காக, பேச்சை முடித்து எழுந்திருக்க முயன்றோம், பல முறை, ஆனால் அவர் விடவில்லை. "...ஓ! நீங்கள் அவசரப்படும் விஷயம் எனக்குப் புரிகிறது. நான் அதிகம் பேசக்கூடாது என்பதுதானே! அது போவுது போங்கள். நானே சரியான காட்டில் இருக்கிறேன. (அமராவதி புதூர் ஒரு தனிக் கிராமம். கிராமமாவது? தனிக்காடு.) எனக்கு ஓய்வு கொடுக்க வேண்டுமென்று யாருமே இப்பக்கம் அதிகம் வருவ

தில்லே. வந்தாலும் அம்மா அவர்களிடம் (மனைவியாரிடம்) என் உடல் நிலையை விசாரித்து விட்டு அப்படியே நழுவி விடுகிறார்கள். எத்தனை நாளைக்கு இந்த உயிரை இப்படிக் காப்பாற்ற முடியும்? இதுதான் எனக்குப் பெரிய வியாதியாயிருக்கிறது.''

இந்தப் பேச்சிலே ஏக்கத்தை விட, ஆர்வமே மிகுந்திருந்தது. இந்த ஆர்வமே இரண்டாண்டுகள் இலக்கிய வகுப்பு நடத்தச் செய்தது. பெண்கள் அறிவை வளர்த்து, வையம் பேதமை அற்றிட வழிவகை தேடினார்.

சென்னையில் அவர் வந்திருந்தபோது (இறப்பதற்கு இரண்டு தினங்கள முன்புதான்) அவரைப் பார்த்து ''நீங்கள் இந்த சிரமத்தை எலலாம் இப்போது ஏறறுக் கொள்ளக்கூடாது, இதை நிறுத்தி விடுங்கள்'' என்றோம். அதற்கு அவர், ஓர் ஆனந்தச் சிரிப்போடு, ''நன்றாய்ச் சொன்னீர்கள். அதனால்தான் நான் உயிர் வாழ்கிறேன். அதுதான் எனக்கு பெரிய டானிக்! என்றைக்காவது ஒரு நாள் போக வேண்டியது தானே!'' என்றார்.

ஆனால் அந்தோ! அந்தப் போக்கு இன்னும் இரண்டு நாளில்தான் என்பதை அப்போது நாங்கள் உணர முடியவேயில்லே!

அனபர்களுக்கும், நண்பர்களுக்கும் அவர் அருமை 'முரு.' சின்னக் குழந்தைகளுக்கு அன்புமிக்க 'அண்ணன்.' அந்த நாளில் உடன் உழைத்த சகாக்களுக்கு பெருமை பெற்ற முருகப்பா.

நன்றி—''பாரதி'' 1956. அக்டோபர்.

# சைவ மங்கையர் மகாநாடு
# தலைமை உரை

சிவகாசி, சைவ மங்கையர் மகாநாட்டில், தலைமை வகித்து தீண்டாமை ஒழிப்புப் பற்றிப் பேசிய வீர மொழிகள்.

(1947ல் சிவகாசியில் நடைபெற்ற சைவ சித்தாந்த மகா சமாஜம் 40வது மகாநாடு நிகழ்ச்சியில் தலைமை வகித்தும் பேச வேண்டுமென நிர்வாகத்தினர் சகோதரியாரைக் கேட்ட பொழுது சமயச்சார்பில் இருக்கும் குறைபாடுகளைக் கண்டித்துப் பேச உரிமை பெற்றுப் பேசியதின் பேச்சுக்களில் சில பகுதிகள் மட்டும்:-)

### தீண்டாமைக்கு ஆதாரமுண்டா?

சைவ சமயத்திலே தீண்டாமைக்கு இடமில்லை. சாதி உயர்வு தாழ்வும் இல்லை, என்பதற்கு எத்தனையோ உதாரணங்களைச் சொல்ல முடியும்.

சமயாசாரியர்களுள் ஒருவரான, அந்தண குலத்தில் உதித்த, சுந்தரமூர்த்தி சுவாமிகள், கலப்பு மணம் செய்து கொண்டிருக்கிறார். அதற்குச் சிவபெருமானே தூது சென்று, துணையும் புரிந்திருக்கிறார். அந்தணரான அவர், மணந்து கொண்ட மங்கை நல்லாள் இசை வேளாளர், குலத்து உதித்தவர்.

அப்பூதியடிகள் அந்தணர் மரபில் வந்தவர். அவர் வேளாளர் மரபில் வந்த, திருநாவுக்கரசரைக் குருமூர்த்தியாகக் கொண்டு வாழ்ந்திருக்கிறார்.

தமதில்லத்தில் பத்தினியார் பரிமாற, நான்காம், வருணத்தவர் ஒருவருடன் பிராமணரான அவர் உடனுண்டிருக்கிறுர்.

கண்ணப்பரின் எச்சில் நீரைத் திருமஞ்சனமாடி, எச்சில் கறித்துண்டை இன்னமுதமாய் உண்டு இன்புற்றுர் காளத்திப் பெருமான். கண்ணப்பர் எக்குலத்தவர்? வேடரன்றே?

நந்தனர் குலம் என்ன என்று கூறவா வேண்டும். ஆதித்திராவிடரல்லவா? அவருக்கு இன்று ஒவ்வொரு ஆலயத்தும் எவ்வளவு மரியாதைகள் நடைபெறுகின்றன?

திருநீலகண்ட யாழ்பாணரும், ஹரிஜனரேயன்றே? அவருக்கு நடந்த மரியாதை, வேறு யாருக்கும் நடை பெற்றிருக்கிறதா? மதுரைப் பெருமான் கட்டளையால், சோமசுந்தரர் ஆலயத்துள், இறைவன் திரு முன், பொற்பலகையிட்டு அதன்மீது அமர்ந்து யாழ் வாசிக்கும் பேறு பாணர்க்கே யன்றே கிடைத்தது? திருக் குறிப்புத் தொண்டர் வண்ணுர் மரபில் வந்தவரன்றே? ஏனுதி நாயனுர் நாடார் குல விளக்கல்லவா?

ஆழ்வார்களுள், திருப்பாணுழ்வாரும், திருமழிசை யாழ்வாரும், "தீண்டாதவர்" எனச் சொல்லப்பட்ட குலத்திலே உதித்தவர்கள் தானே?

### ஆண்டவனைப் பற்றியும் அப்படியே

அடியார் வரலாறு ஒரு புறமிருக்க, ஆண்டவனைப் பற்றிய கற்பனைகளைக் கொஞ்சம் பார்க்கலாம். சிவ பெருமான் பார்வதி மணுளன். மலை வேடுவனின் மாப்பிள்ளை. மீனுட்சி காந்தன், வலைவீசி வலைஞர் மகளை மணந்தான். அவன் மகன் முருகன், குறவள்ளியை

மணம் புரிந்தான். இதை யெல்லாம் நம்பும் நாம் ஜாதி உயர்வு, தாழ்வு சொல்வது அடுக்குமா? ஒன்று நான் சொல்லித்தான் தீர வேண்டும். நீங்கள் என் மேல் கோபித்துக் கொண்டாலும் சரி.

## இரண்டில் ஒன்று

பிராமணர்; மறவர், வணிகர், வேளாளர், வண்ணூர், நாடார், கள்ளர், பறையர், இடையர், பாணர், முதலிய பலவகுப்பு நாயன்மார், ஆழ்வார்களைத் திருக் கோவிலுள் வைத்து வணங்குகிறோம். விழாச் செய் கிறோம். மண்டபப்படி, குருபூஜை எல்லாம் நடத்து கிறோம். அது சரி. ஆனால், அந்தக் குலத்திலே வந்த, மக்களை கோவிலுக்குள் செல்ல அனுமதி மறுக்கிறோம். இது நியாயமா? ஒன்று எக்குலத்தோரையும் கோவிலுக் குள் சென்று ஆண்டவனை வழிபட அனுமதிக்க வேண்டும். இல்லாவிட்டால, ஏதாவது சாக்குப் போக் குச் சொல்லி கழிக்க நினைத்தால், கோவிலுக்குள் இருக் கும் அந்தக் குலச்சாமிகளை வெளியேற்றிவிட வேண் டும். "கீழ்ச்சாதி" சாமிகளை கோவிலுக்குள் வைத்துக் கொண்டு, அந்த சாதி மக்களை உள்ளே செல்ல விட மறுத்தால், நாம் நேர்மையானவர்கள் என்று உலகம் ஒப்புக் கொள்ளாது. எனவே,

> செய்தக்க அல்ல செயக்கெடும்—செய்தக்க
> செய்யாமையானும் கெடும்.

என்ற வள்ளுவரின் வாக்குப்படி நாம் செய்ய வேண்டிய பணியைக் காலத்தில் கவனமுடன் செய்து நம் சமயம் க்ஷீணமடையாதிருக்க அணிகோலுவோமாக! குறிப் பாக, இது விஷயத்தில் எல்லாப் பெண்களும் ஒத் துழைத்து உதவி புரிவார்களாக! உண்மைச் சமயத்தை உணர்ந்து ஒரு வழிப்படுவார்களாக!

"தீண்டாதாரைத்தான் நாம் தீண்டுவதில்லை. அவர்கள் உழைப்பை நாம் தீண்டுகிறோம். வேண்டு கிறோம்" என்று காந்தியடிகள் கூறியிருப்பதை, இங்கு நாம் ஊன்றிக் கவனிக்க வேண்டும்.

## நோய்வாய்ப் படுக்கை

1982ம் வருடம் ஜனவரி மாதம் 11உ திடீரென்று மயக்க நிலை ஏற்பட்டு அன்று தினமே மயிலாப்பூர் இசபெல் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு குடும்ப மருத்துவர். டாக்டர். வ. நம்பி M.D. (கௌரவ மருத் துவ நிபுணர் சென்னை அரசினர் பொது மருத்துவ மனை) அவர்களும் இருதய நிபுணர்களும், பல ஆய்வு கள் செய்து சிகிச்சை அளித்து வந்தார்கள். சுமார் 25 தினங்கள் சிகிச்சை பெற்று மருத்துவர்கள் ஆலோ சனைப்படி பிப்ரவரி மாதம் 5உ வீட்டிற்குக் கூட்டி வரப்பட்டு சாதாரண நிலையில் உணவு அருந்தி வந்து படுக்கையிலிருந்து வந்தார்கள். 6உ பகல் மீண்டும் மயக்க நிலை ஏற்பட்டு விடவே அன்று மாலையிலேயே இசபெல் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டது. மருத் துவப் பரிட்சை செய்ததில் மூளையில் இரத்தக் கசிவு ஏற்பட்டு இருக்கிறது என்று அதற்குப் பல நிபுணர்கள் வந்து பார்த்து வரப்பட்டது. சுமார் இரண்டு வாரங்கள் சிகிச்சை அளிக்கப்பட்டது. மிகுந்த பிரயாசை எடுத் தும் குணம் காண இயலவில்லை. 22உ மாலை மிக்க நினைவிழந்த நிலையிலேயே இருந்தார்கள். கவனித்த மருத்துவர்கள் அனைவரும் வீட்டிற்கு அழைத்துச் செல்லும்படி கூறிவிட்டபடி அன்று மாலையிலேயே

வீட்டிற்குக் கூட்டி வரப்பட்டது. ஆகாரம் மருந்துகள் எதுவும் கொடுக்கமுடியாத மயக்க நிலையில் COMA) 22.2.82, திங்கட் கிழமை, இரவு 10 மணிக்கு இயற்கை எய்திவிட்டார்கள். நோய்வாய்ப்பட்டு மருத்துவமனை யில் சேர்க்கப்பட்டதிலிருந்து சுமார் ஒன்றரை மாத காலமும் நோய் வாய்ப்பட்ட சகோதரியாரின் பக்கத் திலேயே இரவு பகலாக ஊண் உறக்கம் பாராது தொண்டு செய்து வந்தவர்களில் ஒருவர் நெய்வேலி திரு. M. பழனியப்பன் அவர்களின் மனைவியும் கொத்த மங்கலம் திரு. ராமநாராயணன் அவர்கள் மகளுமான திருமதி செல்லம்மை ஆவார்கள். சகோதரியாரின் காலம் சென்ற அருமைக் குமாரத்தி டாக்டர் மணி குமாரியே உடன் இருந்து தொண்டு செய்வதைப்போல் நான் அவர்களைக் காணப் பெற்றேன். மிக்க நன்றிக் குரியவர்கள். மற்றொருவர் டாக்டர் மணி குமாரியின் மகள் செல்வி கற்பகம் ஆவார் "அம்மா "அம்மா" என் றழைக்கும் பாட்டிக்குத் தொண்டு செய்ய இரவுபகல் உடனிருந்து கடமை ஆற்றினர். மற்றும் திரு. ராம சுப்பிரமணியம் அவர்கள் சகோதரரான திரு. ராம நாராயணன் அவர்கள சென்னைக்கே வந்திருந்து பல உதவிகள் செய்து வந்தது பாராட்டுக்குரியதாகும். திரு. ராம சுப்பிரமணியம் குமாரர்கள் ஜவகர், ராம நாதன், கண்ணன ஆகியோர் உடனிருந்து கவனித்து வந்தார்கள். நானும் எனது குடும்பத்தினரும் சகோதரி யாருக்கு இயன்ற உதவிகளைச செய்தோம். இறுதி எரி யூட்டும் நிகழ்ச்சி மயிலாப்பூர் மயானத்தில் 23உ இரவு நடைபெற்றது. சிதைக்கு மூத்த குமாரர் திரு. ஜவகர் எரியூட்டினர்.

# இரங்கல் செய்திகள்

**23-2-1982 ''விடுதலை'' தினசரி**

அந்தோ

**நீலாவதி இராமசுப்பிரமணியம் மறைந்தார்!**

அய்யா அவர்கள் சுயமரியாதை இயக்கத்தினைத் தொடங்கிய 1925ம் ஆண்டு முதல் 1930 வரையிலான பருவத்தில் பெண்ணடிமையை எதிர்த்து முழக்கமிட்டதை அறிந்து, 'குடி அரசு' ஏடு படித்து ஏராளமான பெண்கள் இவ்வியக்கத்தின் பால் ஈடுபாடு கொண்டுவந்தார்கள். அவர்களும் ஆண்களுக்கு நிகரே என்பதைக்காட்ட, 'குடி அரசு' ஏட்டில் 'தோழர் ......அம்மையார்' என்றே போடப்பட்டது.

அப்படிப்பட்ட அடிநாள் தொண்டர் ''தோழர் நீலாவதி இராம சுப்பிரமணியம்'' அவர்கள் நேற்றிரவு சென்னையில் (22ந் தேதி இரவு 10 மணி அளவில்) காலமானார் என்பதைக் கேட்டு சுயமரியாதை இயக்கத் தோழர்களும் குடும்பங்களும் மிகவும் வருந்தவே செய்வர்.

பல மாநாடுகளுக்கு அந்தக்காலத்தில் அதாவது அரை நூற்றாண்டுக்கு முன்னர் தலைமை தாங்கியும், திறந்து வைத்தும், 'குடி அரசு' பகுத்தறிவு புரட்சி' ஏடுகளில் கட்டுரைகள் எழுதியும கருத்துப் புரட்சியை உருவாக்கும் பட்டாளத்தில் முன்னணி வீராங்கனையாகத் திகழ்ந்தார்.

பிறகு குடும்பச் சூழ்நிலை காரணமாகவே அவர் ஒதுங்கிய நிலையில் வாழ வேண்டியவரானார்.

அவரது ஆரம்பக்காலத் தொண்டுக்கு நாம் தலை வணங்கி வீரவணக்கம் செலுத்துவது நமது கடமை யாகும்.

அவரை இழந்து வாடும் அவரது துணைவராம் அடக்கமே உருவான பெரியவர் திரு. இராமசுப்ர மணியம் அவர்கட்கும், அவரது மகன்களுக்கும், பேரப் பிள்ளைகட்கும்—குடும்பத்தினருக்கும் கழகத்தின் சார் பில் நமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளு கிறோம்.

—கி. வீரமணி
பொதுச் செயலாளர்
திராவிடர் கழகம்

சென்னை
23-2-82

குறிப்பு: இன்று காலை மறைந்த அம்மையார் இல்லத்திற்குச் சென்று கழகப் பொதுச்செயலாளர் மரி யாதை செலுத்தி வந்தார். அவரது குடும்பத்தினருக் கும் இரங்கலைத் தெரிவித்தார்.

## திருமதி நீலாவதி காலமானார்

சென்னை, பிப். 23—சுதந்தரப் போராட்டங்களில் ஈடுபட்ட பழம் பெரும் தேச பக்தர் திருமதி நீலாவதி ராமசுப்ரமண்யம் திங்களன்று இரவு ராஜா அண்ணாமலைபுரத்திலுள்ள இல்லத்தில் காலமானார். அவருக்கு வயது 72. மூன்று புதல்வர்கள் உள்ளனர். அவர் தமது இல்லத்தில் வாரந்தோறும் இலக்கியக் கூட்டங்கள் நடத்தி இலக்கியம் வல்லார்களை அழைத் துப் போற்றி வந்தார்கள். 40 ஆண்டுகளுக்கு முன் இது அரிய செயல். இலக்கியத்தில் மட்டுமின்றி சமூக நலத் தொண்டிலும் ஈடுபட்டார்.

சென்னை தினமணி 24-2-1982

**Neelavathi Ramasubramaniam**

Mrs, Neelavathi Ramasubramaniam (72), a freedom fighter died in Madras on Monday. She is survived by three sons.

Indian Express 24-2 1982

சென்னை. பிப் 23—சென்னையில் பழம்பெரும் தேசத் தியாகியும், சுதந்திரப் போராட்டங்களில் ஈடுபட்டவருமான திருமதி நீலாவதி ராமசுப்பிரமணியன் நேற்று இரவு 10 மணிக்குக் காலமானார்.

அவருக்கு வயது 72. அன்னார் நெடுங்காலமாக இலக்கியப்பணியிலும், சமூக சேவையிலும் ஈடுபாடு கொண்டவர். அன்னாருக்கு மூன்று குமாரர்கள் உள்ளனர்.

மதுரை, தினமணி 24-2-82

அன்புமிக்க ஸ்ரீ ராமசுப்பிரமணியம்! வணக்கம், தங்கள் மனைவி இறைவன் திருவடியை அடைந்ததை அறிந்து மிக்க துயரடைந்தேன். அவர்களுடைய கம்பீரமான பேச்சில் மகிழ்ந்தவன் நான். இனி அந்தக் குரலைக் கேட்க முடியாது என்பதை நினைக்கும் பொழுது மனம் குழம்புகிறது.

கி. வா. ஜகந்நாதன் 25-2-82.

தங்கள் மனைவி திருமதி நீலாவதி அம்மையார் காலமான செய்தி கேட்டு மிகவும் வருத்தமுற்றேறும். பழைய கால நண்பர். பொதுத தொண்டிலும் சமூக சேவையிலும் பலர் ஈடுபடுமுன்னரே செயலாற்றிய புண்ணியவதி. தங்களது துயரம் மகத்தானது.

L. N. கோபாலசாமி
தக்கர் பாபா வித்யாலயம் 25-2-82

திருமதி நீலாவதி ராமசுப்பிரமணியம் பழங்காலத்தில் தைரியமாக முன்வந்த சீர் திருத்தக்காரர்களில் ஒருவர். அவருடைய கம்ப ராமாயணச் சொற் பொழிவு இன்னும் என் காதில் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

ம. ப. பெரியசாமித் தூரன் 25-2-82

தங்களின் அருமைத் துணைவியார் அவர்கள் இவ்வுலக வாழ்வை நீத்த செய்தி அறிந்து பெரிதும் வருந்திேறம்.

கி. ஆ. பெ. விஸ்வநாதன் திருச்சி 28-2-82

அருமைச் சகோதரியார் காலமான செய்தியறிந்து மிக்க துயரடைந்தோம். அருமை அன்னை கஸ்தூரிபா காந்தி அமரரான பிப்ரவரி, 22உயே நினைவாக எங்கள் சகோதரி அவர்களும் 22-2-82, அமரத்துவம் பெற்றிருக்கிருர்கள்.

A. ராகவாச்சாரி, புது டில்லி, 29-2-82

சகோதரியார் நீலாவதி அம்மையார் காலமான செய்தி இடியேறுபோல் என் இதயத்தைத் தாக்கிற்று. அன்பும் பண்பும் நிரம்பிய அருமைப் பெண்மணி. இனிமையும் எளிமையும் மிளிர்ந்த திருவாட்டி. உங்கள் துயரில் பங்கு பற்றும் அன்பன்,

கம்பன் அடிப்பொடி காரைக்குடி 26-2-82

உயர்ந்த பண்பும் சிறந்த பேச்சாற்றலும் பொதுப்பணியில ஈடுபாடும் கொண்ட சகோதரியின் இழப்பு மிகப் பேரிழப்பாகும்.

அழ-வள்ளியப்பா 27-2.82

தங்கள் மனைவியார் திருமதி நீலாவதியார் காலமான செய்தி அறிந்து வருந்துகிறேன்.

மெ. சரவணன் (A. V. M.) 26-2-82

தங்கள் மனைவியார் நீலாவதி அவர்கள் காலமான செய்தி அறிந்து மிகவும் வருந்துகிறேன்.

V. N. சிதம்பரம் மதுரை 28-2-82

தாத்தா ரசிகமணி டி. கே. சி. அவர்களின் அபிமானத்திற்கும் அன்புக்கும் பாராட்டுதலுக்கும் பாத்திரமான அன்னை நீலாவதி அம்மையார் காலமான செய்தி என்னை வந்து

தாக்கிற்று. நாட்டு விடுதலைக்கும் சமூக மறு மலர்ச்சிக்கும் இலக்கிய விழிப்புக்கும் அவர்கள் ஆற்றிய சீரிய பணிகள் அனந்தம்.

தீப. நடராஜன் (T. K. C. இல்லம்)
தென்காசி 1-3-82

அம்மா அவர்கள் உங்களுக்கு உற்ற துணைவியார், மக்கட் கேற்ற தாயார், ஆடை ஆபரணங்களில் அவர்கள் பற்று வைத்த தில்லை. பல ஆண்டுகள் பொதுமக்கட்கு தொண்டு செய்தவர்கள். அவர்களை எவரும் எளிதில் மறக்க முடியாது.

அ. வெ தியாகராஜா சென்னை, 86. 28-2-82

அன்பும் பண்பும் நிறைந்த தங்கள் அருமைத் துணைவியார் திருமதி நீலாவதி அம்மையார் காலமான செய்தியறியப் பெரி தும் வருந்துகிறேன். பெண்மைக்கு இலக்கண மாக விளங்கியவர்களில் நீலாவதி அம்மையார் அவர்களும் ஒருவர். போக்ரோட் வீட்டில் நடைபெற்ற இலக்கியப்பண்ணை விருந்து களை எவ்வாறு மறக்கமுடியும்?

ஏ. கே. செட்டியார் 27-2-82

அன்பே வடிவமான உடலை அக்கினி ஆட்கொண்டு விட்டது. அன்னாரை நேரில் கண்டு பல ஆண்டுகள் ஆகிவிட்டன. ஆயினும் அந்த அன்பின் உருவம் மனதில் நிலைகொண்டிருக்கிறது.

(அபிசீனியா) பழ. நாச்சியப்பன் 1-3-82

திருமதியாரைப் பற்றிய செய்தி அறிந்து வருத்த மடைந்தோம். புத்திரி சோகத்திலிருந்து அவர் மீளவேயில்லை. இருபத்தெட்டு ஆண்டுகளுக்கு முன்பு முதலில் தங்களிருவரையும் அறிமுகம் செய்து கொண்ட போது அவரிடம் காணப்பட்ட உற்சாகத்தையும் உழைப்பையும் பொதுப்பணிப் பொறுப்பையும் நினைத்துப்பார்க்கிறேன். எல்லோருக்கும் எப்போதும் நல்லதே கருதியே உயர்ந்த ஆத்மாவுக்கு அஞ்சலி செலுத்துகிறோம்.

தம்பி-சீனிவாசன் - புதுடில்லி மயூரவல்லி 28-2-82

நீலாவதி அம்மாள் அன்பும் பண்பும நிறைந்தவர்கள். குடும்பப் பெண்களுக்கும் பொதுமக்களுக்கும் வழிகாட்டியாக நடந்தவர்கள். நம்மள் உறவினர்களிடம் மிகவும் பற்றுதலாக இருந்தவர்கள். மணி குமாரியின் இழப்பினால் மனம் உடைந்தவர்கள். மனம் தேறவில்லை. பெயரளவில் நடமாடி வந்தார்கள்.

நா. கி. நா. கிருஷ்ணப்பன்
கீழ்ச்சிவல்பட்டி 1-3-82

அமைதியே உருவாய் அமைந்த தங்கள் அருமைத் துணைவியார் அவர்கள் ஆண்டவன் திருவடி சேர்ந்தமை அறிந்து எங்கள் கண்களில் நீர் பெருகிவிட்டது - சிறந்த பண்பாளர். அடக்கத்தின் உருவம். நம்மை எல்லாம் விட்டுப் பிரிந்துவிட்டது.

பெ. மு. சுப்பையா. ஆத்தங்குடி 3-3-82

தங்கள் அருமைத் துணைவியார் திருமதி லீலாவதி அவர்களின் மறைவு கேட்டு நானும் என் மனைவியும் திடுக்கிட்டோம். கற்பகத் திற்கு ஊன்றுகோல் போல இருந்த அம்மை யாரின் பிரிவு தாங்க முடியாத இழப்பாகும்.

லெ. நடேசன் - சிங்கப்பூர் 2-3-82

செய்தி கேட்டு கலங்கிப் போனேன். வாழ்க்கையில் ஓர் எடுத்துக் காட்டாக நடந்து காட்டிய தாய். அருமை மகள் மணி யைப் பிரிந்ததிலிருந்தே அவர்கள் ஏதோ உல கில் நடமாடினார்கள். சீர்திருத்தத்திற்கும் குடும்பப் பணிவிடை செய்வதிலும் வழிகாட்டி யாக நடந்து காட்டினார்கள்.

மெ. காந்தி (செக்காலை) இராமநாதபுரம் 6.3.82

நான் இவ்விடத்திற்குப் புறப்பட்டு வரும் சமயம் மிக வாஞ்சையுடன் பேசி வழி யனுப்பி வைத்தார்கள். இனி அவர்களைப் பார்க்கும் வாய்ப்பையும், கேட்கும் வாஞ்சை யான பேச்சுக்களையும் இறைவன் எனக்குக் கொடுத்து வைக்கவில்லை. புனிதமான மகா சிவராத்திரியன்று இறைவனடி சேர்ந்திருக் கிறார்கள்.

செ. இராமநாதன்—கோலாலம்பூர் 2.3.82.

பேச்சாற்றல்! எழுததாற்றல்! செயலாற்றல்! மூன்றும் ஒருங்கே ஆற்றவல்ல அருமை மகளை தமிழ் அன்னை இழந்து விட்டள். இயற்கை எய்திய மாத ரசியை இனி எங்கே காண்பேன்.

K. V. பார்த்தசாரதி. கல்கத்தா 1-2-82

தங்கள் மனைவி நீலாவதி அவர்கள் இயற்கை எய்தியதைக் கேட்டது மிக்க வருத்தமாயிருக்கிறது. தங்களுக்கும் தங்கள் குடும்பத்தாருக்கும் என் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

மு. அ. முத்தையா செட்டியார்
(Dr. Raja Sir Muthiah Chettiar of Chettinad)
Madras-28 5-3 82

(பல கடிதங்கள் விரிவஞ்சி விடுக்கப்பட்டன)

# சகோதரியாரின் குடும்பத்தினர் விளக்கம்

கணவர் திரு ராமசுப்பிரமணியம் அவர்கள் அமைதியான சூழ்நிலையில் வாழ விரும்புகிறவர். வயது 77. முதல் மகள் டாக்டர் மணிகுமாரி M.B B.S. சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில்பணியாற்றிவிட்டு அமெரிக்கா இண்டியானு போலீஸ் மருத்துவ மனையில் பணியாற்றினர். 3-12-62ல அங்கு காலமானர். அவருக்கு 7.1.61 ல பிறந்த ஒரு பெண் கற்பகம் ஆரம்ப முதல் இன்று வரை பாட்டனுர் திரு. ராமசுப்பிரமணியம் அவர்கள் கார்டியன் ரிஸீவர் பாதுகாப்பில் இருந்து கொண்டு, இது சமயம் சென்னை மருத்துவக் கல்லூரியில் 4வது ஆண்டு படித்து வருகிருள். காலஞ் சென்ற டாக்டர் மணிகுமாரி—கர்நாடக இசையிலும் தேவாரப் பண் இசையிலும் பல இசைப் போட்டிகளில் பல வெள்ளிக் கப்புகளையும் தங்கம், வெள்ளி மெடல்களையும் பரிசாகப் பெற்றிருக்கிருர். 2வது மகள் சுதந்திரா என்ற பெண் குழந்தை 7, வயதில் திருக்குற்ருலத்தில் 1942 ம் ஆண்டு நிமோனியா சுரத்தால் பீடிக்கப்பட்டு காலமானுள். 3வது திரு. ஜவகர், அழகப்பா காலேஜில் சிவில் எலக்ட்ரிக்கல் இஞ்சினியராகப் படித்து முடித்து தறசமயம் கட்டிடத்துறையில் பணியாற்றுகிருர். 4வது திரு. ராமனுதன் எலக்டிரிக்கல் மெக்கானிக் இஞ்சினியராகப் படித்து முடித்து தற்சமயம் U. A. E. நாட்டில் ஷர்ஜாவில் மெக்கானிக்காகப் பணியாற்றுகிருர். 5வது திரு கண்ணன் B. Sc. படித்து முடித்து சென்னையிலுள்ள ஹிந்துஸ்தான் தாம்சன் நிறுவனத்தில் பணிபுரிகிருர்

## சகோதரியாரின்-"சிந்தனைச் சுடர்"

1. கலப்பு மணம் ஒன்றினால் தான் ஒரே சமயத்தில் வரதட்சணையையும் சாதியையும் ஒழிக்க முடியும்.

2. அரசினர் குற்றவாளிகளுக்குப் பூட்டுவது இரும்பு விலங்கு. பெண்கள் தாங்களாகவே பூட்டிக் கொள்வது பொன் விலங்கு.

3. சாதாரண மனிதனை திருடனாக்குவதற்குக் காரண கர்த்தா நகை அணியும் பெண்மக்களே.

4. பெண் மக்கள் பயங்கொள்ளி ஆவதற்கு மூல காரணம். நகைகளின் சுமை தாங்கி ஆவதே.

5. பெண்மக்கள் முன்னேற வேண்டுமானால் அறிவாலும் அநுபவத்தாலும் பண்பாட்டினாலும் தான் இயலும். வீண் டம்பத்தினாலும் ஆடை அணிகல அலங்காரத்தினாலும் முடியவே முடியாது.

6. பெண், தாலி கட்டிக் கொள்வது, ஒரு பக்கா அடிமைத்தனம். இது தமிழ் நாட்டில் ஆரியர்களால் புகுத்தப்பட்டது. தாலியை மண மகனும் கட்டிக் கொள்ள வற்புறுத்தினால் இது ஒழியும். இது முடியுமா? நடக்கக் கூடியதா?

7. திருமணத்திற்கு ஒத்த மனப்பான்மையுடைய மணமகனும் மணமகளும் தான் முக்கியம் சாதி சடங்கு சாத்திரங்கள். வியாபார நோக்கில் உற்பத்தி ஆனவை.

8. மனிதனுக்கு உடம்பு முக்கியம். அளவோடு பெருத்தால் அழகாகவும் சுகாதாரமாகவும் இருக்கும். அளவுக்கு மீறினால் படும் துன்பம் அவருக்கே தெரியும். பொருளாதாரம் மனிதனுக்கு முக்கியம் அளவுக்கு மீறினால் இதே கதிதான்.

9. பாவச் செயல் ஒன்றிருக்குமேயானால். இருக்க நிழலும் குடிக்கக் கஞ்சியும் உடுக்க உடையுமின்றித் திரியும் மக்களுக்கெதிரில் பலவண்ண ஆடைகளுடனும் அணிகலன்களுடனும் தெருவில் உலா வருவது தான்.

10. வறியவர்கள் மிகுந்த இந்த நாட்டில் உல்லாச விருந்து நடத்துவதும் உணவுப் பொருள்களை வீணடிப்பதும் மன்னிக்க முடியாத குற்றச் செயலேயாகும்.

11. மிகுந்த பொருள் வசதி படைத்தோர் ஏழை மக்களுக்கு கல்வி வசதி, மருத்துவ வசதி, அநாதை இல்லம், தொழில் வசதி போன்ற வற்றிற்கு உதவுவது தான் சிறந்த தர்மம்.

12. பதியிலார் சமூகம் அறவே ஒழிய அனைவரும் பாடுபட வேண்டும். அப்பொழுதுதான் மக்கள் சமுதாயம் மாசு நீங்கும்.

13. மணிவாசகப் பெருமானின் இறைபக்திப் பண்பும், சம்பந்தப் பிள்ளையாரின் பண் இசைத்தென்றலும் வாடிய பயிரைக் கண்டு வாடினேன்'' என்ற வள்ளலாரின் இரக்கச் சிந்தையும் இயேசுவின் நேசபாவமும் நபிகள் நாயகத்தின் அறிவுரைகளும் புத்த பகவானின் நற்சிந்தனையும் விவேகானந்தரின் வீர

மொழியும் கம்பரின் கவித்திறனும் திருவள்ளு வரின் சிந்தனைப் புதையலும் என்னைக் கவர்ந்தன.

14. சத்திய உருவம் சபர்மதித் தெய்வம் மக்கள் மத்தியில் வளரும் நாள் எந்நாளோ?

15. "பார்க்கின்ற மலரூடு நீயே இருத்தி அப்பனி மலரெடுக்க மனமும் நண்ணேன்" என்ற வாசகம் என்னைக் கிறுகிறுக்க வைத்து விட்டது.

16. தெய்வம் தொழுவதைவிட ஏழைகளுக்கு இறக்கம் காட்டுவதுதான் சிறந்த தொழுகை.

17. அநாதைகளுக்கு தொண்டு செய்ய அநேக பிறவி கள் எடுக்க ஆசைப்படுகிறேன்.

18. விதவைகளின் (விருப்ப முள்ளவர்) மறுமணத்தை ஆதரிக்காமலும் அவர்களின் மனக்குமுறலையும் கண்டு கண்ணீரைத் துடைக்காமலும் இருப்பவர் கள் பாவப் பட்டியலில் முதல் வரிசையில் சேர்க் கப்பட வேண்டியவர்கள்.

19. காதல் மணத்திற்கு நாணயமும் உண்மை உணர்ச்சியும உறுதிப்பாடும் தேவை. ஜாதி, மதம், உறவுப் பற்று ஆகிய மணங்கள் வியாபார நோக்கம் மலிந்தவை.வரதட்சணை விரும்புவோரை சட்டமியற்றிக் குற்றவாளி ஆக்க வேண்டும்.

20. இரவில் திருடுபவர்கள் பசிக் கொடுமையால் பயந்து திருடுபவர்கள். இவர்களை ஒரு மாதிரி மன்னிக்கலாம்—பகலில் துணிச்சலாக பதவி யிலிருப்பவர்கள் லஞ்சம் வாங்கி சுகபோகம்

அனுபவிப்பவர்கள் மன்னிக்கக் கூடாத பகல் திருட்டு வர்க்கத்தினராவர்.

21. அரசமரத்துப் பிள்ளையார் தவிர மற்ற பெரும்பாலான ஆலயங்களை வர்த்தகத்துறை நிறுவனங்களாக அரசுபதிவிற்கு (கமர்ஷியல் பிஸினெஸ்) ஆக்கிவிடலாம்.

22. கண்ணப்பனும் நந்தனும் காரைக்கால் அம்மையும் காட்டிய பக்திவலையில் சிக்கிய பரமனை இன்று பலர் பகட்டு வலையில் பிடிக்கப் பார்க்கிறார்கள். வெளிவேஷத்திற்கு மயங்கிய மக்கள் தெளிந்த பாடில்லை. (பக்தி வலையிற் படுவோன் காண்க)

23. மந்தரை சூழ்ச்சிப்படலத்தில் கூனியை, முதுகு மட்டும் கோணல் இல்லை. "உள்ளமும் கோடிய கொடியாள்" என்று கம்பன் வருணித்தானே—அந்தக் கூனி வம்சபரம்பரை நாம் வாழும் இக் காலத்திலாவது அற்றுப் போகக்கூடாதா?

24. தேசம் முன்னேற வேண்டுமானால் கையில் கறைப்டுத்திக் கொள்ளாதவர் கையில் தட்டுத் தடுமாறியாவது தேசம் அகப்பட வேண்டும். கயவர்கள் கூட்டம் விடுமா?

25. சத்தியமும் தர்மமும் தலைநிமிர வேண்டும் ஏன்? இது காந்தி பிறந்தநாடு!

26. நாய் நம்மைக் கடித்தால் அதற்கு வைத்தியம் செய்வது ஒழுங்குமுறை—அதை விட்டுவிட்டு

அதன் நிலைக்கு நாமும் இறங்கி நாயைக் கடிப்பது மனிதத்தன்மைக்கு இழுக்காகும்.
(இன்னா செய்தாரை.— அவர் நாண)

28. செல்வர்கள் சிந்துவதைப் பரம ஏழைகளுக்குக் கொடுக்கலாம். இது மேலான செய்கை. சிந்தாமல் இருப்பதையே கொடுத்தால் அதை விட மேலானது. அதற்கு நன்றி ஏழைகள் சொல்லா விடில் பரவாயில்லை. இறைவன் கண்டிப்பாய் நன்றி செலுத்துவான்.

29. தாமரைக கண்ணன் உலகை கற்பனைக் கண்ணால கண்டு உருவகப்படுத்தி மக்களுக்குச் சொன்ன அறபுதப்பாங்கு திருவள்ளுவர் ஒருவரால் தான் இயலும்.

30. அப்பாவி விதவைகளுக்கு மறுமணம் செய்வதை தடுக்கும் ஒரு பாவத்திற்கு காரணமாயிருக்கும் எந்த மதம், சமயம் ஜாதியானாலும் அது ஒழிய உழைப்பதே பெண் விடுதலைக்குச் செய்யும் ஒப்பற்ற தொண்டாகும்.

31. தன் கடமை எது என்பதை உணர்ந்தவர் அறிவாளி! கடமையை எப்படிச் செய்யவேண்டும் என்பதை அறிந்தவர் திறமைசாலி! கடமையைச் செய்பவர் மிக மிக நல்லவர்!

# ரசிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் கடிதங்கள்

## கடித எண்-1

"எயரோ"
மீனம்பாக்கம்
பல்லாவரம் P. O.

நண்பர் (நீலாவதி) ராமசுப்பிரமணியம் 17.2.41
அவர்களுக்கு, சயிலா. (பர்மா)

பர்மாவிலிருந்து தாங்கள் அன்பு கூர்ந்து எழுதிய கடிதம் வந்து சேர்ந்தது. ரொம்ப சந்தோஷம். சென்ற வாரம் தங்கள் வீட்டுக்குப் போய் அம்மாள் குழந்தைகளைப் பார்த்து விட்டு வந்தேன். காய்ச்சல் வந்த குழந்தையும் சௌகரியமாக இருந்தது. தாங்கள் ஊரில் இல்லாத போது குழந்தைக்குக் காய்ச்சல் வர நேர்ந்தது பற்றி அம்மாளுக்கு ரொம்பக் கவலை. எடுத்துக் காட்டாய்ச் சொல்ல வேண்டிய தீரப்பெண்மணியானதால் அவர்கள் எல்லாக் காரியங்களையும் கலங்காத மனநிலையோடு சரிவரப் பார்த்து குழந்தையைப் போஷித்து வந்தார்கள். குழந்தை நல்ல ஆரோக்கியத்துடனேயே இருக்கிறது என்று இன்றும் செய்தி, ஆள் வசம் அனுப்பினார்கள். குழந்தைக்கு உடம்பு சௌகரியம் ஏற்பட்டதும் சென்ற வாரம் அம்மாளே வந்து செல்லையாவை (தீத்தாரப்பன்) பார்த்துப் போனார்கள்.

"லோகோபகாரி" ஆண்டுமலரில் "நாட்டுப் பணியில் நமது கடமை" என்ற தலைப்போடு ஒரு அரிய கட்டுரை அம்மாள் எழுதியிருக்கிறார்கள். அவர்கள் மேடையில் நின்று பேசக் கேட்டிருக்கிறேன். எழுத்தைப் பார்த்ததில்லை. இப்போதுதான் பார்க்கிறேன். பேச்சிலுள்ள வீரம் எல்லாம் எழுத்திலும் வருகிறது. பொதுவாக அநேகர் நன்றாய் பாவத்தோடு பேசுவார்கள். ஆனால் எழுத ஆரம்பிக்கும் போது விஷயத்தில் மனம் நிற்காமல் இந்த வார்த்தை அந்த வார்த்தையென்று வேட்டையாடித் திரிந்துவிடுவார்கள். அம்மாள் எழுதிய கட்டுரையில் விஷயமே நின்று பேசுகிறது. அதனால் பாஷைக்குத் தனியான வேகம் ஏற்படுகிறது. பெண் இனத்தின் கஷ்டத்தை சதா உணர்ந்து கொண்டிருக்கிறார்கள். அதனால் எழுதும் போது பரிதாபம், கொதிப்பு எல்லாம் சரியான பாவத்தோடு கூடிய பாஷையில் வெளிவந்து விடுகிறது.

பண்டிதர்கள் எழுதும் போது சோகம், வீரம் முதலிய பாவங்களுக்கு உரிய சொற்றொடர்களும் விளிகளும் வேண்டிய மட்டும் இருக்கலாம். இருந்து என்ன செய்ய? உண்மை உணர்ச்சி இல்லாதபோது எல்லாம் கோமாளிக் கூத்தாய்ப் போய்விடுகிறது.

ஒரு பீமன் (பலசாலி) பெரிய கல் ஒன்றை சாக்கில் பொதிந்து, சாக்கை ஒரு கயிற்றில் மாட்டி தன் முழு வலிமையையும் புகுத்தித் தூக்கிவிட்டான். பார்த்தவர்கள் எல்லாரும் கைத்தட்டினார்கள்.

பக்கத்தில் நின்று கொண்டிருந்த கோமாளியும் சாக்கில் பொதிந்து வேறொரு பாரத்தைக் கொண்டு வந்து சேர்க்கச் செய்தான். கயிற்றைப் பிடித்து ரொம்ப ரொம்ப முக்கித்தக்கித் தூக்கி மறுபடியும்

பாரத்தை மெள்ள ஜாக்கிரதையாக கீழே வைத்தான். கோமாளியையும் பார்த்து எல்லாரும் அதிசயித்தார்கள். கடைசியில் சாக்கை விரித்துப் போட்டான்; வந்ததே பிரப்பம் பாய்ச் சுருட்டு!

பண்டிதர் (BA. BL. கள் தான்) நடைதான் இது. ஆனால் நம்முடைய ஜனங்களுக்கு கோமாளி தூக்கினது தான் பெரியதாய்த் தோன்றுகிறது. தசை நரம்பின் முருக்கிலிருந்தே பழுவைக் கணக்கிட வேண்டும் அல்லவா? அப்படியேதான் எழுத்திலும். அம்மாள் எழுதியதில் எல்லாம் உள்ளான ஆர்வம் இருக்கிறது. தமிழ் அது காரணமாக அழகாக இருக்கிறது.

தங்கள்

டி. கே. சிதம்பரநாதன்

கடிதஎண்-2

"எயரோ'

மீனம்பாக்கம்

21.1.42

அருமைச் செல்வி நீலாவதி அம்மைக்கு!

ஒரே ஆத்திரத்தோடும் அருமையோடும் எழுதிய கடிதம் (11 1.42) கிடைத்தது. ரொம்ப சந்தோஷம். தங்கள் கடிதத்தைப் பார்த்ததும் கொத்தபங்கலத்துக்கு வந்துவிடலாமா என்றுதான் பட்டது. தங்கள் வீடு வெகுவிலாசம். அதைவிட விலாசம் தங்கள் மனசு. அப்படியானால் சௌகரியமாய் இருப்பதற்க்கு கேட்பானேன்.

பத்திரிகைகளைப் பார்த்தால் *சென்னைக்கு அவ்வளவாக சமீபத்தில் ஆபத்தில்லைதான். அப்படி ஏதேனும் ஆபத்து வந்து விடும் என்று ஏற்பட்டால் அப்படியே கொத்தமங்கலத்துக்கு வந்து விடுகிறேன். மகள் வீட்டுக்கு வர தந்தைக்கு எப்பொழுதும் உரிமையுண்டு. ஆசையும் உண்டுதானே. துணைவர் குழந்தைகள் எல்லாரும் சௌக்கியம் தானே?

இன்றுஇரவு அண்ணாமலை நகருக்குப் போகிறேன். நாலு நாள் தங்கிவிட்டு இங்கே திரும்ப உத்தேசம். தமிழிசையை அங்கே வளர்க்க வேண்டுமாம். பாடகர்கள் வெந்நீர் விட்டு வளர்த்து விடுவார்களோ, என்ற பயந்தான் வருகிறது.

அடிக்கடி தங்கள் கடிதத்தை எதிர்ப்பார்க்கிறேன்.

தங்களன்புள்ள

டி. கே. சிதம்பரநாதன்.

---

*சென்னை துறைமுகத்தில் ஜப்பான் குண்டு விழுந்த சமயம் நகரமக்கள் பெரும் அளவில் வீட்டை விட்டு வெளியேறி விட்டனர். சகோதரியாரும், "இலக்கியப் பண்ணையை" நிறுத்திவிட்டு கொத்தமங்கலம் தங்கள் கிராமத்துக்குச் சென்று விட்டார். 'இலக்கியப் பண்ணை' நடந்த தங்கள தி. நகர் இல்லத்தை அரசாங்கத்தார் தற்காலிகமாக ஸ்மால் காஸ் கோர்ட் நடத்த ஆக்ரமித்துக் கொண்டு நடத்தி வந்தார்கள். உயர்நீதிமன்றம் தி. நகர் ஹோலி எஞ்சல் கான்வெண்டில் நடைபெற்றது.

கடித எண்-3

வண்ணார்பேட்டை
திருநெல்வேலி
**13 6.42**

அருமைப்புதல்வி நீலாவதி அம்மைக்கு,

தேரழுந்தூருக்கு தங்கள் கடிதம் வந்தது. தாங்களும் துணைவரும் வராதது குறித்து கந்தசாமிப்பிள்ளை அவர்களுக்கும் மற்றவர்களுக்கும் ஆற்றாமைதான். ஆனாலும் தங்கள் கடிதம் ஒரு ஆறுதல். கம்பர் விழா சிறப்பாய் நடந்தேறியது. ஸ்ரீ T. M. கிருஷ்ணசாமி ஐயர் அவர்களும், ஸ்ரீ சுப்பராயரும் மனைவியாரும் வந்தார்கள். நண்பர் சா. கணேசன் செய்த பிரசங்கம் ரொம்ப அருமையாய் இருந்தது.

தேரழுந்தூரிலிருந்து MN. ST. அவர்களுடன் சிதம்பரம் போனேம். அங்கே அவர்களது இளமையாக்கியார் கோவில திருப்பணி ரொம்ப அருமையாய் இருந்தது. தெப்பக்குளம் விசாலமாய் அமைந்திருக்கிறது. தண்ணீரும் நல்ல தண்ணீர். எங்களுக்கு ஜாகை அதன் கரையில்தான். சுகமாக ஒருநாள் அங்கே பொழுது போக்கினேம். தாங்கள் அங்கே வராதது பிசகு தான். ஆனால்,

*வைகைக் கரைக்கு வராததைப் பிசகு என்று சொல்லிவிடமுடியாது. தவறு என்றே சொல்ல வேண்டும். காடும தோப்பும் சேர்ந்து கோடையை வெருட்டி விட்டன. நல்ல காற்று; நல்ல தண்ணீர்; எல்லாவற்றையும் விட நல்ல குழாம். கண்டனூர்க்கார

*வைகைக்கரை - கண்டனூர் அருகில உள்ளது.

ரைப் பற்றியும் அவர்கள் விருந்தோம்பலைப் பற்றியும் புகழ்ந்து முடியாது. ரசிகர்களது கூட்டம் என்ருல் பொதிகையில் அகத்தியரைச் சுற்றி உள்ள (சுற்றி யிருந்த) கூட்டந்தான். ஒரே வெறியோடு தமிழை அனுபவித்தார்கள். தாங்கள் உடனிருந்தால் ரொம்ப வும் அநுபவித்து பாராட்டியிருப்பீர்கள். கண்ட னூர்க்காரர் ஒவ்வொரு வருஷமும் இந்தச் சங்கத் தைக் கூட்ட வேண்டும் என்று சுதந்திர பாத்தியதை யோடு கட்டளை பிறப்பித்திருப்பீர்கள். எல்லாம் ரொம்ப அருமையாயிருந்தது.

ரொம்ப சந்தோஷம். ராவ் சாகிப், வெ. ப. சுப்பிர மணியமுதலியார் அவர்கள் தலைமையில் 28-6.42 அன்று இலக்கியப்பண்ணையைக் குற்ருலத்தில் ஆரம் பிக்கப் போகிறீர்கள். நன்ருய் நடக்கும் என்று நம்பு கிறேன். ஜூன் கடைசிதான் நல்ல காலம் - தமிழ்ப் பண்ணை ஆரம்பமாக.

சாரல் இன்னும் தயங்கிக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. ரொம்ப ஏமாற்றம் பயிர்பசசை பாடு என்ன ஆகப் போகிறதோ?

சா. கணேசன் அவர்கள் எப்போது வரப்போகிருர் கள். வைகைக்கரையில் தமிழ்ச்சங்கத்தை நிறுவ வேண்டும் என்று தெய்வ கடாட்சத்திஞல் அவர் களுக்குத் தென்பட்டு விட்டது. அவர்களுடைய அரு மையான நாடக திறத்தைத் தொடாந்து பத்து நாளைக்கு மேலாகவே அநுபவிக்க முடிந்தது. அதன் மூலமாக தமிழின் சுவை எனக்கு அதிகரித்தது.

கூடிய சீக்கிரம் அங்கு வருகிறேன். குழந்தைகள் எல்லாரும் சௌக்கியந்தானே?

தங்களன்புள்ள
டி. கே. சிதம்பரநாதன்.

கடித எண் -4

வண்ணார்பேட்டை
திருநெல்வேலி
**11.5.42**

அருமைப்புதல்வி நீலாவதி அம்மையார் அவர்களுக்கு

இரண்டு மூன்று நாள் நண்பர் சா. கணேசன் எம். என். எஸ். டி. சிதம்பரம், ஆசிரியர் சீனிவாச ராகவன் இவர்களுடன் ராஜபாளையத்திலும் சங்கரன் கோயிலிலும் உறவாடக் கிடைத்தது. சங்கரன் கோவிலில் பாஸ்கரன் அவர்களுடைய விருந்தாளிகளாய் ஒரு நாள் பொழுதை நன்றாய்க் கழித்தோம். அன்று அடிக்கடி தங்களைப் பற்றியும் தங்கள் அருமைத் துணைவரைப் பற்றியும் பேச நேர்ந்தது. V. P. சுப்பிரமணிய முதலியார் அவர்களும் சங்கரன் கோயிலில் எங்களுடன் கலந்து கொண்டார்கள். நல்ல குழாமாய்ச் சேர்ந்தது. அப்போது அறிஞர்களைப் பற்றி நினைப்பது இயல்பு தானே! தங்களையும் துணைவரையும் பற்றி நினைக்க நேர்ந்தது இப்படித்தான். தாங்களும் துணைவரும் குழந்தைகளும் சௌக்கியமாயும் உல்லாசமாயும் பொழுது போக்கிக் கொண்டிருக்கிறீர்கள் என்று நம்புகிறேன். சென்னையில் வேண்டிய அளவுக்கு மேலேயே தொண்டு செய்ய இடம் இருந்தது. கொத்தமங்கலத்தில் என்ன செய்ய இருக்கிறது. வீடுகளை இடித்து சௌகரியப்படுத்த இடங்கொடுத்தால் நன்றாய் முனைந்து வேலை செய்வீர்கள். ஆனால் அதற்கு யார் இடங்கொடுப்பார்கள்.

நண்பர், சொ. முருகப்பா அவர்கள் மே மாசம் கடைசி வாரம் காரைக்குடியில்த் தங்க வேண்டும்

என்று எனக்கு எழுதியிருக்கிறார்கள். நானும் ஒப்புக் கொண்டு 24-5-42 முதல் காரைக்குடியில் தங்கும்படி வந்து சேருகிறேன் என்று எழுதியிருக்கிறேன். ஜூன் மாசம் 2, 3, தேதிகளில் தேரழுந்தூரில் கம்பன் விழா நடத்த ஏற்பாடு செய்திருக்கிறார்கள். கம்பர் விழாவுக்கு தாங்களும் துணைவரும் இல்லாமலிருப்பீர்களா! இருந்தால் தானே ஜோராய் இருக்கும். முருகப்பா உங்களுக்குத் தகவல்தான் கொடுத்திருப்பார்களே!

சமீபத்தில் இந்தப் பக்கங்களில் தமிழுக்கு ஒரு கிளர்ச்சி. ராஜபாளையம், சங்கரன்கோயில், புளியங்குடி முதலிய இடங்களில் தமிழ்ச் சங்கங்கள் நிறுவினார்கள். பண்ணையில் விதை விதைப்பது எளிதுதான். தண்ணீர் பாய்ச்சிக் கொண்டே இருக்க வேண்டுமே தங்களைப் போல! இதை யோசிக்கும் போதுதான் கஷ்டமாயிருக்கிறது. ஏதோ உணர்ச்சி வந்தது ரொம்ப திருப்தி.

தங்கள்
டி. கே. சிதம்பரநாதன்

கடித எண்-5

"எயரோ"
மீனம்பாக்கம்
19-2-42

அருமைப் புதல்வி நீலாவதி அம்மைக்கு,

தங்கள் அருமைக் கடிதம் (15-2-42) கிடைத்தது. ரொம்ப சந்தோஷம். "சிறையிலிருந்த போது சிறை வாசம் அல்ல! இப்போது உண்மைச் சிறைவாசம்" என்று சொல்லுகிறீர்கள். ரொம்ப உண்மை. நான் அதை முழுவதும் உணர்ந்து அங்கீகரிக்கிறேன். சமுத்

திரத்திலுள்ள மீனை கீழும் மேலும் நாலா பக்கமும் உலவி திரிந்த மீனைப் பிடித்து ஒரு சீசாவுக்குள் போட்டு வைத்தால் எப்படியிருக்குமோ, அப்படிததான் தங்கள் நிலையும் அருமைத் துணைவர் நிலையும். நீங்கள் இருவரும் சமூகத் தொண்டு இயற்றிச் சுவை கண்டவர்கள். தொண்டியற்ற இடமில்லை அங்கே, என்று சொல்லவில்லை; போட்டி போட்டுக் கொண்டு தான் கெடுத்தான் போவேன், நீங்கள் என்ன என்னைத் திருத்துவது என்று சொல்லும் பான்மையுடையவர்கள் இடையில் நீங்கள் இருவரும் இருந்து என்ன செய்ய!

வேலூர் சிறையில் என்னை நினைத்துக் கொண்டிருக்க நேர்ந்த ஒன்றால் இலக்கிய அனுபவத்துக்குத்·தாங்கள் எவ்வளவாய் உரியவர்கள் என்பது தெரிகிறது. தாங்கள் முத்தொள்ளாயிரச் செய்யுள் ஒன்றின் மூலமாகத் தமிழ் இலக்கியம் எத்தகையது என்று அறிந்து கொண்டதாக எடுத்துச் சொன்னீர்கள். ஆங்கிலத்தில் இப்படி யாராவது சொல்லியிருந்தால் பலபடியாக எல்லாம் அதைப் பற்றிப் பேசியும் எழுதியும் வியந்திருப்பார்கள். தமிழர்களுக்கு எப்படியோ! வியக்கும் சக்தியை (அற்புத ரஸம்) அமைக்க மறந்து விட்டான் பிரமன்!—நம்மவர்களுக்குத் தாம்பூலம் தொடுக்கும் போது தாம்பாளத்துக்குப் பதிலாக பூரணசந்திரனையே கொண்டு வந்து அதில் தாம்பூலத்தை வைத்துக் கொடுங்கள்; தாம்பூலத்தைக் கையில் எடுத்துக் கொண்டு அப்படியே போய் விடுவார்கள். அடே பூரண சந்திரனில் அல்லவா வைத்துக் கொடுத்தார்கள், என்று வியக்க மாட்டார்கள், நம்மவர்.

இலக்கியப் பண்ணையில் எப்படியோ பலரும் வந்து தமிழை அனுபவித்துப் போய்விட்டார்கள். வந்தவர் களுக்கு ஒருவித ஏக்கமே உண்டாய் விட்டது. பலரும் என்னைச் சந்தித்துப் பண்ணை எப்போது ஆரம்பிக்கும் என்று கேட்கிறார்கள். யுத்த காலமானதால் வல்லரசு களைக் கேட்டுத்தான் சொல்ல முடியும் என்று பதில் சொல்லி வருகிறேன்.

இப்போது என்னைப் பார்த்து மிரட்டிக் கொண் டிருப்பவர்கள் இருவர்—சிரஞ்சீவி நண்பர் கணேசன் ஒருவர்; மற்றவர் சிரஞ்சீவி நண்பர் கம்பர்—இந்த இருவர் காரியமாகவே தொடர்ச்சியாய் வேலை செய்து வருகிறேன். ஏப்ரல் மாசம் முதல் தேதி (கம்பர் விழா வில்) என்னுடைய புஸ்தகம் வெளிவரவில்லை என்றால், கம்பர் பாடு கஷ்டர்தான். இது அவ்வளவு பெரிய காரிய மில்லை. ஆனால் கணேசர் துர்வாச முனிவராய் ஆய் விடுவார். இது லேசான காரியம் அல்ல.

கம்பராமாயண வேலை துரிதமாகவே நடக்கிறது. நான் கம்பராமாயணத்தை வெளியிடுகிறேன் என்றால் நம்முடைய பெண்மணிகளுக்குக் கம்பரை அறிமுகப் படுத்துவதற்காகவே என்பதுதான் நோக்கம். அதனால் தங்களுக்கு அது மனசுக்கு மிக உவந்ததாயிருக்கும். தங்கள் கையில் அது நல்லதொரு கருவியாக எத்தனையோ விஷயங்களை நல்லமுறையில் அனுபவிக் கவும் விளக்கவும் உதவும்.

20-2-42

நேற்று இரவு கிறிஸ்தவ கலாசாலையில் (Christian college) நண்பர் ஏ. கே. செட்டியாரவர்கள் "உலகச் சுற்றுப் பிரயாணி" என்பதைப் பற்றிப் பேசினார்கள். இதுவரை கேளாத முறையில் இருந்தது. எத்தனையோ

விஷயங்களை நன்ருய் அனுபவித்திருக்கிருர்கள், என்பது தெரிய வந்தது. அனுபவித்தது மாத்திரம் அல்ல. நல்ல சுகமான தமிழில் கேட்பவர்கள் ரசித்துக் கொண்டே இருக்கும்படி பேசினுர்கள்.

ஆங்கிலத்தில் எத்தனையோ பேரைக் (பிரயாணி கள்) கேட்டுத் தான் இருக்கிறேன். ஆனுலும் செட்டி யார் அவர்கள் பிரசங்கம் ரொம்ப மேலாகவே இருந் தது. அவர்கள் என்னையும் (தலைவர்); மற்ற சபை யோரையும் சிங்கப்பூர், ஜப்பான், அமெரிக்கா, ஜெர்மனி, தென் ஆப்பிரிக்கா முதலிய இடங்களுக் கெல்லாம் உடன் அழைத்துச் சென்ருர்கள். எங்களுக்குச் செலவே இல்லை. கஷ்டமும் கிடையாது.

நம்முடையவர்களுக்கு ரஸ உணர்ச்சியே இல்லை என்று சொன்னுல்க் குற்றமில்லை. இவ்வளவு அழகாகப் பேசுகிறவர்களைப் பாராட்டிப் பேசுவார் இல்லை தான். உபயோகமற்ற படாடோபமாய் இருந்தால் "பேஷ்! பேஷ்!" என்பார்கள், கைகளை ஓயக் கொட்டுவார்கள். படாடோபமே! உன் பெயர் தமிழன்.

இப்போது கொத்தமங்கலத்துக்கு வந்து தங்கள் உபசாரத்தையும் அன்பையும் பெற வசதி இல்லை. கம்பர் விழாவை ஒட்டித்தான் வர இயலும். நல்ல குழாமாக இருந்து பொழுதுபோக்கலாம் என்று எண்ணிக் கொண்டிருக்கிறேன்.

தங்கள் அருமைத்துணைவரவர்கள் வந்து வெகு ரஸமான விஷயங்களை எடுத்துச் சொல்லிக் கொண்டு வந்தார்கள். சாப்பாட்டுக்கு நேரமாய் விட்டது. அவர் களை எதிர்பார்த்து மாம்பலம் வீட்டுக்கு வந்தவர்கள் பாடு கஷ்டமாய்த் தான் இருந்திருக்கும். அதனுல் என்ன? மீனம்பாக்கத்தில் நன்ருய்ப் பொழுது போய்

விட்டது. அவ்வளவுதானே வேண்டும் இந்த சுயநலப் பிராணிக்கு.

தம்பியும் குமாரத்திகளும் சௌக்கியந்தானே? கோத்தமங்கலத்துக்கும் போக்கு ரோடுக்கும் வெகு தூரந்தான்.

தங்கள்

டி. கே. சிதம்பரநாதன்.

கடித எண்-6

திருக்குற்றாலம்
தென்காசி
24.6.46

அருமைப்புதல்வி நீலாவதி அம்மைக்கு,

11.6.46 அன்று அனுப்பிய அன்பான கடிதம் கிடைத்தது. சென்னையிலிருந்து வந்து நாளாயிற்று. இராஜாஜியும் குமாரத்திகளும் வந்து ஒரு வாரம் உடன் தங்கினார்கள். எம். எஸ். எஸ்ஸும், சதாசிவமும் வந்து மூன்று நாள் தங்கிவிட்டு போய்விட்டார்கள். என்ன என்னவோ வேலைகள் அவர்களுக்கு, ஓய்வில்லாத வேலைகள்தான். இல்லாத பட்சம். சாவகாசமாய் இருந்து உடம்பைத் தேற்றிக் கொண்டு போகலாம்.

நாளை நின்று நான் இங்கிருந்து புறப்பட்டு திருச்சிக்குப் போய் அங்கிருந்து 27ஆம் தேதி பிற்பகல் 1.45க்குப் புறப்பட்டு புதுக்கோட்டை போய் அங்கிருந்து கொப்பனாபட்டி போகிறேன். 28ஆம் தேதி

கோப்பனுபட்டியில் ஆண்டு விழா. அதற்குத் தாங்களும் வருவதாக எழுதியிருக்கிறீர்கள். ரொம்ப சந்தோஷம்.

3ஆம்தேதி காரைக்குடியில் திருவாசக விழா. இடையிலுள்ள நாட்களை காடுகாத்தான், நேமத்தான்பட்டி, காரைக்குடி, அமராவதி புதூர் முதலிய இடங்களில் செலவழிக்கலாம் என்று எண்ணுகிறேன். ஏதோ ஊர்கள் பல என்று தோன்றுகிறது. அலைச்சல் குறைவுதான்.

தங்களுடன் தங்குவதில் யாதொரு கஷ்டமுமில்லை. நன்ருய்த்தான் பொழுது போகுமே. ராமுதான் சத்சங்கத்தைக் கூட்டி விடுகிருனே!

சா. க. வுக்கு உடம்பு சௌக்கியந்தானே. வயிற்று நோவு ஒன்றுமில்லை அல்லவா? தேச சேவைக்காக ஏற்பட்ட தேகம். அதை நன்ருய் பார்த்துக்கொள்ள வேண்டும். துணைவர் வித்துவான் சோ. ம. முருகப்பா, மரகதவல்லி அம்மாள் மற்றும் அன்பர்களிடம் எல்லாம் விசாரித்ததாகச் சொல்ல வேண்டும். முகத்திலுள்ள கட்டி குணமாய் விட்டது ரொம்ப ரொம்ப திருப்தி. என்னுடைய இதயத்திலுள்ள புண் ஆறி விட்டது என்று தான் சொல்ல வேண்டும். எவ்வளவு மிருதுவான அழகிய முகம் அதில் அல்லவா கஷ்டத்தைக் கொடுத்து விட்டது. இப்போது பழைய முகம் வந்துவிட்டது. வேறு என்ன வேண்டும் எனக்கு. மற்றவை நேரில்

இப்படிக்கு,

டி. கே. சிதம்பரநாதன்.

கடித எண்-7

டி. கே. சிதம்பரநாதமுதலியார்
C/o V. N. Rajan Esq I. C. S.
33/2 Balligunj
Circular Road
Calcutta.

அருமைப்புதல்வி நீலாவதி அம்மைக்கு,

நீங்கள் எல்லாரும் நம்பவே மாட்டீர்கள் 1உ குற்றாலம், 2உ சென்னை 4உ கல்கத்தா, 6உ சாந்தி னிகேதன், 9உ மறுபடியும் கல்கத்தா — இந்த விதமாக ரயிலிலும், விமானத்திலுமாக ஓடி ஆடித் திரிந்து கொண்டுவருகிறேன். உடம்பு நூற்றுக்கு நூறு சுகம் என்று சொல்லிவிட முடியாது. அப்படி அப்படித்தான்- ஆனாலும் கல்கியும் சின்ன அண்ணாமலையும் உடன் இருப்பதால் கவலைக்கிடம் இல்லை. உல்லாசமாய்ப் பொழுது போய்க்கொண்டிருக்கிறது.

சாந்திநிகேதனில் எல்லாருக்கும் தமிழ்க்கலை பற்றி ரொம்ப ரொம்ப மதிப்பு. கலைக்கு உறைவிடம் தெற்குத்தான், வடநாடு அல்ல என்று நந்தலால் போஸ் முக்குல்டே, முதலான கலைஞர்கள் பட்டவர்த்தன மாகச் சொல்லுகிறார்கள்.

இதெல்லாம் காரணமாக எனக்கு ரொம்ப மரியா தை காட்டினார்கள். ராஜா ஸர் அவர்கள் அளித்த தமிழ்ப் புஸ்தகாலயத்தையும் மிக்க ஆர்வத்துடன் வரவேற்றார்கள். எல்லாம் ரொம்ப திருப்தியாய்ப் போய் விட்டது.

என்னை சாந்திநிகேதனிலேயே இருந்துவிட வேண்டும் என்று அங்குள்ள பிரமுகர்கள் சொல்லு கிறார்கள். எனக்கும் ஆசைதான். ஆனால் முடிகிற காரியமா? 9உ புறப்பட்டு வந்துவிட்டோம்.

கல்கத்தாவிலுள்ள ஆடவர் பெண்டிருக்குள்ள தமிழ் மோகம் அபாரம். தினம் நன்றாய் வேலை வாங்கு கிறார்கள் என்னை. இவ்வளவு நுட்பமாய்த் தமிழைக் கம்பரை அநுபவிக்க வேறு சபை கிடையாது என்றே சொல்லலாம். அரசியல் சம்பந்தமாக புதுயுகம் நாளை இரவு பன்னிரண்டு மணிக்கு (14 ஆம் தேதி) பிறக்கப் போகிறது. அதற்கு நல்ல சகுனம் போல தமிழ் ஆர்வமும் உண்டாகியிருக்கிறது.

நாளை இரவு 1 மணிக்கு இராஜாஜி கவர்னர் பதவி ஏற்கிறார்கள். கல்கி, சின்ன அண்ணாமலை, நான் மூவரும் உடனிருந்து கண்டுகளிக்கப் போகிறோம்.

சா. கணேசன், வித்துவான் இருவருக்கும் நமஸ் காரம் சொல்ல வேண்டும்.

துணைவர், குழந்தைகள் எல்லாருக்கும் அன்பு. 17 ஆம் தேதி சென்னை வருகிறோம்.

டி. கே. சி.

**கடித எண்-8**

திருக்குற்றாலம்
தென்காசி
**9.1.48**

அருமைப் புதல்வி நீலாவதி அம்மைக்கு,

கடிதம் கிடைததது. மிக்க சந்தோஷம்.

**6-1-48** அன்று செட்டிநாடு வந்து தங்களையும் வந்து பார்க்க திட்டம் போட்டிருந்தேன். ஆனால் முடியாது போயிற்று.

**5**ஆம் தேதியே குற்றாலம் வந்துவிட்டேன். தங்கள் அன்பான கடிதமும் வந்தது. ஏதோ நாம் தவறினாலும் அன்பு தவறாது என்று தெரியவந்தது.

சென்னையிலிருக்கும்போது பாஸ்கரனும் குடும்பத்தாரும் வந்தார்கள். அவர்களது மூலமாகத்தான் துணைவர் பர்மா போயிருப்பதாகவும் தாங்களும் குழந்தைகளும் காரைக்குடியில் இருப்பதாகவும் தெரிய வந்தது. உடனே கடிதம் எழுத எண்ணினேன். சங்கீதக் கச்சேரிகள் போட்ட கூப்பாட்டில் ஒன்றும் ஓடவில்லை.

தங்களுக்கு உடம்பு சௌகரியமாய் இருக்கிறதல்லவா? நல்ல சத்தான ஆகாரம் சாப்பிட வேண்டும். சர்க்கரையை நன்றாய்ச் சேர்க்க வேண்டும். — டி.கே.சி.

குறிப்பு : எனக்கு உடம்பு சுமாராக இருக்கிறது. புதல்விப் பேறும் அவர்களது அன்பும் இருக்கும்போது உடம்புக்கு ஒரு குறையும் வராது. தங்கள் அன்புதான் நல்ல டானிக் ஆயிற்றே!

டி. கே. சிதம்பரநாதன்.

கடித எண்-9

COURTALLAM
Tenkasi S.I. R.
*13-1-48*

அருமைப்புதல்வி நீலாவதி அம்மைக்கு,

முந்தின கடிதம் வந்திருக்கும். இத்துடன் "இதய ஒலி" புஸ்தகம் ஒன்று வித்வான் அரு. சோம. அவர்களுக்காக அனுப்பி இருக்கிறேன். அவர்களுக்கு அதை உடனே அனுப்பி வைக்க வேணும்.

அவர்களிடமிருந்து நோய்வாய்ப்பட்டு ஆஸ்பத்திரியிலிருப்பதாகவும் சிகிச்சை நடந்து வருவதாகவும் கடிதம் வந்தது. மிகுந்த கஷ்டத்தின் மேல்தான் எழுதியிருக்கிருர்கள். அவர்களுடைய தமிழ் ஆர்வமோ தங்களுக்குத் தெரிந்ததே. என்னைச் செட்டி நாட்டுக்கு முதல் முதலாக அறிமுகப் படுத்தியது அவர்கள்தான். அப்படி ஒரு பண்பட்ட குழாத்தோடு கலக்க நேர்ந்த சம்பவத்தை அடிக்கடி ஞாபகப்படுத்திக் கொள்ளுவது வழக்கம். அதனுல் வரும் இன்பத்தையும் அனுபவித்துக் கொள்வேன்.

வித்வான் அவர்கள் என் கையெழுத்தோடு கூடிய ஒரு புஸ்தகம் கைக்கு வேண்டும் என்று எழுதியிருந்தார்கள். அவர்களுக்குத் தமிழ்க் கவியின் இதயத்தைக் கண்டு அநுபவிக்க வேண்டும் என்பது தணியாத ஆத்திரம். இதய ஒலி முழுதும் அநேகமாய் அந்த லக்ஷ்யத்தை நாடியே செல்லுவது என்று சொல்லலாம்.

80 பாடல்கள் புஸ்தகத்தில் இருக்கின்றன. அவைகளைச் சுவைக்கும் முறையில் சுவைத்துப் பார்த்தால்

போதும். தமிழ்க் கவியின் இதயம் இன்னதென்று தெரிந்து கொள்ளலாம்.

எஸ். வி. வி. என்ற பிரபல எழுத்தாளர் பற்றி தங்களுக்கு நன்றாய்த் தெரியும்.

முதன் முதலாக "இதய ஒலி" வெளியான போது அதை மூன்று தடவை எஸ். வி. வி. படித்திருந்தார். அவர் சொன்னார்: "கவிகளை நாங்களே அனுபவிக்கும் படி மெள்ளக் கையைப் பிடித்துக் கொண்டு போய் விட்டுவிடுகிறாய். இதுமாதிரி ஆங்கிலத்திலேயே ஒருவரும் எழுதவில்லை" என்று சொன்னார்.

அவர் சொன்னதில் உண்மை இருக்கும் என்று எண்ணுகிறேன்.

ஆனால் எஸ். வி. வி. மாதிரிப் புஸ்தகத்தை என்னுடன் ஒத்து அனுபவிப்பவர்கள் பலரில்லை. காரைக்குடி V.R.M. செட்டியார் அவர்கள் அவ்வாறு அனுபவித்தவர்களில் ஒருவர். மற்றவர்கள் எல்லாரும் நம்மோடு எட்டியே இருப்பவர்கள். அது விஷயம் அல்ல.

பொதுவாக நம்மவர்கள் ஒரு புஸ்தகம் மேலானதென்று கருத வேண்டுமானால், விளங்காமல்த் தலைவலி கொடுக்கக் கூடியதாய் எலியைப் பிடிக்கப் புலியைச் சூப்பிடிக்க விடுவதாய் இருக்க வேண்டும். புஸ்தகம் காலித்தகரத்தை அடித்து இடிமுழக்கம் செய்யும் படாடோபமே அவர்களுக்கு விருப்பமானது.

இதெல்லாம் காரணமாகத்தான் தமிழ்க்கவியின் பெருமை தெரியாது தத்தளித்துக்கொண்டிருக்கிறார்கள் நம்மவர்.

தாங்கள் முத்தொள்ளாயிரத்தை அனுபவித்துத் தான் இலக்கிய அனுபவம். அந்த ஒரு அனுபவத்துக்காக மேல்நாட்டார் தங்களைப் பாராட்டிக் கொண்டே இருப்பார்கள். நம்மவர் எங்கே பாராட்டுகிறார்கள்? தாங்களும் நானும் பாராட்டுகிறோம். எப்படி இருக்கிறது காரியம்.

அன்புள்ள
டி. கே சி.

## கடித எண்-10

முகாம்
திருநெல்வேலி
11-2-48

அருமைப் புதல்வி நீலாவதி அம்மைக்கு,

சென்னையில் வைத்தே அன்பான கடிதம் கிடைத்தது. கம்பர் விழாவைச் சிறப்பாக நடத்த ஏற்பாடு செய்தாகிறது. ரொம்ப சந்தோஷம். நண்பர் கணேசன் வந்துவிடுவார்கள். M. N. S. T. அவர்களோ அருமையாய் நிர்வாகம் செய்வார்கள். தங்கள் ஊக்கமும் உத்ஸாகமும் இருக்கிறது.

தமிழ் நாட்டில் எத்தனையோ ஆண்டு விழாக்கள் நடக்கின்றன. "தமிழ் இலக்கிய விழாக்கள்", 'சைவ சித்தாந்த விழாக்கள்' பலபல இடங்களில் நடக்கின்றன. அனேகமாய் அவைகள் எல்லாம் வெறுங் கூட்டந்தான். தமிழிலும் சைவத்திலும் விஷயங்கள்

அரிய விஷயங்கள் இல்லை என்று சொல்லவில்லை. வேண்டிய மட்டும் இருக்கின்றன. ஆனால் அவைகளை அறிந்து அனுபவித்தவர்கள்தான் இல்லை. அறிந்து அனுபவியாதவர்களே மேடைமேல் ஏறி விளாசுகிறார்கள். அப்படி நடக்கிற விழாவைப் பற்றி என்ன சொல்ல!

ஆனால்க் கம்பர் விழாவோ வேறு. கொஞ்சம் முயன்றால் யாருக்கும் விளங்கக் கூடியதாக எத்தனையோ விஷயங்கள் கிடைக்கும். ஒரு விஷயத்தைப் பற்றிக் கொண்டு பேசினால் போதும். சபையோர் அனுபவித்து விடுவார்கள். ஆகவே விழா என்றால்க் கம்பர் விழாதான். காரைக்குடியில் உண்மையான தமிழ் அன்பர்கள்—ஆடவரும் பெண்டிருமாய் இருக்கிறார்கள். ஆனாலும் ஒன்று, கம்பரை வெறுக்கிறவர்களை வருவித்து அணிவகுத்து நிற்கச் சொல்ல வேண்டாம். தமிழில் நம்பிக்கை உள்ளவர்களை மாத்திரம் அழைத்தால் போதும். அநேக தடவை வெளியேயிருந்து வந்த புலவர்கள் கம்பரை தூஷித்துப் பேசினார்கள் என்பது நமக்கு ஞாபகம் இருக்கிறது. இந்தத் தடவை உண்மையாக நம்பிக்கை கொண்டவர்களை மாத்திரம் வைத்து விழாவை நடத்தலாம். ஒருவர் ஒரு பாடலை கம்பராமாயணத்திலிருந்து எடுத்து சொன்னால் விழாவாய் விடும். இருபது பாட்டுச் சொல்லிக் "கம்பர் அறிவிலி" என்ற முடிவுக்கு வரும்படியாகப் பேசிப் பேசிக் காரியத்தைக் குட்டிச் சுவர் ஆக்கினது போதாதா? கம்பர் ஒரு சாக்கடை என்று சொல்லிவிட்டுப் போனார்கள். அவர்களையும் தமிழ்த் தொண்டர்கள் என்று தானே சொல்ல வேண்டியிருக்கிறது. வேறொருவர் "பாஷா கவி சேகரர்" தமிழ்க் கவியில் உன்னதஸ்தானத்தை அடைந்தவர் என்பது

அந்தப் பட்டத்தின் பொருள். "தமிழைப் படித்துக் காலத்தை வீணாக்கினேன்" என்று சொல்லிவிட்டுப் போனார். பிறகு மாணவர்கள் தமிழுக்கு விரோதமாகக் கிளம்பி விட்டார்கள் என்று சொல்லுவதில் என்ன வியப்பு. எல்லாம் ஆசிரியர்கள் செய்த காரியந்தான்.

நாம் ஏதாவது தமிழைப் பாராட்டுகிறது என்று வந்தால் "எக்ஸாஜரேஷன்" அதாவது மிகைப்படக் கூறல், பொய் என்று தூற்றுகிறார்கள். இப்படிப்பட்ட தமிழ்த் துரோகிகளுக்கு இடம் கொடுத்துக் கொடுத்து தமிழ்க் கஷ்டப் பட்டுவிட்டது. இனி அந்தக் கஷ்டம் வேண்டாம். அதை தைரியமாய் நாம் சொல்ல முன்வர வேணும். பாலும் தண்ணீரும் **சமரசம்** பேசினால் என்ன பிரயோசனம்.

துணைவர் அவர்களிடமிருந்து (பர்மா) நல்ல செய்திகள் வந்து கொண்டிருக்கும் என்று நம்பு கிறேன்.

கைக்குழந்தை (கண்ணன்) ஆரோக்கியமாய் இருக்கும் என்று எண்ணுகிறேன். எல்லோருக்கும் என் அன்பு. தங்கள் கவியார்வத்தை ரொம்ப ரொமபப் பாராட்டுகிறேன்.

டி. கே. சி.

குறிப்பு : (1) நேற்று இரவு குற்றாலம் வந்து சேர்ந்தேன்

(2) மகாத்மாஜீ மறைந்தது காரணமாக உலகமே இருண்டு விட்டது மேல்நாட்டார்—அறிவாளி கள் எல்லாருமே—துயரத்தில் மூழ்கிவிட்டாகள். ஆனால் சென்னைப் பல்கலைக் கழகத்துப் பட்டதாரிகளைப் பற்றி அப்படிச் சொல்ல இயலவில்லை. அவர்களுடைய படிப் பெல்லாம் அறியாமைதான் என்பது வெட்டவெளிச்ச மாகி விட்டது.

**கடித எண்-11**

திருக்குற்றாலம்
தென்காசி
22-5-51

அருமைப்புதல்வி நீலாவதி அம்மைக்கு,

14உ எழுதியனுப்பிய அன்பான கடிதம் கிடைத்தது. வாஸ்தவந்தான். சென்ற ஒன்றரை மாசமாக உடம்பு எனக்குச் சரியாக இல்லை. காய்ச்சல் என்பது இல்லைதான். ஆனால் பலஹீனம் அதிகம் இருந்தாலும் கொஞ்சம் கொஞ்சமாக உடம்பு தேறி வருகிறது. வீட்டிற்குள் நடமாடிக் கொள்ளுகிறேன். சாப்பாடு வாய்க்கு நன்றாகவே இருக்கிறது. தங்கள் அன்பான பிரார்த்தனைக்கும் பயனுண்டு. அந்தப் பேரன்பை நினைத்தாலே உடம்புக்குத் தெம்பு உண்டாகிறது.

எனக்கு அடிக்கடி ஒரு ஆற்றாமை மனசில் தோன்றும். சாவகாசமாக ஒரு நாளோ இரு நாளோ கூடவே இருந்து தமிழ்ப் பாடல்களைத் தாங்கள் அனுபவிக்கும் அழகைப் பார்த்து சந்தோஷிக்கும் சந்தர்ப்பம் இல்லாமல் அல்லவா போகிறது என்ற ஆற்றாமைதான்.

தமிழை அனுபவிக்கத் தங்களுக்குத் தனித்த உள்ளப் பண்பல்லவா இருக்கிறது!

துணைவர், மணிகுமாரி, குழந்தைகள் எல்லாருக்கும் என் அன்பு.

கடிதம் பார்த்தே உடலுக்கு சுகம்.

அன்புடன்,
டி. கே. சிதம்பரநாதன்.

## கடித எண்-12

திருக்குற்ருலம்
தென்காசி
13-11-51

அருமைப் புதல்வி நீலாவதி அம்மைக்கு,

அன்பான கடிதம் கிடைத்தது.

ஏழு மாசமாக எனக்கு உடம்பு சரியாக இல்லை. ஆனாலும் உடம்பு தேறி வந்தது. அதற்கிடையில் இரண்டு மாசத்துக்கு முன் "இன்புளுவென்ஸாக்" காய்ச்சல் வந்தது. அது காரணமாக தினம் தினம் மாலையில் கொஞ்சம் சூடு ஏறியது. உடம்பு மிக்க பலஹீனம் அடைந்து விட்டது. அதற்கு வேண்டிய மருந்துகளைக் குத்தினார்கள். ஒரு வாரமாகக் காய்ச்சல இல்லைதான். உடம்பும் மெள்ளத் தேறி வருகிறது. சீக்கிரத்தில் சௌகரியம் உண்டாகும் என்று எண்ணுகிறேன்.

தங்கள் மனம் எவ்வளவோ பதைத்து விட்டது. தங்களைப் பார்க்க எனக்கும் ஆத்திரந்தான். எப்படியோ தங்கள் உள்ளம் வேண்டாத சலனத்துக்கு உள்ளாகி இருக்கிறது. மனசை ஒரு தடவை திடப்படுத்திக் கொண்டு அருவியில் ஸ்நானம் செய்துவிட வேண்டியதுதான். மனசு சலனம் இன்மையைக் கட்டாயம் அடைய வேண்டும்.

தங்கள் அன்பான கடிதம் உள்ளத்துக்கு மாத்திரம் அல்ல உடலுக்கே பயனை அளிக்கிறது. அன்பு சாதிக்காத காரியம் என்ன இருக்கிறது இந்த உலகில்.

துணைவர், மணி குமாரி மற்றும் குழந்தைகள் எல்லாருக்கும் என் அன்பு.

டி. கே. சிதம்பரநாதன்.

## கடித எண்-13

திருக்குற்ருலம்
தென்காசி
**10-1-52**

அருமைப் புதல்வி நீலாவதி அம்மைக்கு,

7உ கடிதம் கிடைத்தது. முந்தின கடிதமும் உரிய நேரத்தில்க் கிடைத்தது. நீங்கள் குற்ருலம் வருவீர்கள் என்று எதிர்பார்த்துக்கொண்டிருந்ததால் பதில் எழுதவில்லே. விலாசமும் நிச்சயமாய்த் தெரியவில்லே.

வீடு மாற்றி விட்டீர்கள். சௌகரியமான வீடுதான் என்று எண்ணுகிறேன்.

என்னுடைய காரியதரிசி பலராம் ராஜா சில நாட்களுக்கு முன் சென்னைக்கு வந்திருந்தார், தங்களைப் பார்த்து அழைக்க வீட்டுக்கு வந்தார்—அதாவது ஜனவரி மாதம் 28உ திருக்குற்ருலத்தில் என்னுடைய பேத்தி தீப தங்கம்மாளுக்கு நடக்கும் கல்யாணத்துக்கு தங்களையும் துணைவரையும் அழைக்கத்தான். ஆனல் பார்க்க முடியவில்லே. குற்றம் இல்லே.

அழைப்பிதழ் முறைப்படி வரும். எல்லாருமேவந்து கல்யாணத்தைச் சிறப்பிக்க வேணும்.

அன்புடன்
டி. கே. சிதம்பரநாதன்.

கடித எண்-14

திருக்குற்ருலம்
தென்காசி
2-3-52

அருமைப் புதல்வி நீலாவதி அம்மைக்கு,

பிப்பிரவரி 28உ அனுப்பிய அழகான அன்பான கடிதம் கிடைத்தது. திருத்த முறைகளில் ஈடுபட்ட உங்கள் உள்ளம், குற்ருலத்தில் கண்ட முறைகளை ரொம்ப ரொம்ப அனுபவிக்கிறது. வாஸ்தவந்தான். பெண்கள் மணவறையைச் சுற்றிப் பெண்சுவர் எடுத்து (மண்சுவர்தான்) ஒன்றையும் பார்க்க ஒட்டாமல் செய்கிற காரியம் நமக்குத் தெரிந்ததுதானே. பெரிய இடத்துப் பெண்கள் உட்கார மாட்டார்கள். (கண்ணுடியிற் செய்த உருவங்கள் அல்ல) மாப்பிள்ளை பெண்ணை மறைத்துவிட அவர்களுக்கு ஏதோ உரிமை இருப்பதாகவும் அதை விட்டுக்கொடுக்கிறது என்னத்திற்கு என்ற ஹோதாவில் ஒரே நிலையில், அதாவது மறைக்கிற நிலையில் நிற்பார்கள். அததகைய தாய்மார்கள் இங்கும் உண்டுதான். ஆனுலும் நான் கேட்டுக்கொண்டதற்காக உட்கார இணங்கினுர்கள். அப்படி இணங்கி உட்கார்ந்திருந்தது வெகு அழகாகவும் இருந்தது. மாப்பிள்ளை பெண் திருப்பூட்டு எல்லாவற்றையும் எல்லாரும் கண்குளிரப் பாாக்கும்படியாகவும் இருந்தது. அந்தத் தாய்மார்களைக் காலில விழுந்து கும்பிடலாம்.

தீப. தங்கம்மாளது கலியாணத்தை ஒட்டி அன்பர்கள் பலரைப் பார்க்க முடிந்தது. அன்பு நிறைந்த

நண்பர்கள், தாய்மார்கள் இவர்களது ஜனசங்கையை எடுத்தாய் விட்டது. எல்லாரையும் பார்த்ததில் உங்களுக்கு ஆனந்தம். அவர்களோடிருந்து கொஞ்சம் தமிழ்ப் பாடல்களையும் கேட்டுக் கொண்டீர்கள். மிக்க திருப்தி.

நான் அனுபவிக்கிற பாடலை இன்னொருவர் இந்த உலகத்தில் அனுபவிக்கிறார்கள் என்று தெரிந்த மாத்திரத்திலேயே உடம்புக்கு சௌகரியம் ஏற்படுகிறது.

ஆகையால் நீங்கள் எல்லாரும் பாடல்களைக் கேட்டு, எனக்கு வைத்தியம் செய்தீர்கள். ஹிதம் கண்டது.

என்னுடைய சுகத்துக்காக நீங்கள் உள்ளூரப் பிரார்த்திக்கிறீர்கள். பிரார்த்தனை வீண் போகாது. மிக்க சந்தோஷம். துணைவருக்கு என் அன்பைச் சொல்ல வேண்டும்.

மணி, ஜவகர், ராமு, கண்ணன் எல்லாரும் தாய் வழிச் சொத்து பாத்தியம் கொண்டாடக் கூடியவர்கள். தங்கள் அன்பான உள்ளத்தை அவர்களும் பங்கு போட்டுக்கொண்டு என்னை வாழ்த்துகிறார்கள். மிக்க. நன்றி.

டி. கே. சிதம்பரநாதன்

கடித எண்-15

திருக்குற்றாலம்
தென்காசி
19-6-52

அருமைப் புதல்வி நீலாவதி அம்மைக்கு,

அன்பான அழகான கடிதம் கிடைத்தது. சௌகரியமான வீடு கிடைத்தது பற்றி மிக்க சந்தோஷம். இப்போதுள்ள யுகத்தில் எதுவும் கிடைக்கும். வீடு தான் கிடைக்க மாட்டேன் என்கிறது.

மாடிதானே. ரொம்ப நல்லது. சந்தடி குறைவாக இருக்கும்.

மாடியில் ஹால் பெரிதாக இருக்கிறதென்று தெரிந்தவுடன் இலக்கியப் பண்ணையை நடத்துவமா என்றல்லவா படுகிறது தங்களுக்கு! வாஸ்தவம்; பெண்களுக்கு இலக்கியம் வாழ்க்கையோடு ஒட்டிக் கொள்ளுகிறது. அதனால் அவ்வளவு தூரம் அனுபவிக்கிறார்கள் பாடல்களை. அநேகமாய் ஆடவர்களுக்கும் பாடலெல்லாம் தொப்பியைப் போட்டுக் கழற்றி வைக்கிற காரியந்தான். அதனால்தானே கம்பர் அநாம தேயமாய்க் கிடக்கிறார். பண்டித உலகம் ஆடவர் உலகமாய்த்தானே அமைந்து கிடக்கிறது.

தங்கத்தின் கலியாணம் ஒழுங்காய் அமைந்து நடந்த விஷயம் தங்கள் மனசை எப்படிக் கவர்ந்திருக்கிறது. தங்களைப் போலவே ருக்மணி அம்மாளும் (மிஸஸ் கல்கி) அபாரமாய் அனுபவித்துப் பாராட்டு

கிறார்கள். ஒழுங்கான அமைப்புக்கும் பெண்டுகள் கண்ணுக்கும் அவ்வளவு உறவல்லவா ஏற்பட்டிருக் கிறது!

கம்பரது ராமாயணப் பாடல் முடிந்தது பற்றி ஒரு வகையான ஆற்றாமை. வாரக் கட்டளை மாதிரி வந்து கொண்டிருந்த பிரசாதம் நின்று விட்டதே என்ற ஆற்றாமைதான். ஆனால் அச்சில் இருக்கத்தானே செய்கின்றன. சீக்கிரத்தில் புஸ்தக ரூபமாகவும் வந்து விடும். பிறகு பிரம்மாவிடம் மனுப்போட வேண்டியதுதான்—இத்தனைப் பாடல்கள் அல்லவா இருக்கின்றன. அனுபவிக்க இன்னும் மூன்று ஜென் மங்கள் அருள் செய்ய வேண்டும் என்பதாக.

கம்பர் தரும் காட்சிக்குப் பதிலாக இப்போது "தமிழ்க் களஞ்சியம்" வந்து கொண்டிருக்கிறது. கல்கி யில் தமிழ்ப் பாஷையின் வனப்பெல்லாம் பட்டம் பட்டமாகத் தெரிய வரும்.

தமிழ்ப் பாடல்களை தங்களிடம் சொல்லவேண்டும்! என்று ரொம்ப ரொம்ப ஆசை. ஆனால் 400 மைல் அல்லவா குறுக்கே கிடக்கிறது.

சில தமிழ்ப் பண்டிதர்களிடம் சொல்ல நேர்ந்தது. எல்லாம் சொல்லி ஆனபிறகு, "எல்லாம் தெரிந்து விட்டது; புளி இலை ஆலிலை போல் இருக்கும். சரி சரி" என்பார்கள்.

எனக்கு உடம்பு எவ்வளவோ சௌகரியந்தான். காலில்தான் பலஹீனம். வீட்டுக்குள் நடமாடிக் கொள் கிறேன்.

துணைவர், மணி, ஜவஹர் மற்றும் எல்லாரும் சௌக்கியந்தானே.

எவ்வளவோ வேலையும் சிரமமும் இருந்தும் தங்கத்தின் கலியாணத்துக்கு வந்தீர்களே. மிக்க சந்தோஷமான நினைவுக்கு விஷயம்.

டி. கே. சிதம்பரநாதன்.

கடிதம் எண்-16

திருக்குற்றலம்
தென்காசி
1-8-52

அன்பான புதல்வி நீலாவதி அம்மைக்கு,

21-3-52 அன்று அனுப்பிய அழகான கடிதம் கிடைத்தது. படிக்கப் படிக்க ரஸமாய் இருக்கிறது. எத்தனையோ அரிய விஷயங்களை அனுபவித்து எழுதுகிறீர்கள்.

உலகத்தில் அனுபவிக்க எத்தனை எத்தனையோ பொருள்கள். அவைகளை அறிய பிள்ளைகளின் பைக்குள் இன்ன இன்ன இருக்கின்றன என்று பார்த்தால்ப் போதும். வாஸ்தவந்தான். அவைகளை அனுபவியாமலத் தடுப்பதற்குக் கோடி கோடியாக செலவு செய்து யுனிவெர்சிட்டிகள் பள்ளிக் கூடங்கள் பாடப்புஸ்தகங்கள் எல்லாவற்றுக்கும் மேலாக உபாத்தியாயர்கள் என்று அமைத்திருக்கிறோம். குதிரை, கழுதை, நாய், ஓநாய் ஒரு பிராணியும் இந்தப் பைத்தியக்கார காரியத்தைச் செய்யாது. மனுஷன் தனிப் பிறவி அல்லவா. அவனுக்குத்தான் அந்த உரிமை உண்டு.

பெண்டுகளை இலக்கியப்பித்துப் பிடித்து ஆட்டு கிறது, என்று அழகாய் உண்மையைச் சொல்லுகிறீர்கள். தமிழ்க் களஞ்சியத்தை எப்படி அனுபவிக்கிறீர்கள்! மிக்க சந்தோஷம்.

ஒரு கலியாண வைபவத்தைப் பூரணமாய் அனுபவிக்க எங்களுக்கு இரண்டு கண்கள் வேணும். அதாவது பெண்டுகளுடைய இரண்டு கண்கள். மிஸஸ் கல்கி தங்கத்தின் கலியாணத்தை அனுபவித்தது ஒரு இதிகாசம். சென்னை மத்திய சிறையில் இருக்கிற கைதிப் பெண்களுக்கு அரிய தொண்டு செய்து வருகிறீர்கள். தங்கள் இதயம் அவர்களோடு ஒட்டிவிடும். அவ்வளவுதானே வேண்டும். அவர்களுடைய இதயம் தங்களோடு ஒட்டிவிடும். அவர்களுடைய வாழ்க்கைக்கு ஒளி உண்டாயிவிடும்.

ஆவணியில் இலக்கியப் பண்ணையை ஆரம்பிக்கப் போகிறீர்கள். தமிழ் தங்களைச் சும்மா இருக்க ஒட்டவா செய்யும். மிக்க திருப்தி. ஆதி காலத்தவள் கலையை எல்லாம் பெண்ணிடத்தில் தானே ஒப்பித்தாள். விஷயம் தெரியாமலா சரஸ்வதியைக் கலைக்கு அதிதேவதை என்றார்?

இனி என்னைப் பற்றிக் கொஞ்சம் விஷயம்: சென்னை டாக்டர்கள் (பிரமுகர்கள்) இங்கு வந்து என்னைச் சோதித்துப் பார்த்தார்கள். நெஞ்சில்க் கோளாறு இருக்கலாம். "Xரே" போட்டோ எடுத்துப் பார்க்க வேண்டும் என்று சொன்னார்கள். நேற்று எடுத்துப் பார்த்ததும் ஒரு கோளாறும் இல்லையென்று படம் காட்டி விட்டது. இதயம் வெகு ஜோராய் அடிக்கிறது என்றும் டாக்டர் சொல்லி விட்டார். ஆகாரத்தை அதிகப் படுத்த வேண்டும் என்று சொல்லுகிறார்.

வயிற்றைக் கேட்டுச் செய்கிற காரியமாய் இருக்கிறது அது! ஏதோ முயலுகிறேன், சாப்பாட்டை அதிகப் படுத்த.

துணைவர் மணி ஜவஹர் மற்றும் எல்லாருக்கும் என் அன்பு.

டி.கே. சிதம்பரநாதன்.

கடித எண்-17

திருக்குற்றாலம்
தென்காசி
25-11-52

அருமைப் புதல்வி நீலாவதி அம்மைக்கு,

அழகான கடிதம் (15உ) உரிய காலத்தில் அல்ல இன்று கிடைத்தது. உங்கள் கடிதம் வந்தால் மனசுக்கு உத்ஸாகம் சாந்தி எல்லாம் உண்டாய் விடும்

21-7-52 அன்று அதாவது நாலு மாசத்துக்கு முன் நீங்கள் எழுதிய கடிதம் கடிதக்கட்டோடு இருப்தால் அடிக்கடி கண்ணுக்குத் தென்படும். தென்படும் போதெல்லாம் எப்படியும் உங்களுக்கு ஒரு கடிதம் இன்று எழுதிவிட வேண்டும் என்று தீர்மானம் பண்ணிக் கொள்ளுவேன். ஆனால் ஒவ்வொரு நாளும் எப்படியோ கடிதம் எழுதாமல் அஸ்தமித்துப் போய் விடும்.

இன்று காலையிலும் பழைய கடிதம் தென்பட்டது. பழைய தீர்மானமும் பண்ணினேன். சிறிது நேரத்தில்த்

தபால்காரன் புதுக் கடிதத்தைக் கொண்டு வந்து கொடுத்தான். மிக்க சந்தோஷமாய்ப் போய்விட்டது. தீர்மானம் நிறைவேறும் காலம வந்து விட்டதென்று தனியான திருப்தி. கடிதம் எழுத ஆரம்பித்து விட்டேன் பார்த்தீர்களா.

கடிதம் எழுதுவதில் தங்கள் அன்பும் அக்கரையும் எவ்வளவாக இருக்கின்றன என்பது உங்கள் வார்த்தையில் எவ்வளவு அழகாகத் துலங்கு கிறது! எனக்கு எழுதும்போது அவசரக் கோலத்தில் அளளித் தெளிக்க முடியாதல்லவா என்று எழுதுகிறீர் கள். ரொம்ப உண்மை. உங்கள் விஷயத்தில். நன்ருய் உணருகிறேன் நான்.

தமிழ்க் களஞ்சியத்தை அழகாய் அனுபவிககிறீர் கள். அந்த அநுபவத்தை ஒட்டிக் கவிதான் மனசில் பதியும் என்று சொல்லி விளக்கம் கொடுத்த முறை யில்க் குழந்தைகள் சதா பாடல்களைப் பாடிக்கொண்டே இருக்கின்றன என்று சொல்லுகிறீர்கள்.

கவி சம்பந்தமாகக் குழந்தைகளைச் சுட்டிக் காட்டி விளக்கம் கொடுத்தவர்கள், எனக்குத் தெரிந்த மட்டில் யாரும் இல்லை. அபூர்வமான விமரிசனம். நம்ம வருக்குத் தெரிய வேண்டிய விஷயம். இது தெரியாத காரணத்தினலேயே நம்மவர் மரத்திலும் பாறையிலும் முட்டி முட்டிக் கஷ்டப்படுகிருர்கள். தமிழே அப்படித் தான் என்கிருர்கள. உண்மையில்த் தமிழைப் போல் எளிமையோடு கவிக்கு வாய்த்த பாஷை உலகத்தில் வேறு கிடையாது.

உங்கள் விமர்சனத்தை ஆசிரியர்களுக்குச் சொல்லுவோம். ஏறுகிறதா என்று பார்ப்போம்.

சமய உண்மை தத்துவ உண்மை எல்லாம் பெருந்தேவனர் பாடிய மூன்று கவிக்குள் அடங்கி

விட்டன. நீங்கள் அதை நன்ருய்ப் படித்து உணர்ந்து அனுபவித்து விட்டீர்கள். எவ்வளவோ திருப்தி.

இரண்டு வாரமாகக் களஞ்சியம் வரவில்லையே என்று ஆற்ருமைப் படுகிறீர்கள். கவி அனுபவம் அப்படி இருக்கிறது உங்களிடத்தில். இடம் இல்லாத தால் களஞ்சியத்தைத் தள்ளிப் போட்டு இருக்கிருர்கள் என்று எண்ணுகிறேன். தமிழ்ப் பாடலின் வெறி கள்ளைச் சேர்ந்தது போலத்தான் இருக்கிறது.

**V. N.** குமாரசாமி (யோகாஸன ஆசிரியர்) சொல்லு வது ரொம்பவும் உண்மை. நம்முடைய தேகத்துக்குள் எத்தனை எத்தனையோ ஊசி மருந்துகள் இருக்கின்றன. அளவு பார்த்து சதா குத்திக் கொண்டுதான் இருக் கின்றன. அத்தனை காரியங்களையும் சாதித்துக் கொண்டிருப்பது டாக்டர். கடவுள்தான். வேறு யாரும் இல்லை.

அன்னை வயிற்றில் அருத்தி வளர்த்தவள் தாங்கள் குறிப்பிடுகிற டாக்டர்.

எனக்கு உடம்பு சுமாராக இருக்கிறது. வைத்தி யமும் நடக்கிறது. ஏதோ வீட்டுக்குள் நடமாடிக் கொள்ளுகிறேன். கொம்புத் தேனுக்கு ஏன் ஆசைப்பட வேண்டும் முடவன்.

கால தேவதை உங்களையும் குழந்தைகளையும் ரொம்ப ரொம்பக் கஷ்டப் படுத்தியிருக்கிறது. கீழே சருக்கி விழுகிறதாம். அது குணமாக ஒரு மாசம் ஆகிறதாம். இதென்ன காரியம். சரியானபடி வைத்தியம் செய்து கொள்ள வேண்டும். மனசுக்கு மிக்க கவலையை உண்டு பண்ணுகிறது. குழந்தைகள்

சௌக்கியம் அவ்வளவுக்கு திருப்திதான். எல்லாருக்கும் என் அன்பு.

டி. கே. சிதம்பரநாதன்

குறிப்பு : துணைவருக்கு என் அன்பைச் சொல்ல வேண்டும். உடம்பு ஆரோக்கியந்தானே.

டி. கே. சி.

கடித எண் -18

திருக்குற்றாலம்
தென்காசி
30-3-53

அன்பான புதல்வி நீலாவதி அம்மைக்கு :

கடிதம் கிடைத்தது.

கடிதம் அல்ல. அபூர்வமான விமரிசனம்.

பொதுவாக விமரிசனம் என்றாலே தலைவலிதான். மேல்நாட்டு நிபுணர்களே சொல்லுகிற காரியம். ஆனாலும் பொழுதுபோகாமல் விமரிசனங்கள் எழுதிக் கொண்டே இருப்பார்கள். மக்களும் பணம் கொடுத்து வாங்கி வாசித்துத் தொலைப்பார்கள். தலைகால் புரியாது. சாதாரண மக்கள் பாடு இது என்றால், பள்ளிக்கூடத்து மாணவர்களை விட்டுவைப்பார்களா? பாடமாக வைக்கிறது, ஆசிரியர்கள் விஷயம் புரியாமலே வார்த்தைச் சிலம்பம் ஆடிவிட்டுச் சம்பளத்தைப் பையில் போட்டுக் கொண்டு வீடுபோய்ச் சேருவார்

கள். இன்றைக்கும் நம்முடைய காலேஜ்களில் நடக்கிற காரியம் இதுதான்.

எல்லாருக்கும் இது வெறும் விருதாக் காரியம் என்று தெரியத்தான் செய்யும். ஆனாலும் ஒழிக்க முடியாத காரியமாய்ப் போய்விட்டது. மாணவர்கள், முட்டாள்களாக ஆகிறார்கள். அவர்களைச் சீர்திருத் தவும் முடியாது.

ஆனால் உங்கள் விமரிசனம உண்மையான கலை உணர்ச்சி வேகத்திலிருந்து உண்டானது. பாண்டியன் கலியாணம் செய்து கொடுத்த மகளோடு அப்படியே ஒட்டிக் கொண்டது உங்கள் துய்ய உள்ளம். பெண்ணின் கடமை எவ்வளவு பெரிய காரியம் என் பதை நீங்கள் ஆழ்ந்து உணருகிறீர்கள். அப்படி உணர்ச்சி நிறைந்த உள்ளத்திலிருந்து அற்புதமான தத்துவங்கள் பிறக்கின்றன. தத்துவங்களை அழகான தமிழில் எடுத்து விளக்குகிறீர்கள். ஆடவருக்குக் கூட விளங்கி விடுகிறது!

முத்தொள்ளாயிரப் பாடலிலுள்ள ரஸமான உண்மையும் நன்ருய்ப் புலனுகிறது உங்களுக்கு. தமிழ் ஆசிரியர்களுக்கு இது ஒன்றும் விளங்காது. அவர்கள் கருத்தமைக்குக் கீழே போகிறதில்லையே. உள்ளம் உணாச்சி உண்மை எல்லாம் ஏதோ கட்டிச் சொல்லுகிற காரியங்கள்தான். பிறகு தமிழேது உண்மையேது உண்மை விளக்கம் ஏது.

உங்கள் அழகான கடிதத்துக்கு நகல் எடுத்துக் கொண்டு தூத்துக்குடி சப்ஜட்ஜாக இருக்கிற மகாராஜ பிள்ளை அவர்களுக்கு மூலத்தை அனுப்பியிருக்கிறேன். ரொம்ப ரொம்ப அனுபவிப்பார்கள் அவர்கள்.

அவர்கள் தமைக்கார் வேலம்மாளுக்கு, கடிதத்தை வாசிக்கக் கேட்டுவிட்டு, ஒரே வியப்புதான். ஒரே ஆனர்தந்தான். தாயுள்ளத்தைத் தாயுள்ளம் அறி வதில்க் கஷ்டமில்லேதான். மற்றவை பின்பு. அடிக்கடி இப்படி அனுபவத்தை எழுத வேணும். மிக்க அன்புடன்

டி. கே. சிதம்பரநாதன்

**கடித எண்-19**

திருக்குற்றாலம்
தென்காசி
24-9-53

அன்பான நிலாவதி அம்மைக்கு,

3-9-53 எழுதிய கடிதம் கிடைத்தது. உடனே பதில் எழுத முடியவில்லே. வருந்துகிறேன்.

அன்போடு எழும் எதுவும் இநயத்துடிப்போடு தான் எழும். கூடிய சிக்கிரம் அந்தத் துடிப்பைத் தணிக்க வேண்டும். அப்படிச் செய்யாதது பிசகுதான்.

கல்கியில் எழுத்தாளர்களும் விளம்பரக்காரர்களும் பக்கங்களே கொள்ளே யிடுகிறதாகத் தெரிகிறது. அதனுல் "தமிழ்க் களஞ்சிய'த்துக்கு இடம் கிடைப் பது சில வேளே அரிதாய்ப் போய் விடுகிறது. அது இருக்கட்டும் அப்படி.

சபையைப் பற்றியும் பேச்சைப் பற்றியும் பாடிய குறளேயும் விளக்கத்தையும் ரொம்ப ரொம்ப அனுபவித்

திருக்கிறீர்கள் நீங்கள். வாழ்க்கையில் கண்ட காரியங் தானே அது. அதனால் அத்தனை ரஸமாய் இருக்கிறது.

"உண்மை என்றைக்கும் உண்மைதான்" என்று அழகாய் எழுதியிருக்கிறீர்கள்.

துணைவர் குழந்தைகள் எல்லாரும் மத்தியில் உடல் நலம் இல்லாதிருந்து கஷ்டப்பட்டதாக எழுதி யிருக்கிறீர்கள். இப்போது பூரண சௌக்கியத்தோடு இருப்பார்கள். எல்லோருக்கும் என் அன்பு.

என்னுடைய உடம்பு சுமாராய்த் தேறி வருகிறது. ஆனாலும் ஒரு காலில் உள்ள பிடிப்பு காரணமாக நெடு நேரம் உட்கார்ந்திருக்க முடிகிறதில்லை. நீண்ட கடிதங் கள் எழுதுவதும் கொஞ்சம் கஷ்டம்.

உங்களுக்கு உடம்பு சரியாய் இருக்கிறதல்லவா? நன்ருய்ப் பார்த்துக்கொள்ள வேண்டும்.

மிக்க அன்புடன்
டி. கே. சிதம்பரநாதன்

**கடித எண்-20**

திருக்குற்ருலம்
தென்காசி

**14-10-53**

அன்பான நீலாவதி அம்மைக்கு,

வருகிற அக்டோபர் மாசம் 31வ. மாலை 4 மணிக்கு ராஜாஜி குற்ருலம் வந்து என்னுடைய "கம்பர் தரும்

ராமாயணம்'' முதல் பாகத்தை அரங்கேற்றுகிறார்கள். விழாவுக்கு மூல காரணம் கல்கிதான். செட்டிநாட்டு ராஜா அவர்கள், K.V. AL.M. ராம அவர்கள், P.V. குழந்தையன் செட்டியார் அவர்கள் எல்லோருமாக நடத்துகிற காரியம் விழா. இத்தனை அன்பர்களையும் இப்படிக் கூட்டுவிப்பது என்னுடைய பலஹீனமும் யோகமும் சேர்ந்துதான. அவர்களுடைய அன்பையும் கருணையையும் எப்படி எடுத்துச் சொல்லுவது என்பது தெரியவில்லை.

விழாவில்ப் பேசுபவர் சுமார் 8 பேர். அவர்களில் நீங்கள் ஒருவர். முன் கூட்டியே நீங்கள், துணைவர் எல்லாரும் வந்துவிட வேண்டும்.

அக்டோபர் 31உ முதல்ப் பாகம்—''பால காண்டம் அயோத்தியா காண்டம்'' வெளியாகிறது. இரண்டு மாசத்தில் முழுதுமே வெளியாய்விடும். மொத்தம் மூன்று புஸ்தகம்.

ஏதோ கஷ்டமான காரியத்தைத்தான் சாதித்திருக்கிறேன். தமிழ் உலகம் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். இறைவன் அருள்தான் அதற்கு வேண்டியது.

அன்புடன்

டி. கே. சிதம்பரநாதன்

குறிப்பு : குழந்தைகள் எல்லாரும் சுகந்தானே.

எனக்கு உடம்பு பலஹீனந்தான. மெள்ளத் தேறி வருகிறது. தேறினமட்டும லாபம என்று கணக்கிட்டுக் கொள்ள வேண்டியது.

டி. கே. சி.

தமிழ்ப் பண்பாடு விளங்கிய டி. கே. சி.

நினைவு நாள் கூட்டத்தில்

# திருமதி நீலாவதி உரை

சென்னை, மார்ச். 4—

கம்பர் கழக ஆதரவில் நடைபெற்ற இந்நினைவு நாள் கூட்டத்திற்கு முதன் மந்திரி ஸ்ரீ ஸி. ராஜ கோபாலாச்சாரியார் தலைமை தாங்கினார். திருப்புகழ் மணி டி. எம். கிருஷ்ணசாமி அய்யர், கே. பாலசுப்பிர மணிய அய்யர், செட்டி நாட்டு ராஜா சர் எம். ஏ. முத்தையா செட்டியார், சபாநாயகர் ஜே. சிவசண்முகம் பிள்ளை, ரா.பி. சேதுப்பிள்ளை, நிதி மந்திரி சி. சுப்பிர மணியம், எம். பி. சோமசுந்தரம், பிரதம நீதிபதி பி. வி. ராஜமன்னார், ம.பொ. சிவஞானம், வி. எஸ். தியாகராஜ முதலியார், கல்கி. ரா. கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் உரை ஆற்றினார்கள். திருமதி நீலாவதி ஆற்றிய உரை:— அன்பு, அன்பு என்று கதறினார். கண்ணில். நீர் ததும்ப துக்கம் தொண்டையை அடைக்க பேசிய திருமதி நீலாவதி அம்மையார். டி. கே. சி. தமக்கு இலக்கியத் தந்தையாக இலங்கி அறிவூட்டியதாயும், சங்க காலப் பாட்டுக்களில் இயற்கைத் தன்மையை அவர் காட்டினார் என்றும், பண்பாடு அன்பு வேண்டுமென்று அவர் கதறி வந்தார் என்றும் கூறினார். கவிதை நயங்களைப் பிறர் உள்ளத்தில் பதிய வைத்தார் என்றும், அவர் விட்டுச் சென்ற காரியத்தைப் பூர்த்தி செய்வது சிரமம் என்றும் கூறினார்.

தலைவர் ராஜாஜி முடிவுரை கூறும் போது ஸ்ரீமதி நீலாவதி பேசும்போது தான் இது டி. கே. சி. பற்றிய கூட்டம் என்பது எனக்கு நன்ருக, விளங்கியது. டி. கே. சி. யைக் கண்டு கலந்து தமிழையும் அன்பை யும் அனுபவித்தவர்கள் கூடிஞல் பெரும் கூட்ட மாகும். ஆனால் அவர்கள் அங்கு பேச முடியாத நிலையி லிருப்பார்கள. நீலாவதி அம்மையார் மாதிரி துக்கம் காரணமாகப் பேச முடியாமல் கஷ்டப்படுவார்கள். அதற்குக் காரணமென்ன? டி. கே. சி. விசேஷ ஆத்மா என்று சொன்னேனே அதுதான் காரணம்.

நன்றி: சுதேசமித்திரன்,
சென்னை 4-3-1954





தன் கடமை
எது என்பதை
உணர்ந்தவர்
அறிவாளி !

கடமை எப்படிச்
செய்யவேண்டும்
என்பதை
அறிந்தவர்
திறமைசாலி !

கடமையைச்
செய்பவர்
மிக மிக நல்லவர் !

1913 - 1982

Eskay Art Printers, Madras-5.
P. Phone : 841478